உ
சிவமயம்

ஸ்ரீ அகோர சிவாசாரியர் அருளிய
சிவாலய நித்திய பூஜாவிதி
என்னும்

# ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜாவிதி

(தமிழ் மொழிபெயர்ப்பு)

இரண்டாம் பதிப்பு



மொழிபெயர்ப்பாசிரியர் :
வியாகரண சிரோமணி
**K. M. சுப்பிரமணிய சாஸ்திரிகள்**

பரிசோதித்தவர்கள் :
திரு. பொ. முத்தைய பிள்ளை அவர்கள்
சிவஸ்ரீ. தத்புருஷ தேசிகர் அவர்கள்

பொருளுதவியாளர் :
திரு. மு. ராம. சுப. சுவாமிநாதன் செட்டியார் அவர்கள்

வெளியீடு :
சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம்
தேவகோட்டை

உ
சிவமயம்

ஸ்ரீ அகோர சிவாசாரியர் அருளிய
சிவாலய நித்திய பூஜாவிதி
என்னும்

# ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜாவிதி

(தமிழ் மொழிபெயர்ப்பு)

இரண்டாம் பதிப்பு






*மொழிபெயர்ப்பாசிரியர் :*
வியாகரண சிரோமணி
**K. M. சுப்பிரமணிய சாஸ்திரிகள்**

*பரிசோதித்தவர்கள் :*
திரு. பொ. முத்தைய பிள்ளை அவர்கள்
சிவஸ்ரீ. தத்புருஷ தேசிகர் அவர்கள்

*பொருளுதவியாளர் :*
திரு. மு. ராம. சுப. சுவாமிநாதன் செட்டியார் அவர்கள்

*வெளியீடு :*
சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம்
தேவகோட்டை

27-5

உ
சிவமயம்

# முதற்பதிப்பின் முகவுரை

உலகத்தில் ஆன்மாக்களுக்குக் கிடைக்கும் பிறவிகளுள் கடவுள் உண்டென்று நினைந்து அக்கடவுளைத் தியானிக்கும் மனமும் கடவுளுடைய புகழைச் சொல்லும் வாக்கும், கடவுளைப் பூசிக்கும் கையும் மானுடப் பிறவிக்கேயன்றி மிருகம் முதலிய ஏனைய பிறவிகட்குக் கிடையா. யானை, நாரை, கரிக்குருவி முதலியனவும் கடவுள் வழிபாடு செய்திருக்கின்றனவே யெனின், அது சிவபெருமானது அருட்டிருவிளையாடலாகுமேயன்றி விதியாகாது. ஆகையால் மானுடப்பிறவியே மிக மேலானது. இம்மானுடப்பிறவியை இறைவன் நமக்குத் தந்தது, மனவாக்குக்காயங்களால் அவனை வழிபட்டு நமது பிறவித் துன்பத்திலிருந்து நாம் நீங்குதற்பொருட்டேயாம். இக்கருத்துப்பற்றியே,

> மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
> ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றோ
> வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
> ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ.

என ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்வாராயினர். (சிவஞானசித்தியார். 2 ஆம் சூத்திரம் செய்யுள் கஉ)

ஆகையால் மானுடப் பிறவியைப்பெற்ற ஒவ்வொருவரும் சிவபெருமானை மனத்தால் நினைந்தும், வாக்கால் துதித்தும், கையால் நல்ல மலர்களைக்கொண்டு அர்ச்சித்தும் வழிபடக் கடவர்கள். சிவவழிபாடு செய்யாத மானுடர் மிருகத்தோடொப்பர்.

சிவவழிபாடு ஆத்மார்த்தம் பரார்த்தமென இருதிறப்படும். ஆத்மார்த்தமாவது தனக்கு அருளுதற்பொருட்டு வழிபடுவது. இதனை நன்கு விளக்கும் சிவார்ச்சனுசந்திரிகை நாகரத்திலும், தமிழிலும் முன்னரே நம்முடைய சங்கத்திலிருந்து அச்சிடப்பெற்றிருக்கின்றது. பரார்த்தமாவது தனக்கும் பிறருக்கும் அருளுதற்பொருட்டு வழிபடுவது. ஆத்மார்த்த வழிபாட்டிற்கு விசேட தீக்ஷை பெற்ற அனைவரும் அதிகாரிகளாவர். பரார்த்தவழிபாட்டிற்கு ஆசாரியாபி

ஷேகம் வரை பெற்ற ஆதிசைவ சிவாசாரியர்கள் மாத்திரம் அதிகாரிகளாவர்.

பரார்த்த வழிபாடு செய்யுமுறையைத் தொகுத்து ஸ்ரீ அகோரசிவாசாரியர் ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜாவிதி என்னும் பெயருடன் ஒரு நூல் இயற்றிவைத்தனர். அந்நூல் அச்சிற்கு வராமலிருந்தமையால் கிடைத்த சில பிரதிகளைக் கொண்டு கூடியவாறு சோதனை செய்து சுருக்கமாயிருந்தவற்றை விரித்து அச்சிட்டிருக்கின்றோம். இந்நூல் பூர்வபாகம், உத்தரபாகமென இரு பிரிவினை உடையது. அவற்றுள்,

## பூர்வபாகம்

ஆசாரியர் சூரியனுதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னர் நித்திரையை விட்டெழுந்து சிவபெருமானையும் தன்னுடைய குருவையும் தியானித்தல், வெளியேசென்று மலசலங் கழித்தல், சௌசஞ்செய்தல், தந்தசுத்தி செய்தல், ஸ்நானம் தர்ப்பணம் சந்தியாவந்தனஞ் செய்தல் முதலியவற்றை நன்குவிளக்கும்.

## உத்தரபாகம்

இது ஆலயத்திற் செய்யப்படும் பூஜை முதலியவற்றை விரித்துக்கூறும். அவை வருமாறு:—

தன்னுடைய நித்திய அனுட்டானங்களை முடித்துக் கொண்ட ஆசாரியர், சூரியனுதிக்க மூன்றேமுக்கால் நாழிகையிருக்கும்பொழுதே சிவாலயத்திற்குச் சென்று கரநியாசம், பிராணுயாமம், பூதசுத்தி முதலியனவும் புண்யாகமும்செய்து, க்ஷேத்திரபாலரைப் பூசித்து, முத்திராதண்டத்தைப்பெற்று, சயநாலயத்திற்குச்சென்று கதவைத்திறந்து சிவபெருமானையும் சத்தியையும் பூசித்து, சிவபெருமானை மாத்திரம் சிவிகையிலெழுந்தருளச்செய்து, மூலலிங்கத்தில் புஷ்பத்தால் சேர்த்து, சயநாலயமூர்த்தியை யதாஸ்தானத்தில் வைத்துவிட்டு, உஷக்கால பூஜைக்கு வேண்டியவற்றைச் சேகரித்துக் கொண்டு சூரியோதயத்திற்கு முன் உஷக்கால பூஜை செய்ய வேண்டும்.

பின்னர், நதி முதலியவற்றுள் யாதானும் ஒன்றிலிருந்து திருமஞ்சனங்கொண்டுவந்து நந்திமுதலியவற்றுள் யாதானும் ஒன்றன் சிரசில் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

அதன்பின்னர், சூரியபூஜை முதல் சண்டேசுவர பூஜை யீருகக் காலசந்தி பூஜையை முறைப்படி செய்து, நித்திய ஹோமம் நித்யோத்ஸவங்களைச் செய்து, கபிலபூஜை செய்ய வேண்டும். ஆறுமுகர் ஆலயம் தனியாக இருந்தாலும், அம் பிகை ஆலயம் தனியாக இருந்தாலும், அவற்றிற்கும் முறைப் படி பூஜை செய்து நித்தியஹோமம் நித்தியோத்ஸவங்களைச் செய்யவேண்டும்.

அதன்பின்னர், உபசந்தி பூஜை உச்சிக்கால பூஜைகளை முறைப்படி செய்து, ஆசாரியர் தனது இருப்பிடஞ் சென்று ஔபாஸனம் ஆத்மார்த்தபூஜை அக்கினி காரியங்களைச் செய்து பந்திக்குரிய பிராமணர்களுடன் போஜனஞ் செய்ய வேண்டும்.

பின்னர், பகல் நான்காம் யாமத்தில் ஆசாரியர் ஆலயத் திற்குச்சென்று பிரதோஷகாலத்தில் நடராஜ பூஜையை விரி வாகவும், மூலலிங்க முதலியவற்றின் பூஜையைச் சுருக்கமாக வுஞ்செய்து, அதன்பின்னர், மூலலிங்கம் முதல் சண்டேசர் ஈருகவும், சோமாஸ்கந்தருக்கும் சாயங்கால பூஜைசெய்து, அதன்பின்னர், சுவாமிக்கும் அம்பாளுக்கும் அர்த்தயாம பூஜைசெய்து, சயநாலய மூர்த்தியைச் சிவிகையிலெழுந்தரு ளச்செய்து, சயநாலயத்து மஞ்சத்தில் அம்பிகையின் பக்கத் தில் வீற்றிருக்கச்செய்து பூசித்து, சயநாலயத்தின் கதவைப் பூட்டி, சண்டேசுவர பூஜைசெய்து, க்ஷேத்திரபாலர் ஆலயத் திற்குச் சென்று முறைப்படி ஆலயத்திற்கு உள்ளும் புறம்பும் பூஜித்து சயநாலயமுத்ராதண்டத்தை க்ஷேத்ரபாலரிடம் சமர்ப்பித்து, எல்லாக் கதவுகளையும் பூட்டி அன்னவிநியோ கஞ்செய்து, ஆசாரியர் வாத்யம் முதலிய உபசாரங்களுடன் தன் வீட்டிற்குச்சென்று போஜனம் செய்து சயனஞ் செய்ய வேண்டும்.

இவை ஒவ்வொன்றும் முறைப்படி நன்குவிரித்துக் கூறப் பெற்றிருக்கின்றன. விரிவைப் பொருள் அட்டவணையில் காண்க.

மூலப்பிரதியில் பல விஷயங்கள் சுருக்கமாய் இருந்தன. திருமஞ்சன விஷயம் மூலப்பிரதியில் கிடையாது. தீபோபசார முறையும் அவற்றிற்குரிய மந்திரங்களும் இன்னும் சில பாகங் களும் மூலப்பிரதியில் இல்லை.

மஞ்சக்குடி சிவஸ்ரீ மீனாக்ஷிசுந்தர சிவாசாரியரவர்கள் வந்திருந்து சுருக்கமாயிருந்தவற்றை விரித்தற்குவேண்டும் பிரமாணங்கள் காட்டியும், சிவாசாரியர்கள் இருக்கும் இடங்கட்குச் சென்று, திருமஞ்சனத்தைப்பற்றிய சுலோகங்கள் பெற்றுவந்தும், தீபோபசாரம் முதலியவற்றையும் வேறு சிலவற்றையும் விளக்கத்தக்க ஏட்டுப் பிரதிகள் தந்தும் உபகரித்தார்கள். இந்நூல் வெளிவருவதற்கு இவர்கள் செய்த உதவி மிகப் பாராட்டத்தக்கது.

அச்சிட்டு முடிந்தபின்னர், அம்மாள் அக்கிரகாரம் சிவாகம பாடசாலை ஆசிரியர் சிவஸ்ரீ தி. ரா. பஞ்சாபகேச சிவாசாரியரவர்கள் பார்த்துச் சில திருத்தங்கள் செய்து உதவினார்கள். சுருக்கமான சில தினங்களில் சிரமத்தைப் பொருட்படுத்தாது கிரந்தம், தமிழ் இரண்டையும் தனித்தனியும் ஒப்பு நோக்கியும் பார்த்தனுப்பிய இவர்கள் நன்றியைச் சங்கத்தார் என்றும் மறவார். பிரதி உபகரித்தவர்களுள் இவர்களும் ஒருவர். நமது சங்கத்தின் முன்னேற்றத்தில் எப்பொழுதும் இவர்கள் மிக்க ஆர்வமுடையவர்கள்.

மகாப்பிரதோஷம் நைமித்திகமாயினும் மாதம் இருமுறை வருதல்பற்றி, காரணாகமத்திலுள்ள மகாப்பிரதோஷ விதி இதன் இறுதியில் சேர்க்கப்பெற்றிருக்கின்றது.

## பிரதி உபகரித்தோர்

க. வடலூர், சிவஸ்ரீ உ. ப. பாலசுப்பிரமணிய சிவாசாரியரவர்கள்,
இது பூர்வபாகம் உத்தரபாகம் இரண்டுமுடையது.

உ. திருத்துறைப்பூண்டி தி. ரா. பஞ்சாபகேச சிவாசாரியரவர்கள்,
இது உத்தரபாகம் மாத்திரம் உடையது.

## வேண்டுகோள்

இச்சங்கத்திலிருந்து வெளியாகும் நூல்களைச் சைவர்களனைவரும் பெற்றுப்படித்தலே இச்சங்கத்திற்கும் சைவசமயத்திற்கும் சைவர்கள் செய்யும் பேருதவியாகும்.

சிவபெருமான்றிருவருள் எங்கும் விளங்குக!

சைவசமயம் எங்கும் பரவுக!!

தேவகோட்டை,
5—4—'30

இங்ஙனம்,
சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார்.

உ
சிவமயம்

## பதிப்புரை

சிவபூசை ஒன்றே பிறவிப் பிணியை ஒழித்து முத்திப் பேற்றைத் தரவல்லது. 'சிவ' என்னும் சொல் பதியையும், பரையையும் உணர்த்துவதாகும். மலத்தை ஒழித்து முத்தியைத் தருவதாகிய சிவபூசையை மனம், மொழி, மெய்களாகிய திரிகரணங்களாலும் பாவனை, மந்திரம், கிரியை ஆகிய தொழில்களால் செய்தல் வேண்டும்.

உலகத்திலுள்ள சர்வ ஜீவான்மாக்களின் இன்பப் பேறு குறித்து ஆலயங்களில் நடைபெற்று வரும் பரார்த்த பூசை, சிவாகமங்களில் விதித்தபடி நிகழவேண்டுவது மிக மிக இன்றியமையாதது. அது அங்ஙனம் நிகழாது போனல் வரும் கேடு பற்றித் திருமூலதேவ நாயனர்

"முன்னவ னார்கோயிற் பூசைகள் முட்டிடில்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னம் களவு மிகுத்திடும் காசினிக்
கென்னரு நந்தி எடுத்துரைத் தானே"

என்ற திருமந்திரத்தில் அறிவுறுத்துகின்றார்.

ஜீவகோடிகளின் உய்தியில் நோக்கம் வைத்து ஸ்ரீ அகோர சிவாசாரியர் இந்நூலை வடமொழியில் அருளிச் செய்தனர். அதனையும், அதன் தமிழ் மொழிபெயர்ப்பாகிய இதனையும் சில ஆண்டுகளுக்கு முன்பு நமது சங்கம் அச்சிற் பதித்து வெளியிட்டது. அப்பிரதிகள் அனைத்தும் செலவாகிவிட்டன.

மீண்டும் இத்தமிழ் மொழிபெயர்ப்பை அச்சிட்டு வெளியிடச் சங்கத்தினர் விரும்பியபொழுது இந் நகர் சைவத் திருவாளரும் திருவெண்காடு ஸ்ரீ சுவேதாரணியேசுவரர் ஆலயத்திலுள்ள ஸ்ரீபிரம வித்தியாம்பாள் திருக்கோயில் திருப்பணியாளருமாகிய மு. ராம. சுப. சுவாமிநாதன் செட்டியாரவர்கள் இதற்கு வேண்டிய பொருளுதவியைச் செய்து உபகரித்

தார்கள். அவர்களது அன்புக்கொடைக்குக் காரணர்களாய் இருந்த அவர்களது மூத்த சகோதரர் திரு வேங்கடாசலம் செட்டியார் அவர்களுக்கும், பொருளுதவி செய்த சுவாமி நாதன் செட்டியார் அவர்களுக்கும் ஆகமம் ஆகி நின்று அண்ணிக்கும் சிவபெருமான் எல்லா நலங்களையும் மென்மேலும் வழங்கி அருளுவாராக.

சிவாலய பூஜாவிதியைத் தெளிவுபடுத்தி உரைக்கும் இப் பெரு நூலின் இரண்டாம் பதிப்பைச் சென்னை மாநிலத் திருக்கோயில்களின் பரிபாலனத்தை செவ்வனே செய்து வரும், அறநிலையத்துறை ஆணையர் திரு, மா. சே. சாரங்கபாணி முதலியாரவர்கள் வெளியிட ஏற்றுக்கொண்டது, சங்கத்தாருக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது, அவர்களது கைவிசேடம் பெற்று வெளிவரும் இவ்வெளியீடு, சிவாலயங்களில் பூஜை முறையை விதிப்படி ஆக்கிப் பெரும் பயன் விளைக்குமென்னுந் துணிவுடையோம். எங்கள் வேண்டுகோளை ஏற்று, வெளியீட்டுப் பணியைச்செய்ய முன்வந்த அவர்களுக்கு எங்கள் உளங்கனிந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்ளுகிறோம்.

இப்பதிப்பு வெளிவருவதற்குப் பெருந்துணை செய்த சங்கத்துக் கௌரவ சித்தாந்த சாத்திர போதகாசிரியர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்களுக்குச் சங்கமும் சைவ உலகமும் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

இதனை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய சாந்தி அச்சகத்தாருக்கும் சிறப்பாக அதன் உரிமையாளர்களில் ஒருவராகிய CT. இராமநாதன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகுக.

அன்புள்ள

தேவகோட்டை
29-8-'66

**மெ. அரு. நா. கண்ணப்ப செட்டியார்**
காரியதரிசி
**சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம்**

# பொருள் அட்டவணை

## பூர்வபாகம்



## உத்தரபாகம்

### உஷக்காலம்



### திருமஞ்சனம்



### காலசந்தி

இறுதியில்

உ
சிவமயம்
ஸ்ரீமத் அகோரசிவாசாரியர் இயற்றிய
சிவாலய நித்தியபூஜாவிதியென்னும்

# ஸ்ரீ பரார்த்தநித்திய பூஜாவிதி

## பூர்வபாகம்

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

## அநுட்டான விதி

### ஆசாரிய இலக்கணம்

வேதங்கள், அவற்றின் அங்கங்கள், பலவிதமான மந்திர சாஸ்திரங்கள், தந்திரசாஸ்திரங்கள், முத்திரைகள், கிரியை கள், சிற்பசாஸ்திரங்கள், விளக்கமான சொற்கள் என்னும் இவற்றை அறிந்தவராயும், ஒழுக்கமுடையவராயும், நற்குண முடையவராயும், நல்ல வடிவமுள்ளவராயும், மங்களத்தைச் செய்பவராயும் இருக்கிற ஆதிசைவரை ஆசாரியரெனப் பெரியோர் கூறுகின்றனர்.

தத்துவஞானத்துடன் கூடியவராயும், ஆறு அத்துவாக் களின் உண்மைகளைச் சிந்திப்பவராயும்; பரதசாஸ்திரம், அஷ்டாங்கயோகம் என்னுமிவற்றை அறிந்தவராயும், சிவ ஞானத்தை உபதேசிப்பவராயும், ஆசாரியாபிஷேகத்தால் சுத்தமான ஆன்மாவை உடையவராயும், எல்லாவுயிர்களிடத் தும் தயையுடையவராயும், சோதிடசாஸ்திரங்களைக் கற்ற வராயும், வாக்குப்பிரசாதத்தால் சுபத்தைச் செய்பவராயும் உள்ள ஆதிசைவர் ஆசாரியசிரேஷ்டரென்பது நூல்களிற் கூறப்படுகின்றது.

### வைகறைத் தியானம்

இவ்வாறான ஆசாரியர் வைகறைப்பொழுதில் எழுந்து வடக்கு முகமாக ருசிராசனத்தில் (சுகாசனத்தில்) அமர்ந்து குரு பரம்பரை முதலியவற்றையும், சிவ பரம்பொருளையும்

மனத்தாற் சிந்தித்துத் தன்னுடைய ஆசாரியருக்கும் ஈசுவர னுக்கும், தனக்கும் ஈசுவரனுக்கும் ஐக்கியத்தைப் பாவித்து,* குருவையும், ஈசுவரனையும் வணங்கி, விபூதியை நெற்றியில் தரித்துக்கொண்டு, சிவ நாம சங்கீர்த்தனஞ்செய்து, ஆடை யால் சிரசை மறைத்துக் கொண்டு, தண்டம் ஜலபாத்திரம் ஸ்நானம் செய்தற்குக் கூறப்பட்ட நெல்லிக்கனி முதலிய திரவியங்கள், ஆடைகளை வைக்கக்கூடிய பெட்டியென்னு மிவற்றை எடுத்துக்கொண்டு, கிராமத்திற்கு வெளியில் சென்று நதி முதலியவற்றுள் யாதானுமோர் தீர்த்தத்தின் கரையில் அந்தப் பெட்டி முதலியவற்றை வைத்துவிட்டு, மல மூத்திர விஸர்ஜனஞ் செய்தற்குச் செல்லல்வேண்டும்.

## மலஜலங் கழிக்கும் விதி

இன்னின்ன இடங்கள் மலஜலங் கழித்தற்கு உரியன வாகா என்பதற்குக் காமிகாகமப் பிரமாணம் வருமாறு :—

நதி, தடாகம், வயல், புற்று, பூந்தோட்டம், பசுக்கள் வசிக்குமிடம், பிராமணர் கூடுமிடம், மயானம், தருப்பை அடி, பெண்கள் வரும் வழி, ஆலயம், மலையின் அடிப்பாகம் ஆகிய இவை மலஜலங் கழிக்கத்தகாத இடங்கள். இவ்வாறான இடங் களை நீக்கி, வேறு இடங்களில் மலஜலங்களைக் கழிக்கவேண்டு மென்றவாறும். ஆகவே, விலக்கவேண்டுமென்று கூறப்பட்ட இடங்களை விலக்கி, வேறு இடத்தில் மலமூத்திர விஸர்ஜனஞ் செய்தற்பொருட்டுப் பூமியில் இருக்கும் தேவர்களைப் பிரார்த் திக்க வேண்டும்.

பிரார்த்தனை செய்யும் முறை வருமாறு :—

ஒன்பது கண்டங்களை ஆளும் கருணையுள்ள தேவர்களே! உங்களை வேண்டிக்கொள்ளுகின்றேன். இந்தப் பூமியில் மல ஜலங் கழித்தல் என்னால் செய்யப்படுகின்றது. அதனைப் பொறுக்க வேண்டுமென்பதாம்.

இவ்வாறு பிரார்த்தித்துக்கொண்டு பூணூலை இடமாக வலது காதில் தொங்கச் செய்து அஸ்திரமந்திரத்தால் கை களைக் கொட்டிக் கொண்டு பகலில் வடக்குமுகமாக இருந்து

* குருவணக்கம் வருமாறு: குருவே பிரமன்; குருவே விஷ்ணு; குருவே மகேசுவரர்; குருவே ஸாக்ஷாத் பிரஹ்மம். அத்தகைய ஸ்ரீ சிவகுருவின் பொருட்டுவணக்கம் என்பதாம்.

ஒன்றும் பேசாமல் பூமியில் புற்களைப் பரப்பி, ஆடை கௌபீனங்களை விலக்கிக்கொண்டு, மூக்கை மூடிக்கொண்டு, விரைவில் மலமூத்திரங்களைக் கழிக்கவேண்டும்.

## சௌச விதி

கழித்தபின்னர், இடது கையால் குறியைப் பிடித்துக்கொண்டு நீர்க்கரைக்குச் சென்று, வலது கையால் சுத்தமான மிருத்திகையை (மண்ணை) நெல்லிக்கனி அளவாக ஏழுமுறை எடுத்து, குதத்தையுங் குறியையும் நீரால் கழுவவேண்டும். இவ்வாறே யோக ஜாக மத்திலும் " குறியில் ஒரு முறைமிருத்திகையாலும், குதத்தில் ஐந்து முறை மிருத்திகையாலும், கைகளில் மும்மூன்று முறை மிருத்திகையாலும், இரு கால்களிலும் ஆறுமுறை மிருத்திகையாலும் சுத்தி செய்ய வேண்டும். கிருகத்தர் இந்த முறைப்படியும், பிரமசாரி, வானப்பிரஸ்தர், சன்னியாசி ஆகிய இவர்கள் முறையே இரண்டு மூன்று நான்கு மடங்கு அதிகமாகவும் சுத்தி செய்துகொள்ளல் வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அதன் பின்னர் அவ்விடத்தைவிட்டு நீங்கி, வேறிடத்திற்குச் சென்று, நீரை வாயில் கொண்டு ஏழுமுறை கொப்பளித்துப் பூணூலைத்தரித்து ஆசமனஞ் செய்ய வேண்டும்.

சௌசவிதி முடிந்தது.

## தந்த சுத்தி

*காரணாகமத்தில் தந்த சுத்தி இவ்வாறு கூறப்படுகின்றது.

நாவல், மா, ஆல், பலா, கருங்காலி, நாயுருவி, எருக்கு, இரளி, பாலுள்ள விருக்ஷம், கிழங்குள்ள விருக்ஷம் என்னும் இவற்றின் கொம்புகளைப் பன்னிரண்டங்குல அளவாக எடுத்துப் பல்லுக்கொம்பாக உபயோகித்துக்கொள்ளவேண்டும். மணல், செங்கல் பொடி, வைக்கோல் என்னும் இவற்றை எப்பொழுதும் உபயோகப்படுத்தக்கூடாது. பிதிருதினங்களில் கொம்பால் பல் துலக்குதல்கூடாது.

---

* பூருவகாரணம் ஸ்நானவிதிப்படலத்தில் பல்லுக்கொம்புகள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் இங்கே கூறியபடி இல்லை.

இதற்கு அஜிதாகமப்ரமாணம் வருமாறு :

அமாவாஸ்யை, வ்யதிபாதம், பெற்றோரிறந்த தினம் ஆகிய இந்தத் தினங்களில் பல்லுக் கொம்பால் பல் துலக்குதல் கூடாது, அவ்வாறு செய்யின் பிதிருக்களுக்கு அச்சம் உண்டாகும். இந்தத் தினங்களில் மாவிலையால் பல் துலக்கி * முன் போல வாய் கொப்பளித்து ஆசமனம் செய்யவேண்டும்.

தந்த சுத்தி முடிந்தது

## ஸ்நானகாலத்து பைரவ ப்ரார்த்தனை

பின்னர், ஸ்நானத்திற்காக நீரின் பக்கத்துக்குச் சென்று, கிழக்கு முகமாகவேனும், வடக்குமுகமாகவேனும் அமர்ந்து பவித்திரத்தைக் கையில் அணிந்து, சங்கற்பம் செய்யவேண்டும். பின்னர் பிராணாயாமம் செய்து, பைரவரைப் பிரார்த்திக்கவேண்டும். பிரார்த்தனை செய்யுமுறை வருமாறு :—

ஓ மிகக்குரூரமான பெரிய சரீரத்தையுடையவரே! பிரளயகால அக்னிக்குச் சமானரே! பைரவரான உமக்கு நமஸ்காரம். உத்தரவு தந்தருளவேண்டும் என்பதாம். இவ்வாறு பிரார்த்தித்து உத்தரவைப் பெற்றுக்கொண்டு ஜலதேவதையை வேண்டிக்கொள்ளவேண்டும். வேண்டிக்கொள்ளு முறை வருமாறு :—

ஓ வருணபகவானே! நீர் நீருக்குப்பதியாக இருக்கின்றீர். பரமேசுவரருக்கு எப்பொழுதும் பிரியமுள்ளவராகவும் இருக்கின்றீர். மேற்குத் திக்குக்கு நாயகரான நீர், நான் ஸ்நானஞ் செய்தற்பொருட்டு எனக்கு உத்தரவு தந்தருளவேண்டும் என்பதாம். இவ்வாறு பிரார்த்தித்துக்கொண்டு தொப்புள் அமிழ்ந்தும் நீரில் நின்றுகொண்டு கங்கை முதலிய புண்ணிய நதிகளைப் பிரார்த்திக்கவேண்டும். பிரார்த்தனை செய்யுமுறை வருமாறு :—

ஓ கங்காதேவியே! ஓ யமுனே, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி முதலிய நதி தேவிகளே! நீங்கள் எல்லோரும் இந்தத் தீர்த்தத்தில் சாந்நித்தியம் செய்யுங்கள் என்பதாம். ஸ்நானம் செய்யுங்கால் எத்த முகமாக நிற்கவேண்டும் என்பதற்கு அம்சுமான் ஆகமப்ரமாணம் வருமாறு.—

* சௌசம் செய்தவுடன் ஏழு முறை கொப்பளித்தல்போல்.

தடாகத்தில் ஸ்நானஞ் செய்யும்பொழுது சூரியனைப் பார்த்துக்கொண்டும், நதிகளில் ஸ்நானம் செய்யும்பொழுது பிரவாகத்தை எதிர்நோக்கிக்கொண்டும், கேணிகளில் ஸ்நானம் செய்யும்பொழுது வடக்கு முகமாகவும் நின்று ஸ்நானஞ் செய்யவேண்டும் என்பதாம்.

## மிருத்திகாஸ்நானம்

மிருத்திகாஸ்நானத்திற்காக மிருத்திகையை நாரத்தம் பழ அளவாக அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு எடுத்து மூன்று பாகஞ்செய்து ஓம் ஹாம் ஆத்மதத்துவாய நம:, ஓம் ஹாம் வித்யாதத்வாயநம:, ஓம்ஹாம் சிவ தத்வாய நம: என்னும் தத்வ மந்திரங்களால் அபிமந்திரித்து, ஒரு பாகத்தை நாபி முதல் பாதம் முடிய மூலமந்திரத்தை உச்சரித்தும், மற்றொரு பாகத்தைக் கைகால் முதலிய அங்கங்களில் அஸ்திரமந்திரத்தை உச்சரித்தும் பூசிக்கொண்டு, கையால் நீரைக் கலக்கி மூலமந்திரத்தை உச்சரித்துக் கும்ப முத்திரை செய்துகொண்டு ஸ்நானஞ் செய்க.

மீண்டும், கஸ்தூரி மஞ்சட்பொடி முதலிய சுகந்த திரவியங்களாலும், நெல்லிக்கனிப்பொடியாலும் தேகத்தைப் பூசிக்கொண்டு ஸ்நானஞ்செய்க.

பின்னர், பிராமணராயின் முதலாவது வைதிக சந்தியை உபாசித்து அதன் பின்னர் அஸ்திரசந்தியை உபாசிக்க வேண்டும்.

## அஸ்திரசந்தி

ஆசமனஞ்செய்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, ஜலமத்தியத்தில் சதுரச்ரமாகக்கிறி, அதன் மத்யத்தில் மாயாபீஜம் வருணபீஜங்களை எழுதி, அஸ்திரமந்திரத்தால் மூன்றுமுறை புரோக்ஷித்துக்கொண்டு, அஸ்திரமந்திரத்தால் பிராணுயாமங்கரசுத்தி அங்கசுத்திகளைச் செய்து, வலது கையால் ஜலத்தை எடுத்து ஜலத்துடன் அந்தக் கையை இடதுகையில் வைத்துக்கொண்டு, தத்வமந்திரம் அஸ்திர மந்திரங்களை உச்சரித்து உட்கொள்ளவேண்டும். இவ்வாறே மூன்று முறை செய்யவும். பின்னர் நீரையெடுத்து அஸ்திர மந்திரத்தால் ஏழு முறை சிரசில் புரோக்ஷித்துக்கொண்டு, எஞ்சிய நீரை கவசமந்திரம் அஸ்திரமந்திரங்களை உச்சரித்துக்

கொண்டு வலது கையால் நாலு பக்கத்திலும் சுற்றி அஸ்திர மூர்த்தியைத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு :—

மங்களகரமான திருமேனியும், ஒருமுகமும், சுத்தமான வெண்மை வருணமும், கைகளில் டங்கம் அபயம் கிருஷ்ண மான் (கருப்புமான்) ஊருஹஸ்தம் (துடையில் வைத்திருக்கும் கை) என்னுமிவற்றையும், ஜடையில் சந்திரனையும் கங்கை யையும் கொண்டவராக திரிசூல ரூபரான அஸ்திரதேவரைத் தியானிக்கவேண்டும். இவ்வாறு தியானித்து, அஸ்திரமந்தி ரத்தை உச்சரித்து, மூன்று அர்க்யங்களைக் கொடுக்கவேண்டும்*

## விதிஸ்நான முறை

மீண்டும் எஞ்சியுள்ள மிருத்திகையின் மற்றொரு பாகத்தை எடுத்து, சம்ஹிதா மந்திரங்களால் அபிமந்தி ரித்து, தொப்புள் அளவுள்ள நீருட்சென்று, அந்த ஒரு பாகத்தை இடது கையில் மூன்று பாகமாகப் பிரித்து வைத் துக்கொண்டு, கிழக்குத் திக்கிலுள்ள மண்ணை அஸ்திரமந்தி ரத்தாலும், தெற்குத் திக்கிலுள்ள மண்ணைப் பஞ்சப்பிரம மந்திரங்களாலும், வடக்குத் திக்கிலுள்ள மண்ணை மூலமந்தி ரத்தாலும் ஒருமுறை அபிமந்திரித்து, அஸ்திரமந்திரத்தால் ஜபிக்கப்பெற்ற மண்ணைக்கொண்டு திக்பந்தனஞ்செய்து, மூல மந்திரத்தால் ஜபிக்கப்பெற்ற மண்ணை ஜலத்தில் கரைத்துச் சிவதீர்த்தமாகப் பாவித்து, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களால் ஜபிக்கப்பட்ட மண்ணைச் சரீரத்தில் பூசிக்கொண்டு, அகமர்ஷ ணம் முதலிய மந்திரங்களால் சுத்திசெய்து, ஓம் க்ரோம் என்னும் பீஜாக்கரத்தை உச்சரித்து அங்குசமுத்திரை செய்து, தந்திரராஜம் என்னும் கிரந்தத்தில் பிந்துதிரி கோணம் விருத்தம் (வட்டம்) சதுரச்ரம் ஆகிய இவற்றால் அடையாளம் செய்யப்பட்ட ஸ்ரீபாதுகாபராயந்திரத்தை எழுதி ஜலஸ்நானம் செய்யவேண்டும் என்று கூறப்பட்டிருத்த லால், மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு நீரில் அந்த இயந்திரத்தை எழுதி, சூரிய மண்டலத்திலுள்ள தீர்த்தங் களை ஆவாஹனஞ்செய்து ஸ்தாபனம் முதலிய ஐந்து முத் திரைகளையும் காண்பித்து. மூலமந்திரத்தை உச்சரித்துக்

* மீண்டும் மூலமந்திரம், அஸ்திரமந்திரம், ஷடங்கமந்திரங்களால் இருபத்தொரு முறை தர்ப்பணஞ் செய்யவேண்டும் என்று மூலப் பிரதியில் இருக்கிறது.

கொண்டு மூன்று முறை மூழ்கிக்கும்ப முத்திரைசெய்து, மூல மந்திரத்தால் சிரசில் மூன்று முறை புரோக்ஷித்துக்கொண்டு ஆசமனஞ் செய்யவேண்டும்.

## ஆசமனஞ் செய்யுமுறை

கிழக்குமுகமாகவேனும், வடக்குமுகமாகவேனும் கரையில் இருந்துகொண்டு, இரண்டு முழங்கால்களுக்கும் இடையே கைகளை வைத்து இடது கையை நீரிலேனும் தரையிலேனும் வைத்துக்கொண்டு ஆசமனஞ் செய்யவேண்டும். சிந்தியாகமத்தில்,

பசுவின் காதுக்குச் சமானமாகக் கையை வைத்துக் கொண்டு உளுந்து அமிழும் அளவான நீரைப் பருகவேண்டும். குறைவாகவேனும் அதிகமாகவேனும் அந்த நீரைப் பருகினுல் கட்குடித்தலை ஒக்குமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆன்ம தத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் என்னும் தத் துவ மந்திரங்களால் மூன்று முறை ஆசமனஞ் செய்து, பின்னர்க் கட்டை விரலின் அடியால் அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, உதடுகளை இரண்டு முறை துடைத்துக் கொள்ளல்வேண்டும். பின்னர் இருதய மந்திரத்தை உச்சரித் துக்கொண்டு மூன்று முறை சிரசில் புரோக்ஷித்து, முழங்கால் தொப்புள் இருதயம் சிரசு என்னும் இவற்றைப் பெருவிரல் அணிவிரல்களால் தொடல்வேண்டும். கண் மூக்கு காது புயம் இருதயம் சிரசு ஆகிய இவ்வங்கங்களில் முதலாவது வலப் பக்கம் பின்னர் இடப்பக்கம் என்னும் முறையாக முறையே அணிவிரலாலும், சுட்டுவிரலாலும், கடைவிரலாலும், நடு விரலாலும், பெருவிரலாலும், ஐந்து விரல்களாலும் அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தொடல்வேண்டும்.

## தேவர், ரிஷி, பிதிர் தர்ப்பணம்

பின்னர், தேவர்கள் இருஷிகள் பிதிரர்கள் ஆகிய இவர் களின்பொருட்டுத் த ப்பணஞ் செய்யவேண்டும். செய்யு முறை வருமாறு :—

மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு

ஓம் பூ: தேவாம்ஸ்தர்ப்பயாமி ஓம் புவ: தேவாம்ஸ் தர்ப்பயாமி

ஓம் ஸ்வர்தேவாம்ஸ்தர்ப்பயாமி

ஓம் பூர்புவஸ்வர்தேவாம்ஸ்தர்ப்பயாமி என்றும்,

பின்னர் பூணூலை மாலையாகத் தரித்து மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு,

ஓம் பூ: ருஷீம்ஸ்தர்ப்பயாமி ஓம் புவ: ருஷீம்ஸ்தர்ப்பயாமி

ஓம் ஸ்வ: ருஷீம்ஸ்தர்ப்பயாமி

ஓம் பூர்புவஸ்வ: ருஷீம்ஸ்தர்ப்பயாமி என்றும்,

பின்னர், பூணூலை இடதுபக்கமாகத் தரித்து மூலமந்திரத்தைப் பிரணவத்தை முன்னிட்டு உச்சரித்துக்கொண்டு,

ஓம் பூ:பித்ருந்ஸ்வதாநமஸ்தர்ப்பயாமி

ஓம் புவ: பித்ருந்ஸ்வதாநமஸ்தர்ப்பயாமி

ஓம் ஸ்வ: பித்ருந்ஸ்வதாநமஸ்தர்ப்பயாமி

ஓம் பூர்புவஸ்வ: பித்ருந்ஸ்வதாநமஸ்தர்ப்பயாமிப் என்றும் உச்சரித்துக்கொண்டு தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

## யக்ஷ்ம தர்ப்பணம்

பின்னர், பூணூலை வலதுபக்கமாகத் தரித்துக்கொண்டு யக்ஷ்ம தர்ப்பணஞ் செய்யவேண்டும். எவ்வாறெனின்,

யந்மயா தூஷிதம்தோயம் சரீரமலஸம்பவாத்,

தத்தோஷபரிஹாரார்த்தம் யக்ஷ்மாணம் தர்ப்பயாம்யஹம்

இதன் பொருள்—ஓ தேவ! சரீரத்தினின்றும் உண்டான அழுக்கால் ஜலம் கேடுபெற்றிருக்கின்றது. அந்தத் தோஷம் நீங்கும் பொருட்டு யக்ஷ்மதர்ப்பணம் செய்கிறேன் என்பதாம்.

இவ்வாறு சொல்லிக்கொண்டு நீர்க்கரையில் அஞ்சலிரூபமான கையால் நீரை வார்த்துப் பிறகு லதை விருக்ஷம் புதர் இவற்றில் இருக்கும் என்பிதிருக்கள் திருப்தி அடையும் நிமித்தம் இந்தச்சிகோதகத்தைச் சமர்ப்பிக்கிறேன் என்னும் பொருளுடைய லதா விருக்ஷேஷு என்னும் சுலோகத்தையும், இந்தக் குலத்தில் உண்டானவர்களும், புத்ரப்பேறின்றி மரித்த என் கோத்ரத்தில் உள்ளவர்களும், வஸ்திரத்தைப் பிழிந்த ஜலத்தை ஸ்வீகரிக்கவேண்டும் என்னுமர்த்தமுடைய யேகேசைதத் என்னும் சுலோகத்தையும் சொல்லி, சிகோதக வாஸோதகங்களைக்கொடுத்துக் கரைக்கு வரல்வேண்டும்.

ஜலஸ்நானம் செய்யமுடியாவிடில் பத்துவித ஸ்நானத்தில் யாதானுமொன்றைச் செய்க. பத்துவிதஸ்நானத்தைப்பற்றி யாக்ஞவல்க்யர் கூறுவது வருமாறு—

''கோமூத்ரம், கோமயம், க்ஷீரம், தயிர், நெய், தர்ப்பை ஜலம், பஸ்மம், மிருத்திகை, ஜலம், மந்திரம் என ஸ்நானம் பத்துவிதமாக விதிக்கப்பட்டிருக்கின்றது.'' என்பதாம்.

கரைக்கு வந்த பின்னர், உலர்ந்து சுத்தமாயிருக்கும் ஆடையால் சிரசையும் அங்கங்களையும் துடைத்துக்கொள்க.

பீமசம்ஹிதை என்னும் நூலில் ''ஒற்றை ஆடைஅணிந்து ஸ்நானம் செய்தல், ஒரு வஸ்திரத்தாலேயே துடைத்துக் கொள்ளல் ஆகிய இவை ஸ்நானபலனைக் கொடுக்கமாட்டா. அவ்வாறு செய்தவனுடைய சரீரம் நாயால் நக்கப்பட்ட சரீரத்தை ஒக்கும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது. பின்னர் சுத்தமான இரண்டு ஆடைகளை அணிந்துகொள்ளல்வேண்டும்.

சுப்ரபேதாகமத்தில்—

''சிவப்பு வஸ்திரம், ஈரவஸ்திரம், பழையவஸ்திரம் என்னும் இவற்றில் யாதானுமொன்றை அணிந்து கொண்டு சந்தியாஜபம் செய்தல் கூடாது. செய்தால் நிருவாணனாக இருந்து செய்தற்குச் சமானமாகும்'' என்று கூறப்பட்டிருக் கின்றது.

## திருநீறு தரித்தல்

பின்னர், கற்பவிபூதியை சம்ஹிதையால் அபிமந்திரிக்க வேண்டும். அகற்பவிபூதியை நிவிருத்தி முதலிய கலாமந்திரங் களாற் சுத்தி செய்து, சம்ஹிதையாலபிமந்திரிக்கவேண்டும் என்று கிரியாக்ரம த்யோதிகையில் கூறப்பட்டிருக்கிறது. அவ்வாறு விபூதியை வலது கையால் எடுத்து இடது கையில் வைத்துக்கொண்டு, திக்பந்தனம் அமிருதீகரணம் என்னும் இவற்றையும், நிரீக்ஷணாதி ஐந்து சுத்திகளையுஞ் செய்து, விபூதியின் மத்தியில் மாயாபீஜத்தையும், அதனைச் சுற்றித் திரிகோணத்தையும் எழுதி, விபூதியை வலது கையால் மூடி, மூலமந்திரத்தால் அபிமந்திரணஞ்செய்து, ருத்திரரைத் தியா னஞ் செய்யவேண்டும். தியானஞ்செய்யுமுறை வருமாறு:—

மூன்று கண்களை உடையவராயும், மூன்று சிகைகளை உடையவராயும், மூன்று கால்களை உடையவராயும், மூன்று கைகள் ரக்தமாலை ஆபரணம் என்னும் இவற்றை உடையவ ராயும், சிவப்பு வஸ்திரம் விபூதிப்பூச்சு ஆகிய இவைகளை யுடையவராயும் இருக்கும் ரக்ஷாசிவரூபரான ருத்திரரைத் தியானிக்கின்றேன்'' என்பதாம்.

பின்னர், நைருததிக்கில் ராக்ஷதபாகமாகச் சிறிது விபூதியைத் தெறித்துவிட்டு, நடுவிரலைக்கொண்டு ஜலத்தால் விபூதியை நனைத்து இரண்டு கைகளாலும் அந்த விபூதியைக் குழைத்து, ஈசானமந்திரத்தால் சிரசில் மூன்று அங்குல நீளமாகவும், தத்புருஷமந்திரத்தால் நெற்றியில் எட்டு அங்குல நீளமாகவும், அகோரமந்திரத்தால் மார்பில் பத்து அங்குல நீளமாகவும், வாமதேவமந்திரத்தால் நாபியில் மூன்று அங்குல நீளமாகவும், ஸத்யோஜாதமந்திரத்தால் முழங்கால்களில் ஒரு அங்குல நீளமாகவும் மூன்று ரேகைகளாகத் தரிக்க வேண்டும். மீண்டும் புயம், முழங்கை, மணிக்கட்டு, கழுத்து, இரண்டு விலாப்பக்கங்கள் ஆகிய இவ்விடங்களில், முறையே பன்னிரண்டு, எட்டு, மூன்று, ஐந்து, ஆறு அங்குல நீளமான மூன்று ரேகைகளைத் தரிக்கவேண்டும். பின்னர், அஸ்திமந்திரத்தை உச்சரித்துக் கைகளைக் கழுவி அந்த ஜலத்தைப் (அதாவது விபூதியைத் தரித்துக் கழுவிய ஜலத்தை) புரோக்ஷித்து ஆசமனஞ்செய்க.

பின்னர் வைதிகசந்தியைச் செய்து காயத்திரீஜபம் உபஸ்தானம் முதலியவற்றைச் செய்யவேண்டும். லளிதம் என்னும் ஆகமத்தில் ''வைதிகசந்தியை முன்னர்ச் செய்து பின்னர்ச் சைவசந்தியைச் செய்யவேண்டும். தீக்ஷாஸம்ஸ்காரமற்றவனுக்குத் தனிமையான வைதிக சந்திமாத்திரம் உள்ளது'' என்று கூறப்பட்டிருக்கிறது.

### கர நியாசம்

வைதிகசந்திசெய்தபின்னர், ஓம் ஹ: அஸ்திராய ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து வலது இடது உள்ளங்கைகளை ஒன்றால் ஒன்றை மேலும் கீழுமாக இரண்டுமுறை துடைத்து, ஓம்ஹௌம்சக்தயே வௌஷட் என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அமிருதத்தால் கைகளை நனைந்தவையாகப் பாவித்து உள்ளங்கைகளுக்குள்ளே விரல்களின் கணுக்களின் அடியே இரண்டு பெருவிரல்களின் நுனியாலும் ஓம்ஹாம்சிவாசனாய நம: ஓம்ஹாம் சிவமூர்த்தயேநம: என்று சிவாசன சிவமூர்த்திகளை நியாசஞ்செய்து, பெருவிரல்களில் சுட்டுவிரல்களினால் ஓம் ஹோம் ஈசானமூர்த்நே நம: என்று உச்சரித்து நியாசஞ்செய்து, சுட்டுவிரல் முதலாகக் கடைவிரல் ஈறாகவுள்ள விரல்களில் பெருவிரல்களினாலே முறையே ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நம:, ஓம்ஹூம்

அகோரஹ்ருதயாய நம:, ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாய நம:, ஓம் ஹம் ஸத்யோஜாத மூர்த்தயே நம: என்று நியாசஞ் செய்து, பெருவிரல்களால் கடைவிரல்களின் அடியில் ஓம் ஹாம் ஹௌம் வித்யாதேஹாய நம: என்று நியாசஞ் செய்துகொண்டு, சுட்டுவிரல் நடுவிரல் அணிவிரல்களால் உள்ளங்கைகளுக்குள்ளே ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம: என்றுநேத்ரத்தைநியாசஞ்செய்துகொண்டு, கைகளுக்குள்ளே பெருவிரல்களால் மூலமந்திரத்தை நியாசஞ்செய்து, கடைவிரல் முதலிய விரல்களில் முறையே ஓம் ஹாம் ஹ்ருதயாய நம:, ஓம் ஹிம்சிரசே நம:, ஓம் ஹூம் சிகாயை நம:, ஓம் ஹைம் கவசாய நம:, ஓம்ஹ: அஸ்த்ராய நம: என்று நியாசஞ் செய்து, கவசாய நம: என்று அவகுண்டனஞ்செய்து' சக்தயே வௌஷட் என்னும் மந்திரத்தால் அஞ்சலியைச் செய்ய வேண்டும்.

கரநியாசம் முடிந்தது.

## அங்க நியாசம்

கரநியாசஞ் செய்தபின்னர், இருதயத்தில் பெருவிரல் அணி விரல்களால் ஓம் ஹாம் சிவாஸனாய நம: என்று சிவாசனத்தையும், ஓம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று சிவ மூர்த்தியையும் நியாசஞ் செய்து, நான்கு விரல்களை மடக்கிப் பெருவிரலால் சிரசில் ஈசான மந்திரத்தை நியாசஞ்செய்து, பெருவிரலுடன் கூடின சுட்டுவிரலால் முகத்தில் தத்புருஷ மந்திரத்தையும், பெருவிரலுடன் கூடின நடுவிரலால் இருதயத்தில் அகோரமந்திரத்தையும், பெருவிரலுடன்கூடின அணிவிரலால் குஹ்யத்தில் வாமதேவமந்திரத்தையும், பெருவிரலுடன்கூடின கடைவிரலால் பாதத்தில் சத்யோஜாத மந்திரத்தையும் நியாசஞ்செய்து, பெருவிரல் அணிவிரல்களால் ஓம் ஹாம் ஹௌம் வித்யாதேகாய நம: என்று இருதயத்தில் வித்யாதேகத்தையும், நடுவிரல் மூன்றுலும்நேத்ரங்களில் நேத்ரேப்யோ நம: என்று நேத்ரமந்திரத்தையும், இருதயத்தில் எல்லா விரல்களாலும் மூல மந்திரத்தையும் நியாசஞ் செய்து, மீண்டும் இருதயம் சிரசு சிகையென்னும்தானங்களில், இருதயம் சிரசு சிகை என்னும் மந்திரங்களைப் பெருவிரலுடன் கூடின கடைவிரல் அணிவிரல் நடுவிரல்களாலும், கவசமந்திரத்தைத் தனங்களின்நடுவிரல் சுட்டுவிரல்களாலும் உள்ளங்கைகளில் அஸ்திரமந்திரத்தை அணிவிரல்களாலும்

நியாசஞ் செய்து, ஹூம் பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்று தாளங்களையும், சோடி கைமுத்திரையால் திக்பந்தனத்தையுஞ் கவசமந்திரத்தால் அவ குண்டனத்தையும் செய்து, வௌஷடை இறுதியிலுடைய மூலமந்திரத்தால் மகாமுத்திரையைக் காட்ட வேண்டும். (மகாமுத்திரையாவது மஸ்தகம் முதல் பாதம்வரை இருகைகளாலும்தொடுவது).

அங்கநியாசம் முடிந்தது.

## சைவ சந்தியா விதி

சம்ஹிதையாலாவது காயத்ரியாலாவது மூன்றுமுறை பிராணாயாமஞ்செய்து, ஹௌம் நேத்ரேப்யோ நம: என்று உச்சரித்துக் கொண்டு, பெருவிரல் அணிவிரல்களால் நேத்ரங்களில் திவ்யமுத்திரையை நியாசஞ்செய்து, நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய மூல மந்திரத்தால் ஜலத்தை நிரீக்ஷணஞ்செய்து, அதே மந்திரத்தால் தாடனஞ் செய்து, வௌஷடை இறுதியிலுடைய கவசமந்திரத்தால் அப்யுக்ஷணஞ் செய்து, வௌஷடை இறுதியிலுடைய இருதயமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அங்குச முத்திரையால் பிந்துந்தானத்தில் இருக்கும் அமிருதத்தை இழுத்துத் தனக்கு முன்னர் இருக்கும் தீர்த்தத்தில் மூலமந்திரம் பஞ்சப்ரஹ்ம மந்திரம் அங்க மந்திரங்களுடன் சேர்த்து, அஸ்திரமந்திரத்தால் திக்பந்தனமும், கவசாய நம: என்று அவகுண்டனமும் செய்து, சக்தயே வௌஷட் என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு தேனுமுத்திரையால் அமிருதீகரணஞ் செய்யவேண்டும். பின்னர் மகாமுத்திரையைக் காண்பித்துச் சிவதீர்த்த பாவனை செய்யவேண்டும்.

சூக்குமாகமத்தில், காலையில் ப்ராஹ்மீசந்தி பிர்மாவின் ரூபமாகவுடையதென்றும், மத்யாஹ்னத்தில் வைஷ்ணவீசந்தி விஷ்ணு ரூபமாக உடையதென்றும், சாயங்காலத்தில் ரௌத்ரீ சந்தி ருத்ர ரூபமாகவுடையதென்றும், நாலாங்கால சந்தி மூவர் ரூபமாய் இருக்குமென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

### காலைச் சந்தியின் தியானம்

பிராதக் காலத்தில் ஆகாயம் நக்ஷத்திரத்துடன்கூடியிருக்கும் பொழுது பிராஹ்மீசந்தியை சிவப்புப் புஷ்பம் சிவப்பு

வஸ்திரங்களை உடையவளாயும், சிவப்பு நிறமுடையவளா யும், ஜடை யக்ஞோப விதங்களை உடையவளாயும், அன்னப் பறவையில் பத்மாஸனமாய் அமர்ந்திருப்பவளாயும், இளமைப் பருவத்தையுடையவளாயும், நான்குமுகம் நான்கு கைகளை யுடையவளாயும், வலதுகைகளில் சுருக்கு அக்ஷமாலைகளையும் இடது கைகளில் தண்டம் கமண்டலங்களை!உடையவளாயும், எட்டுக் கண்களையுடையவளாயும் தியானிக்க வேண்டும்.

## மத்தியான சந்தியின் தியானம்

மத்தியானத்தில் வைஷ்ணவீசந்தியைவெளுப்பு வஸ்திரம் தரித்திருப்பவளும், வெண்மை நிறமுள்ளவளும், துளசிமாலை உபவீதங்களைத் தரித்திருப்பவளும், கருடன்மேல் பத்மாசன மாக அமர்ந்திருப்பவளும், ப்ரௌடமான அழகிய யௌவ னத்தையுடையவளும், இடது கைகளில் சங்கு சக்ரங்களையும் வலது கைகளில் கதை அபயங்களையும் உடையவளும், எல்லா ஆபரணங்களையும் அணிந்திருப்பவளுமாகத் தியானிக்க வேண்டும்.

## ரௌத்ரீ தியானம்

பின்னர், சூரியன் பாதிமறையும் ஸமயத்தில் ரௌத்திரீ சந்தியைக் கருமை நிறத்தையும், சிறிது நழுவின யௌவனத் தையும், நான்கு கைகளையும், மூன்று கண்களையும், ஜடையை யும், பாதிச் சந்திரனையும், வலது கைகளில் திரிசூலம் அக்ஷ மாலைகளையும். இடது கைகளில் அபயம் சக்திகளையும், இடபத் தின்மேல் பத்மாசனமாக அமர்ந்திருத்தலையும் உடையவளா கத் தியானிக்க வேண்டும்.

## நான்காவதுகால சந்தியின் தியானம்

பின்னர், நடுஇரவில் நான்காவது காலத்துச் சந்தியா தேவதையை முகத்தில் கருமைநிறத்தையும், இருதயத்தில் வெண்மை நிறத்தையும், கால்களில் சிவப்பு நிறத்தையும் உடையவளாகவும், சிம்மத்தின்மீது பத்மாசனமாக அமர்ந் திருப்பவளாகவும், சூலம் பாசம் கதை கட்கம் கேயம் பாணம் வில் அபயம் என்னும் இவற்றைக் கைகளிலுடையவளா கவும், கரண்டமகுடமுடையவளாகவும், புன்சிரிப்பையுடைய வளாகவும், இரண்டு காதுகளையுடையவளாகவும், குண்டலத் தையும் பத்திரத்தையும் அணிந்தவளாகவும், பலநிறங்களை

யுடைய வஸ்திரம், பல நிறங்களையுடைய உபவீதங்களை யுடையவளாகவும், பலவித நிறங்களையுடையவளாகவும் தியானிக்க வேண்டும்.

யோகஜம் என்னும் ஆகமத்தில் ''தீக்ஷை சம்ஸ்காரங்களால் பரிசுத்தமானவராயும், ஆசாரியாபிஷேகம் பெற்றவராயும் உள்ள ஆசிரியர் நடு இரவில் நான்காவது காலத்துச் சந்தியை அநுஷ்டிக்க வேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

### மார்ஜனம் (சுத்தி செய்தல்)

இவ்வாறு அதிகாரி முறைப்படி தியானித்து அந்தந்தச் சந்தியா தேவதைகளின் பிரபாமண்டலத்தின் மத்தியில்இருக்கிறவனுகத் தன்னைப் பாவித்து, சிவதீர்த்தத்தை வலது கையால் எடுத்து, இருதயமந்திரத்தால் இடது கையில் வார்த்து சம்ஹிதாமந்திரத்தால் ஒருமுறை அபிமந்திரித்துக் கும்பமுத்திரை செய்து, வௌஷடந்த மூலமந்திரத்தால் தலையில் ஒருமுறை அபிஷேகஞ்செய்து, மீண்டும் ஜலத்தை ஸம்ஹிதை மந்திரங்களாலே அபிமந்திரித்து, அந்த ஜலத்தைத் தர்ப்பத்துடன் இடதுகையில் வைத்து அந்தக்கையின் விரல்களின் இடையிலிருந்தும் பெருகும் நீரைச் சிரசில்வலது கையால் வௌஷ்டந்த சம்ஹிதை மந்திரத்தால் புரோக்ஷித்துக் கொள்ளல் வேண்டும்.

### அகமர்ஷணம்

பின்னர்,இடதுகையில் எஞ்சிய நீரை வலக்கையில் வாங்கிச் சுத்தமாகவும் தர்மசொருபமாகவும் பாவித்து, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு பூரகஞ்செய்து, இடதுநாசிவழியாக உள்ளே பிரவேசித்ததாகப் பாவித்துக் கும்பகஞ்செய்து, அந்தக்கும்பக வாயுவால் தங்கியிருக்கும் அந்தஜலம் உள்ளே உள்ள பாவத்தை நாசஞ்செய்ததால் கருமையாகவும் பாவரூபமாகவும் இருப்பதாகத் தியானித்து ரேசகஞ்செய்து, மூலமந்திரம் அஸ்திரமந்திரங்களை யுச்சரித்துக்கொண்டு வலது நாசிவழியாக வலதுகையில் கிரகிக்கப்பட்டதாகப் பாவித்துப் புருவநெரிப்புடனே வலதுகால் பெருவிரலின்மேல் மூலமந்திரத்தை உச்சரித்து விடவேண்டும்.

### சூரிய காயத்ரீ ஜபம்

பின்னர், ஆசமனஞ்செய்து சகளீகரணஞ்செய்து ஜலத்தைக் கவசமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சுற்றிச் சூரியனைத் தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு:—

செம்மை நிறமுடையவராயும், இரண்டு நேத்திரங்களை யுடையவராயும், தெளிவான முகமுடையவராயும், இரண்டு கைகளில் தாமரைப்பூவை வைத்துக்கொண்டிருப்பவராயும், பிரபாமண்டலத்தால் அலங்கரிக்கப்பட்டவராயும், ஏனைய கிரகங்களுக்கு அதிபதியாயும், வரத்தைக் கொடுப்பவராயு மிருக்கும் சூரியபகவானைத் தியானிக்கின்றேன் என்பதாம்.

இவ்வாறுதியானித்தபின்னர் * சூரியகாயத்ரிமந்திரத்தை ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியிலுடையதாக உச்சரித்துக்கொண்டு மூன்று அருக்கியங்கள் கொடுக்கவேண்டும். சித்ததந்திரமென்னும் நூலில் ''ராக்ஷஸர்கள் மூன்று சந்திகளிலும் சூரியனுடைய மார்க்கத்தைத் தடை செய்துகொண்டிருக்கின்றனர். அவர்கள் நாசமடைதற்பொருட்டு அஸ்திர மந்திரத்தை உச்சரித்து அர்க்கியங்கொடுக்கவேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

## சதாசிவத் தியானமும், காயத்ரீ ஜபமும்

பின்னர், சூரியமண்டலத்தின்மத்தியில் சதாசிவ ரூபத்தைத் தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு:—

''வெண்மை நிறத்தையும், ஸர்ப்பம் சூலம் பாசம் பரசு அக்நி கட்கம் அங்குசம் வச்சிரம் வரதம் அபயம் என்னுமிவற்றையும் உடையவராயும், ஐந்து முகங்களையும் ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்களையும் உடையவராயும், தலையில் சர்ப்பம் சந்திரன் கங்கைகளையுடையவராயுமிருக்கும் தேவர்களுக்கும் தேவரான ஸதாசிவரை நமஸ்கரிக்கின்றேன்'' என்பதாம்.

சதாசிவருடைய இடதுபக்கத்தில் மனோன்மனியைத் தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு:—

செம்மை நிறமுடையவளாயும், இரண்டு கண்களையும் மூன்று மடிப்புக்களையும் தெளிவான முகத்தையும் கூந்தலில் புஷ்பத்தையும் உடையவளாயும், இடது கையைத் தொங்கவிட்டுக்கொண்டு வலது கையில் பத்மத்தை வைத்திருப்பவளாயும், காதுகளில் ஆபரணமணிந்திருப்பவளாயும், பத்மாசனத்துடன் அமர்ந்திருப்பவளாயும் தியானிக்கவேண்டும் என்பதாம்.

---

* அச்வத்வஜாயவித்மஹே பத்மஹஸ்தாய தீமஹி
தந் நஸ்ஸூர்ய; ப்ரசோதயாத், என்பது சூரியகாயத்ரியாகும்.

சதாசிவரது வலப்பக்கத்தில் சிவகாயத்ரியைத் தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு:—

''உருக்கின தங்கத்தின் நிறத்தையுடையவளும், மூன்று கண்களும் வரம் அபயம் அக்கமாலை கமண்டலம் என்னும் இவற்றைத் தரித்திருப்பவளும், நான்கு கைகளையுடைவளுமாகத் தியானிக்க வேண்டும்'' என்பதாம். இவ்வாறு சிவகாயத்திரியைத் தியானஞ் செய்தபின்னர் ''ஓம் தந்மஹேசாய வித்மஹே வாக்விசுத்தாய திமஹி தந்நஸ்சிவ: ப்ரசோதயாத்'' என்ற சிவகாயத்திரி மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு மூன்று அர்க்கியங்கள் கொடுக்கவேண்டும்.

சந்திரஞானமென்னும் ஆகமத்தில் ''சிவ்காயத்திரியின் கிரியா சரீரம் பாவனுசரீரம் மந்திரசரீரம் ஆகிய மூன்றும்சிவனுடையனவே; கிரியாசரீரம் ஆதித்தனிடத்தில் விளங்கித் தோன்றுகின்றது. மந்திரசரீரம் பாவனுசரீரமாகிய இரண்டும் மந்திரத்தினிடத்தும் பாவனையிடத்தும் விளங்கித் தோன்றுகின்றன. சிவரூபியான காயத்திரியை இவ்வாறன்றி வேறு விதமாக எவன் நினைக்கின்றானே அவன் இருபத்தொரு கொடிய நரகத்தில் உழலுவன்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

பின்னர் பத்துமுறை சிவகாயத்திரியை ஜபித்து மீண்டும் பஞ்சப்ரஹ்மமந்திரம் அங்கமந்திரங்களால் சக்தியுடன் கூடிய பஞ்சா வரணதேவதைகளுக்குத் தர்ப்பணஞ் செய்ய வேண்டும்.

## ஐந்து தர்ப்பணம்

பின்னர் தேவதிர்த்தத்தால்''வாமதேவாய ஸ்ர்வேப்யோ தேவேப்யஸ்வாஹா'' என்று உச்சரித்துத் தேவதர்ப்பணமும்,

தர்ப்பையுடன்கூடி உபவீதத்தை மாலையாகப் போட்டுக் கொண்டு இருஷிதிர்த்தத்தால் ஓம் ஹூம் அகோராய ஸர்வேப்யோ தேவேப்யருஷிப்யோ நம: என்று உச்சரித்து இருஷி தர்ப்பணமும்

விரல்களின் நடுவால்தத்புருஷாயஸர்வேப்யோ மநுஷ்யேப்யோ வௌஷட் என்று மநுஷ்யதர்ப்பணமும்,

கடைவிரல்களின் அடிப்பிரதேசத்தால் ஈசானய ஸர்வேப்யோ பூதேப்யோ ஹூம்பட் என்று பூததர்ப்பணமும்,

மணிக்கட்டில் எள்ளை வைத்துக்கொண்டு பூணூலை இடமாகப் போட்டுச் சுட்டுவிரல் பெருவிரல்களின் அடிவழியாக ஓம் ஹாம் சத்யோஜாதாய ஸர்வேப்ய: பிதிர்ப்யஸ்வதா, ஸர்வேப்யோ மாதிருப்யஸ்வதா. ஸர்வேப்யோ க்ஞாதிப்யஸ்வதா, ஸர்வேப்ய ஆசார்யேப்யஸ்வதா என்று உச்சரித்துக் கொண்டு பிதிர் தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

சந்திரக்ஞானமென்னும் ஆகமத்தில், ''விரல்களைப் பரப்பி வைத்துக்கொண்டு தேவதர்ப்பணமும், கைகளின் பக்கப் பிரதேசத்தால் இருஷிதர்ப்பணமும், விரல்களின் இடைகளால் மநுஷ்யதர்ப்பணமும், கடைவிரல்களின் அடியால் பூத தர்ப்பணமும், சுட்டுவிரல் பெருவிரல்களின் மத்தியத்தால் பிதிர்தர்ப்பணமும் செய்யவேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

## அநுஷ்டானத்தின் முடிவு

பின்னர், ஆசமனஞ்செய்து, சகளீகரணஞ்செய்து, ஹ்ரஸ்வ ப்ராசாதத்தினல் சிவதீர்த்தத்தை உபஸம்ஹாரஞ் செய்து, சம்ஹிதா மந்திரங்களால் ஆதித்தமூர்த்தியினிடத்தில் சிவனை உபஸம்ஹாரஞ் செய்து, பரிசுத்தமான இடத்தை அடைந்து அஸ்திரமந்திரத்தால் ப்ரோக்ஷித்து உட்கார்ந்து, பிராணயா^^ம் சகளீகரணங்கள் செய்து, நூறு முறையாவது ஐம்பது முறையாவது, இருபத்தைந்து முறையாவது, பத்து முறையாவது மூலமந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

யோகஜம் என்னும் ஆகமத்தில் ''காலையில் ஜபம் செய்யும்பொழுது முக அளவாகவும், மத்தியாநத்தில் இருதய அளவாகவும், சாயங்காலத்தில் நாபி அளவாகவும் கைகளை வைத்துக்கொண்டு ஆடையால் கையை மூடி எண்ணிக்கை செய்து ஜபிக்கவேண்டும். மனத்தால் சிந்திக்கவும் வேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஜபத்தின் இறுதியில் ஆசமனம் செய்து பிரணவத்தால் புரோக்ஷிக்கவேண்டும். சரியான காலத்தில் அனுட்டானம் செய்யாது விட்டால் பிராயச்சித்தமாக சம்ஹிதாமந்திரங்களை ஒருமுறை ஜபிக்கவேண்டும்.

அகோர சிவாசாரியர் இயற்றிய
பரார்த்த நித்யபூஜாவிதியில் பூர்வபாகமான
அநுஷ்டான முறை முடிந்தது.

சிவமயம்

ஸ்ரீமத் அகோரசிவாசாரியர் இயற்றிய

## சிவாலய நித்திய பூஜாவிதியென்னும்

# ஸ்ரீ பரார்த்தநித்தியபூஜா விதி

## (உத்தர பாகம்)

### மங்கல வாழ்த்து

பசுக்களுக்குப் பாசநீக்கத்தைச் செய்யும் பதியான பரம சிவனை நமஸ்கரித்து, பரார்த்தநித்ய பூஜை செய்தற்கு இலகுவாயும் மங்களமாயுமிருக்கும் பத்ததியானது என்னால் செய்யப்படுகிறது.

முன்னர்க் கூறியவாறு தன்னுடைய நித்திய அநுட்டானங்களை முடித்துக்கொண்ட ஆசாரியர், சூரியோதயத்திற்கு முன் மூன்றேமுக்கால் நாழிகையிருக்கும்பொழுதே சிவாலயத்திற்குச் சென்று, வாயிலில்நின்று கால்களைக் கழுவி உள்ளே சென்று, ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து, துவாரபாலர்களை வணங்கி, ஸ்நபன மண்டபத்தையடைந்து, இடபத்தின் முன் தேவர்க்கும் தேவரான ஈசுவரரை நமஸ்கரித்து, மூலமந்திரத்தையுச்சரித்துப் புஷ்பாஞ்சலி சொரிந்து, புண்யாஹவாசனம் செய்யக்கூடியவிடத்தில் வடக்கு முகமாகக் கூர்மாசனத்தின் மீது சுகாசனமாக அமர்ந்து, அஸ்திரமந்திரத்தையுச்சரித்து மூன்று தாளங்கள் செய்து சாமான்யார்க்யம் முதலியவற்றைச் சேகரித்துவைத்துக்கொண்டு அந்தத் தீர்த்தத்தால் தன்னைப் புரோக்ஷித்துக்கொண்டுகரநியாசஞ்செய்யவேண்டும்.

### கர நியாசம்

சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரக்ரமமாகிய மூன்றிலும் முன்போல் கைகளைத் துடைத்தல், நனைத்தல் முதலியவற்றைச் செய்து, பஞ்ச ப்ரஹ்மமந்திரங்களை நியாசஞ்செய்யு முறையில் சிருஷ்டிக்ரமமாக நியாசஞ்செய்யும்பொழுது பெருவிரல்முதல் கடைவிரல் ஈருகவும், ஸ்திதிக்ரமமாக நியாசஞ்செய்யும் பொழுது நடுவிரல்முதல் சுட்டுவிரலீருகவும், சங்காரக் கிரம

மாக நியாசஞ் செய்யும்பொழுது கடைவிரல்முதல் பெருவிரல் ஈருகவும் பஞ்சப்ரஹ்மமந்திரங்களை நியாசஞ் செய்து, வித்யா தேகம் நேத்ரமென்னும் இவற்றை அவற்றிற்குரிய மந்திரங்களால் நியாசஞ்செய்து, சிவமந்திரத்தைக் கணுக்கள் தோறும் நியாசஞ்செய்து, கடைவிரல் முதல் பெருவிரல் ஈருக ஷடங்க மந்திரங்களையும் நியாசஞ் செய்யவேண்டும்.

## பிராணுயாமஞ் செய்யுமுறை

பின்னர், ரேசகம் பூரகம் கும்பகம் என்னும் முறையாக இடைகலை, பிங்கலை, சுழுமுனை, என்னும் மூன்று நாடிகளிலும் பிராணவாயு அபானவாயு என்னும் இவற்றிற்குச் சமமான சேர்க்கையை முறையே செய்துகொண்டு மூன்று பிராணுயாமங்களைச் செய்யவேண்டும்.

அதாவது முறையாக அணிவிரல் பெருவிரல்களால் வலது நாசியை மூடிக்கொண்டு உள்ளிருக்கும் அசுத்தமான பிராணவாயுவை மந்திரமின்றி இடதுநாசிவழியாக ரேசகத்தால் வெளியில் போகச் செய்யவேண்டும். பின் வலதுநாசி வழியாக உகாரபீஜத்தை உச்சரித்துக்கொண்டு சந்திரனுடைய சொரூபமாயும், விஷ்ணுவை தேவதையாகவுடையதாயும் இருக்கும் பூரகத்தைப் பன்னிருமாத்திரை யளவாகச் செய்யவேண்டும். பின்னர் இரண்டு நாசிகளையும் மூடிக்கொண்டு மகாரபீஜத்தை உச்சரித்து சூரியனுடைய சொரூபமாயும், உருத்திரரைத் தேவதையாகவுடையதாயுமிருக்கும் கும்பகத்தைப் பதினுறு மாத்திரையளவாகச் செய்து, இடது நாசிவழியாக அகாரபீஜத்தையுச்சரித்துக்கொண்டு, பிரமனைத் தேவதையாகவுடையதாயும், அக்னி சொரூபமாயுமிருக்கும் ரேசகத்தை ஏழுமாத்திரையளவாகச் செய்யவேண்டும். இம்முறையாகக் கூறப்பட்ட தேவதைகளின் தியானம் மாத்திரையளவு இவற்றுடன் பூரகம் கும்பகம் ரேசகங்களைச் *செய்துகொள்க.

## பூத சுத்தி

பின்னர், பிருதிவி தத்துவத்தைப் பாதம் முதற்கொண்டு முழங்கால்வரை வியாபித்திருப்பதாயும், நிவிருத்திகலாரூப

*சம்ஹிதாமந்திரங்களால் மூன்றுபிராணுயாமங்களைச் செய்யவேண்டும் என்று கூறுவர்: இங்குள்ள பிராணுயாமவிதிகாரணுகமத்தை ஒத்தது.

மாயும், மஞ்சள் நிறமாயும், நாற்கோணமாயும், சப்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் ஐந்து குண்டலங்களுடன் கூடிய தாயும், ஸத்யோஜாதமூர்த்தியைத் தேவதையாகவுடைய தாயும், காரணேசுவரரான பிரமாவுடன் கூடியதாயுமிருக்கும் என்று தியானித்து, இருதயமுதலாகச் செய்யுமுறையில் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் என்னும் பீஜாக்கரத்தை ஐந்து மாத்திரைகளுடன் இருதயாய நம: என்னும் மந்திரத்தால் இருதயத்தின்மேல் சேர்த்துப் பிருதிவீதத்துவ சோதனை செய்கின்றேன் என்று சொல்லிக்கொண்டு பிருதிவி தத்துவ சோதனை செய்யவேண்டும்.

பின்னர், அப்புதத்துவத்தை முழங்கால் முதற்கொண்டு நாபி அளவாக வியாபித்திருப்பதாகவும், பிரதிட்டா கலாரூபமாகவும் வெண்மை நிறமாகவும், பாதிச் சந்திர வடிவமாகவும் சத்தம் பரிசம் ரூபம் ரஸம் என்னும் நான்கு குணங்களுடன் கூடியதாகவும், வாமதேவமூர்த்தியைத் தேவதையாகவுடைய தாகவும், காரணேசுவரரான விஷ்ணுவுடன் கூடியதாகவும் தியானித்து, ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் என்னும் பீஜாக்கரத்தை நான்கு மாத்திரையுடன் ஸ்வாஹாந்த சிரோமந்திரத்தாற் சிரசில் சேர்த்து, அப்புதத்துவ சோதனை செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு அப்புதத்துவ சோதனை செய்யவேண்டும்.

பின்னர் அக்கினிதத்துவத்தை நாபிமுதல் இருதயம் அளவாக வியாபித்திருப்பதாகவும், வித்யாகலாரூபமாகவும், செம்மை நிறமுடையதாகவும், முக்கோண வடிவாகவும், அகோரமூர்த்தியைத் தேவதையாகவுடையதாகவும், காரணேசுவரரான உருத்திரருடன் கூடியதாகவும், சப்தம் பரிசம் ரூபம் என்னும் மூன்று குணங்களுடன் கூடியதாகவும், தியானித்து, ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் என்னும் பீஜாக்கரத்தைமூன்று மாத்திரையுடன் வஷடந்தமான சிகாமந்திரத்தால் சிகையில் சேர்த்து, அக்கினிதத்துவசோதனை செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு அக்கினி தத்துவ சோதனை செய்ய வேண்டும்.

பின்னர், வாயுதத்துவத்தை இருதயம் முதல் புருவநடு வரை வியாபித்திருப்பதாகவும், சாந்திகலாரூபமாகவும், கருமை நிறமுள்ளதாகவும், அறுகோணவடிவமுள்ளதாகவும், தத்புருஷமூர்த்தியைத் தேவதையாகவுடையதாகவும், கார

ணேசுவரரான மகேசுவரருடன் கூடியதாகவும், சப்தம் பரிசம் என்னும் குணங்களுடன் கூடியதாகவும் தியானித்து, ஹ்ரையம் ஹ்ரையம் என்னும் பீஜாக்கரத்தை இரண்டு மாத்திரையுடன் ஹூம் பதம் இறுதியான கவசமந்திரத்தால் கவசத்தானத்தில் சேர்த்து, வாயுதத்துவத்தைச் சோதிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு வாயுதத்துவசோதனை செய்யவேண்டும்.

பின்னர், ஆகாயதத்துவத்தைப் புருவமுதற்கொண்டு பிரமரந்திரமீருக:வியாபித்திருப்பதாகவும், சாந்தியதிதகலா ரூபமாகவும், புகை நிறமாகவும், வட்டமாகவும், ஈசானமூர்த்தியைத் தேவதையாக உடையதாகவும், காரணேசுவரரான சதாசிவருடன் கூடியதாகவும், சப்தகுணம் ஒன்றுடன் மாத்ரம் கூடியதாகவும் தியானித்து ஓம் ஹௌம் என்னும் பீஜாக்கரத்தை ஒரு மாத்திரை அளவாக நேத்ரேப்யோ வௌஷட் அஸ்திராயபட் என்னும் மந்திரங்களுடன் நேத்திர அஸ்திர ஸ்தானங்களிற் சேர்த்து ஆகாசதத்துவசோதனை செய்கிறேனென்று சொல்லிக்கொண்டு ஆகாயதத்துவசோதனை செய்ய வேண்டும். இவ்வாறு பஞ்சகலாரூபமாக. பூதசுத்தியைச் செய்யவேண்டும்.

## * சோஷணம், பிண்டீகரணம்

பின்னர், † பாசுபதமந்திரத்தை உச்சரித்து முழங்கால், நாபி, இருதயம், கழுத்து, நெற்றி என்னும் இந்த ஸ்தானங்களிலுள்ள ஐந்து முடிச்சுகளையும் முறையே ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று எண்ணுள்ள அங்குசமுத்திரைசெய்து அறுத்தல்வேண்டும். பின்னர், மூலமந்திரத்தையுச்சரித்து, சம்ஹாரமுத்திரைசெய்துகொண்டு, வயிற்றின் வலது இடது நடு மேல் கீழ் ஆகிய ஸ்தானங்களிலுள்ள பிராணவாயுவைப் பூரகஞ்செய்து எடுத்து, ஐந்து ஆன்மா (பூதாத்மா, அந்தராத்மா, தத்துவாத்மா, ஜீவாத்மா, மந்திராத்மா)க்களையும் கும்பகத்தால் ஒன்ருகச்செய்து, ரேசகத்தால் துவாதசாந்தத்தில் சேர்க்கவேண்டும். பின்னர் ரம் என்னும் அக்கினி பீஜத்தை உச்சரித்துக்கொண்டு, பாவாத்மாவை காலாக்னியால் கும்பகஞ் செய்து எரித்து, ரேசகத்திஞல் துவாதசாந்

* சோஷணம்:— உலர்த்துதல். பிண்டீகரணம் — பிண்டமாகச் செய்தல்.

† ஓம் ஶ்லீம் பசும் ஹூம் பட் பாசுபதாஸ்த்ராய நம என்பது பாசு பதாஸ்திரம்.

தம்வரை கொண்டு போய், அங்குள்ள அமிருதத்தால்வம் என்னும் பீஜத்தையுச்சரித்து அந்தப் பஸ்மத்தை நனைத்து, லம் என்னும் பீஜாக்கரத்தை உச்சரித்துப் பூரகஞ்செய்து, கைகால் முதலிய அவயவங்களைப் பிண்டமாகத் தியானித்து, அதன் மத்தியத்தில் வம் என்னும் பீஜாக்கரத்தையுச்சரித்துக் கொண்டு கும்பகத்தினால் ஜீவான்மாவை நியாசஞ் செய்து, ஹம் என்னும் பீஜாக்கரத்தை உச்சரித்துக்கொண்டு பூரக கும்பக ரேசகங்களைச் செய்து, சிருட்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபாவம், அனுக்கிரகமென்னும் இவற்றைச் செய்பவரான பிரமன் விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய இவர்களைக் காரணேசுவரர்களாகவுடைய முழங்கால், நாபி, இருதயம், கழுத்து, நெற்றி ஆகிய ஸ்தானங்களில் பஞ்சப் பிரமமந்திரங்களையும், ஷடங்க ஸ்தானங்களில் ஷடங்கமந்தி ரங்களையும், ஆறு * அத்துவாக்களையும் நியாசஞ் செய்து, தன் சரீரத்தைத் திவ்யசரீமாகப் பாவிக்கவேண்டும்.

### † அங்க நியாசம்

பின்னர், இருதயத்தில் சிவாசனாய நம:, சிவமூர்த்தயே நம: என்று ஆசனமூர்த்திகளைப் பூசித்து, பின் சிருட்டிக்கிரம மாக நியாசஞ்செய்யும்பொழுது மூர்த்தா முகம் இருதயம் குஹ்யம் பாதம் ஆகிய ஸ்தானங்களில் ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதமாகிய மந்திரங்களையும், ஸ்திதிக்கிரமமாக நியாசஞ் செய்யும்பொழுது இருதயம், குஹ்யம், பாதம், மூர்த்தா, முகம் ஆகிய ஸ்தானங்களில் அகோரம், வாமதேவம், சத்யோஜாதம், ஈசானம், தத் புருஷம், ஆகிய மந்திரங்களையும் சங்காரமுறையாக நியாசம் செய்யும்பொழுது பாதம், குஹ்யம், இருதயம், முகம், மூர்த்தா ஆகிய ஸ்தானங்களில் சத்தியோஜாதம் வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம், ஆகிய மந்திரங்களையும் நியாசஞ்செய்து, முன்போல் வித்யாதேகம் நேத்திர மந்திரம் சிவமந்திரங்களை நியாசஞ்செய்து, இருதயம், சிரசு, சிகை, கவசம், அஸ்திரம், (கரம்) ஆகிய ஸ்தானங்களில் அந்தந்த

---

* ஷடத்வநியாசம் செய்யுமுறை சிவலிங்கப்ரதிஷ்டாவிதியில் இருக்கின்றது.

† இங்கு கரநியாசத்தையு ம்செய்யவேண்டுமென்பது சிலர்கொள் கை.

மந்திரங்களை நியாசஞ்செய்து ஹூம்பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திரமந்திரத்தால் மூன்று தாளங்களையும் சோடிகாமுத்திரையையும் செய்து திக்பந்தனத்தையும். செய்யவேண்டும். பிறகு மகா முத்திரைசெய்து பஸ்மதாரணஞ் செய்யவேண்டும்.

பின் தண்டபங்கி முண்டபங்கி வக்த்ரபங்கிகளைப் பின்னர் ஆவாஹனவிதியில் கூறப்படுமாறுசெய்து ஹௌம் என்பது முதலான பீஜங்களுடன் சாந்தியதிதை முதலிய கலைகளையும் நியாசஞ் செய்யவேண்டும்.

### அந்தர்மாதிருகாநியாசம். (மாதிருகை அக்ஷரம்)

பின்னர், மூலாதாரத்தில் நான்கு தளங்களில் ஓம், ஹாம், வம், சம், ஷம், ஸம் சதுர்தளபத்மநிவாஸினே ஸித்தலக்ஷ்மீ வல்லபா ஸமேதாய கணபதயே ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸஸ் வாஹா என்றும், சுவாதிட்டானத்தில் ஆறு தளங்களில் ஓம் ബം, ഭം, மம், யம், ரம், லம் ஷட்தளபத்மநிவாஸினே ஸாவித்ரீகாயத்ரி ஸமேதாய ப்ரஹ்மணே ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸ ஸ்வாஹா என்றும், மணிபூரகத்தில் பத்துத் தளங் களில் ஓம் ഡം, ഢം, ணம், தம், ഥം, ദം, ധം, நம், பம், ഫം தசதளபத்மநிவாஸிநே தராலக்ஷ்மீஸமேதாய விஷ்ணவே ஹம்ஸஸ் ஸோஹம் ஹம்ஸஸ்ஸ்வாஹா என்றும், அநாஹ்தத் தில் பன்னிருதளங்களில் ஓம், கம், ഖം, ഗം, ഘം, ങം, சம், ഛം, ஜம், ഝം, ஞம், டம், ഠം த்வாதசதள பத்மநிவாஸிநே கௌர்யம்பிகா ஸமேதாய ருத்ரேச்வராய ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸஸ்வாஹா என்றும், விசுத்தத்தில் பதினாறு தளங்களில் அம், ஆம், இம், ஈம், உம், ஊம், ഋം, ൠം, ഌം, ൡം, ஏம், ஐம், ஓம், ஔம், அம் அ: ஷோடசதள பத்மநிவாஸிநே உந்மனு வாக்வாதினி ஸமேதாய மகேச்வராய ஹம்ஸஸ்ஸோ ஹம் ஹம்ஸஸ்வாஹா என்றும், ஆக்ஞையில் இரண்டு தளங் களில்ஓம் ளம், க்ஷம் த்விதளபத்மநிவாஸிநே ப்ரஹ்மரந்திராந் தம் மனோன்மனி தர்மசத்தி ஸமேதாய சதாசிவாய ஹம்ஸஸ் ஸோஹம் ஹம்ஸஸ்வாஹா என்றும், துவாதசாந்தத்தில் ஓம் ஹம் ஸஹஸ்ரதளபத்மஸ்திதாய நாநாவர்ணுய மோக்ஷ சக்தி ஸமேதாய ஹம்ஸகுரவே ஹம்ஸஸ்ஸோஹம் ஹம்ஸஸ்வாஹா என்றும் நியாசஞ் செய்யவேண்டும்.

காரணுகமத்தில்—மூலாதாரம் விசுத்தி ஆக்ஞை என்னும் இந்த ஸ்தானங்களை சிருஷ்டிஸ்திதி லயரூபமாக முறையே

செய்து கொண்டு அவ்வாறே அந்தர் மாதிருகைகளை நியாசஞ் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

## பகிர் மாதிருகா நியாசம்

பின்னர் உச்சி, நெற்றி, இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இருகன்னங்கள், மூக்கு, இரண்டு உதடுகள், பற்களின் இரண்டுவரிசை, நா, இரண்டுதாலு (மோவாய்) ஆகிய இந்தப் பதினாறு ஸ்தானங்களிலும் பதினாறு அச்சு (உயிர்) எழுத்துக்களை நியாசஞ் செய்யவேண்டும்.

வலதுகையில் கவர்க்கத்தையும், இடதுகையில் சவர்க்கத்தையும், வலதுகாலில் டவர்க்கத்தையும், இடதுகாலில் தவர்க்கத்தையும், வலது பாருசுவத்தில் வகாரத்தையும், இடது பாருசுவத்தில் ஃபகாரத்தையும், இருதயத்தில் ஃபகாரத்தையும், வயிற்றில் றகாரத்தையும், நாபிக்குமேல் மகாரத்தையும், லிங்கத்தில் யகாரத்தையும், பீஜத்தின் மத்யத்தில் ரகாரத்தையும், மூலாதாரத்தில் லகாரத்தையும், குதத்தின் மேல்பிரதேசத்தில் வகாரத்தையும், வலதுமார்பில் ஶகாரத்தையும், இடதுமார்பில் ஷகாரத்தையும், நாபியில் ஸகாரத்தையும், கழுத்தில் ஹகாரத்தையும், புருவங்களின் இடையே ளகாரத்தையும், பிரமரந்திரத்தில் க்ஷகாரத்தையும், பிரணவம் பிந்து இவற்றுடன் ஆரோஹண அவரோஹணக்கிரமமாக நியாசஞ் செய்யவேண்டும்.

எவனுக்கு சௌகரியம் இருக்கின்றதோ, புத்திக்குக் கலக்கம் நேரிடவில்லையோ அவன் தத்துவதத்வேசுவர மூர்த்தி மூர்த்திசுவர * ஸ்ரீ கண்டநியாசம் முதலியவற்றையும் செய்யவேண்டும்.

## அஷ்டத்ரிம்சத்கலா நியாசம்

### (முப்பத்தெட்டுக் கலைகளின் நியாசம்.)

கிரியாக்கிரமதியோதிகையில் சகளீகரணப் பிரகாரத்தில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஓம் ஹோம் ஈசானஸ் ஸர்வவித்யநாம் சசிந்யை நம: என்று மேல்சிரஸிலும், ஓம் ஹோம் ஈசுவரஸ் ஸர்வபூதாநாம் அங்கதாயை நம: என்று கிழக்குச் சிரஸிலும், ஓம் ஹோம் ப்ரஹ்மாதிபதிர்

* ஸ்ரீ கண்டநியாசம் முதலியன செய்யுமுறை சிவலிங்கப்ரதிஷ்டாவிதி முதலிய நூல்களில் இருக்கின்றது.

ப்ரஹ்மணேதிபதிர் பரஹ்மா *இஷ்டாயை நம: என்று தெற்குச் சிரசிலும், ஓம் ஹோம் சிவோமே அஸ்து மரீச்யை நம: என்று வடக்குச்சிரசிலும், ஓம் ஹோம் ஸதாசிவோம் ஜ்வாலின்யை நம: என்று மேற்குச்சிரசிலும் இவ்வாறு ஈசானகலைகள் ஐந்தையும் நியாசம் செய்க.

ஓம் ஹேம் அவ்யக்தகலாயை நம: என்றுமேல்முகத்திலும் ஓம் ஹேம் தத்புருஷாயவித்மஹே சாந்தியை நம: என்று கிழக்கு முகத்திலும், ஓம் ஹேம் மஹாதேவாய தீமஹிவித்யாயை நம: என்று தெற்குமுகத்திலும், ஓம் ஹேம் தந்நோருத்ர! ப்ரதிட்டாயை நம: என்று வடக்குமுகத்திலும், ஓம்ஹேம் ப்ரசோதயாத்நிவிருத்யை நம: என்று மேற்குமுகத்திலும் இவ்வாறு தத்புருஷகலைகள் நான்கையும், நியாசஞ் செய்துகொள்க.

ஓம் ஹூம் அகோரேப்யஸ்தமாயை நம: என்று இருதயத்திலும், ஓம் ஹூம் அதகோரேப்யோ மோகாயை நம: என்று கழுத்திலும், ஓம் ஹூம் அகோரக்ஷயாயை நம: என்று வலது தோளிலும், ஓம் ஹூம் கோரதரேப்யோ நிஷ்டாயை நம: என்று இடதுதோளிலும், ஓம் ஹூம் ஸர்வேப்யஸ் ஸர்வமிருத்யவே: நம: என்று நாபியிலும், ஓம் ஹூம் ஸர்வேப்யோ மாயாயை நம: என்று வயிற்றிலும், ஓம் ஹூம் நமஸ்தே அஸ்துபயாயை நம: என்று முதுகிலும், ஓம் ஹூம் ருத்ரரூபேப்யோ ஜராயை நம: என்று மார்பிலும், இவ்வாறு அகோரகலைகள் எட்டையும் நியாசஞ்செய்க.

ஓம் ஹிம் வாமதேவாயநமோ ரஜாயை நம: என்று குஹ்யத்திலும், ஓம் ஹிம் ஜ்யேஷ்டாயநமோ ரக்ஷாயை: நம: என்று குறியிலும், ஓம் ஹிம் ருத்ராய நமோ ரத்யை நம: என்று வலது துடையிலும், ஓம், ஹிம் காலாய நம: பால்யை நம: என்று இடதுதுடையிலும். ஓம் ஹிம் கல காமாயை நம: என்று வலது முழங்காலிலும், ஓம் ஹிம் விகரணய நம: ஸம்யமின்யை நம; என்று இடதுமுழங்காலிலும், ஓம் ஹிம் பலக்ரியாயை நம: என்று வலதுகணுக்காலிலும், ஓம் ஹிம் விகரணய நமோ புத்யை நம: என்று இடது கணுக்காலிலும், ஓம் ஹிம்

* இஷ்டதாயை என்று சிவார்ச்சனசந்திரிகையில் இருக்கின்றது. இவ்வாறே சிவார்ச்சனசந்திரிகையில் கூறப்பட்ட சக்திகளுக்கும், இங்கு கூறப்பட்ட சக்திகளுக்கும் சிறிது மாறுதல் காணப்படுகின்றது.

பலகார்யாயை நம: என்று வலது அடிப்புறத்திலும், (குதிக்காலிலும்) ஓம் ஹிம் பரமதநாய நமோதாத்ரியை நம; என்று இடது அடிப்புறத்திலும், (குதிக்காலிலும்) ஓம் ஹிம் ஸர்வ பூததமநாயநமோப்ராமண்யை நம: என்று இடுப்பிலும், ஓம் ஹிம் மனோமோஹின்யை நம: என்று வலது பாருசுவத்திலும் ஓம் ஹிம் உன்மநாயநமோ பயாயை நம: என்று இடது பாருசுவத்திலும் இவ்வாறு வாமதேவகலைகள் பதின்மூன்றையும்நியாசஞ் செய்க.

ஓம் ஹம் ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி ஸித்யை நம: என்று வலது பாதத்திலும்' ஓம் ஹம் ஸத்யோஜாதாயவை நம: ருத்யை நம: என்று இடது பாதத்திலும், ஓம் ஹம் பவே சித்யை நம: என்று வலது உள்ளங்கையிலும், ஓம் ஹம் அபவே லக்ஷ்ம்யை நம; என்று இடது உள்ளங்கையிலும்; ஓம் ஹம் அநாதிபவேமேதாயை நம: என்று மூக்கிலும், ஓம் ஹம் பவஸ்வமாம் காந்த்யை நம: என்று சிரசிலும், ஓம் ஹம் பவஸ்வதாயை நம: என்று வலது புஜத்திலும், ஓம் ஹம் உத்பவாய நமோ த்ருத்யை நம: என்று இடது புஜத்திலும் இவ்வாறு சத்யோஜாதகலைகள் எட்டையும் நியாசஞ் செய்துகொள்க.

ஆகவே, ஈசானகலைகள் ஐந்து, தத்புருஷகலைகள் நான்கு, அகோரகலைகள் எட்டு, வாமதேவகலைகள் பதின்மூன்று, ஸத்யோ ஜாதகலைகள் எட்டு ஆக முப்பத்தெட்டுக் கலைகளின் நியாசம் இவ்வாறெனை அறிந்துகொள்க.

## * சிவஹஸ்தபாவனை

பின் தனது கைகளை, சிவனது கைகளாகப் பாவித்தற் பொருட்டு, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, சந்தனம் புஷ்பம் அக்ஷதை என்னும் இவற்றை வலதுகையில் இடது கைக்கட்டைவிரலால் வைத்துக்கொண்டு, நிரீக்ஷணம் முதல் அமிருதீ கரணமீறான கிரியைகளைச் செய்து, தர்மம் முதலிய ஆசன மந்திரங்களாலும் மூர்த்திமந்திரத்தாலும் அருச்சித்து, மூலமந்திரத்துடன் பஞ்சப்ர்ஹ்ம மந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் நியாசஞ்செய்து, கையைச் சோதிருபமாகத் தியானித்துச், சிவமந்திரத்தை உச்சரித்துச், சிரசில் வைத்துப் பின்னர் இரணடு கைகளையும் பிராசாதத்தை (சிவ மந்தி

* இந்த சிவஹஸ்தபாவனை தீக்ஷையிற்றான் என்பது சிலர் கொள்கை.

ரத்தை) உச்சரித்துக்கொண்டு திவ்யதிருஷ்டியால் பார்த்துத் தன் கைகளைச் சிவனது கைகளாகப் பாவிக்கவேண்டும்.

## அந்தர்யாகம்

பின்னர், மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அருக்ய ஜலத்தைச் சிவதீர்த்தமாகப் பாவித்து அம்ருதீகரணஞ் செய்து, அந்த ஜலத்தால் மூலமந்திரத்தை உச்சரித்துத் தன்னைப்புரோக்ஷித்துக் கொண்டு, புருவம் இருதயம் நாபி என்னும் இந்த ஸ்தானங்களில் சந்திரமண்டலம் சூரியமண்டலம் அக்கினி மண்டலங்கள் இருப்பனவாகச் சிந்தித்து, இருதயத்தில் உள்ள சூரியமண்டலத்தில் பரமசிவனைப் பஞ்சாஸனம் முதலியவற்றாலும் பஞ்சாவரண முறையாகவும் அருச்சித்து, நாபியில் உள்ள அக்னிமண்டலத்தில் மூலமந்திரத்தால் ஹோமத்தைச் செய்து, புருவங்களின் நடுவிலுள்ள சந்திர மண்டலத்தில் சுழுமுனநாடி வழியாகச் சோதியைத் தியானித்து அஹிம்ஸை, இந்திரியநிக்கிரஹம், க்ஷமை, க்ஞானம், தானம், தபசு, ஸத்யம், அன்பு ஆகிய அஷ்டபுஷ்பங்களால் அச்சோதியைப் பூசித்து, இருகைகளாலும் புஷ்பத்தை எடுத்துச் சிவோஹம்பாவனை செய்து சிரசில் வைத்துக்கொண்டு மூலமந்திரத்தைச் சக்திக்குத் தக்கவாறு ஜபிக்கவேண்டும்.

## க்ஷேத்ரபாலானுக்ஞை

பின்னர், பிராம்மணர்களுடன் புண்யாகத்தைச் செய்து ஆலயத்தைப் புரோக்ஷித்து சிவபூஜை செய்தற்கு உத்தரவு பெறுதற்பொருட்டு க்ஷேத்ரபாலருடைய சன்னிதிக்குச்சென்று துவார பூஜைசெய்து ஸாமான்யார்க்யத்தைச் செய்து கொள்ளல் வேண்டும்.

* செய்யுமுறை வருமாறு: ஆசமனம் சகளீகரணங்களைச் செய்து, சாமான்யார்க்ய பாத்திரத்தை அஸ்திரமந்திரத்தால் சுத்திசெய்து, வௌஷட் என்னும் பதத்தை இறுதியில் உடைய இருதய மந்திரத்தை உச்சரித்துச் சுத்தஜலத்தால் நிரப்பிப் பிரணவத்தால் ஏழுமுறை பூசித்து, அபிமந்திரித்து, ஸம்ரக்ஷணம் அவகுண்டனம் அமிருதீகரணங்களைச் செய்து, சாமான்யார்க்யத்தைச் செய்து கொள்ளல் வேண்டும்.

---

* சுப்பிரமணியப்ரதிஷ்டாவிதியில் சாமான்யார்க்யங் கற்பிக்குமுறை இவ்வாறு கூறியிருக்கின்றது.

பிறகு அந்தச் சாமான்யார்க்கிய ஜலத்தால் துவாரத்தை அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு புரோக்ஷித்து, துவாரத்தின் வலது பக்கத்தில் ஓம் ஹாம் வீரகணபதயே நம: என்றும், இடது பக்கத்தில் ஓம் ஹாம் சக்தி கணபதயே நம: என்றும், மத்தியத்தில் ஓம் ஹாம் மஹாலக்ஷ்ம்யை நம: என்றும், மீண்டும் துவாரத்தின் வலது பாகத்தில் ஓம் ஹாம் நவசக்திப்யோ நம: என்றும், துவாரத்தின் இடதுபாகத்தில் ஓம் ஹாம் அஷ்டசக்திப்யோ நம: என்றும், மீண்டும் துவாரத்தின் வலது பக்கத்தில் ஓம் ஹாம் தர்மத்வாரபாலாய நம: என்றும் துவாரத்தின் இடது பக்கத்தில் ஓம் ஹாம் அதர்மத்வார பாலாய நம: என்றும் பூசித்துப், பூமி ஆகாயம் தேவலோகம் என்னும் மூன்றிடங்களிலுள்ள மூன்று விக்கினங்களையும் விலக்கிக்கொண்டு, பிம்பத்தை அருக்யஜலத்தால் புரோக்ஷித்து, ஆபரணம் கந்தம் புஷ்பம் முதலிய நிர்மால்யத்தை நீக்கி, ஓம் க்ஷம் க்ஷேத்ர பாலாய நம: என்ற க்ஷேத்ரபால மூலமந்திரத்தால் பிம்பசுத்தி செய்து, ஆதாரசக்தயே நம: என்று ஆதார சக்தியைப் பூசித்து, அநந்தாய நம:, தர்மாய நம:, ஞாநாய நம:, வைராக்யாய நம:, ஐச்வர்யாய நம: பத்மாய நம: என்று சடுத்தாசனங்களைப் பூசித்து, ஓம் க்ஷம் க்ஷேத்ரபாலாஸநாய நம:, ஓம் க்ஷம் க்ஷேத்ரபாலமூர்த்தயே நம: என்று ஆசனமூர்த்தி மந்திரங்களால் ஆசனத்தையும் மூர்த்தியையும் பூசித்து, க்ஷேத்ரபாலரைத் தியானிக்கவேண்டும். தியானிக்கு முறை வருமாறு :—

"நிர்வாண ரூபத்தையும், மூன்று கண்களையும், சர்ப்பாபரணத்தையும், இரத்தின குண்டலங்களையும், சிரசில் மாலையையும், கட்கம், சூலம், கபாலம், டமருகம், கோரப்பல் என்னும் இவற்றையும் உடையவராய், சுவாநவாகனத்தின் மீது அமர்ந்திருக்கும் க்ஷேத்ரபாலரை வணங்குகிறேன்" என்பதாம். இவ்வாறு தியானித்து ஓம் ஹ்ராம், ஹ்ரீம், ஹ்ரூம், ஹ்ரைம், ஹ்ரௌம், க்ஷம், க்ஷேத்ரபாலாய நம: என்னும் க்ஷேத்ரபாலமூலமந்திரத்தால் ஆவாஹனஞ்செய்து, ஸ்தாபன முத்ரை முதலிய முத்ரைகளை க்ஷேத்ரபால மூர்த்திமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு காண்பித்து, எண்ணெய் முதலியவற்றால் அபிஷேகஞ்செய்து, அலங்கரித்து, க்ஷேத்ரபாலமூல மந்திரத்துடன் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்களையும் நியாசஞ் செய்யவேண்டும். நியாசஞ் செய்யுமுறை வருமாறு :—

ஓம் ஹோம் க்ஷம் க்ஷேத்ரபாலாய ஈசானமூர்த்தாய நம:,
ஓம் ஹேம் க்ஷம் க்ஷேத்ரபாலாய தத்புருஷவக்த்ராய நம:,
ஓம் ஹூம் க்ஷம் க்ஷேத்ரபாலாய அகோரஹ்ருதயாய நம:,
ஓம் ஹிம் க்ஷம் க்ஷேத்ரபாலாய வாமதேவகுஹ்யாய நம:,
ஓம்ஹம்க்ஷம்க்ஷேத்ரபாலாய சத்யோஜாதபாதாப்யாம்நம:,
ஓம் ஹாம் க்ஷம் க்ஷேத்ரபாலாய ஹ்ருத்யாய நம:,
ஓம் ஹிம் க்ஷம் க்ஷேத்ரபாலாய சிரசேசுவாஹா,
ஓம் ஹூம் க்ஷம் க்ஷேத்ரபாலாய சிகாயைவஷட்,
ஓம் ஹைம் க்ஷம் க்ஷேத்ரபாலாய கவசாய ஹூம்,
ஓம் ஹௌம் க்ஷம் க்ஷேத்ரபாலாய நேத்ரத்ரயாய வௌஷட்,
ஓம் ஹ: க்ஷம் க்ஷேத்ரபாலாய அஸ்த்ரார்யபட் என்றவாறும்.

இவ்வாறு நியாசம் செய்தபிறகு தேநுமுத்ரை பத்மமுத்ரை லிங்கமுத்ரை அஸ்த்ரமுத்ரை மகாமுத்ரை என்னும் இவற்றைக் காண்பித்து, தயிரன்னமேனும் பொரியேனும்நிவேதித்து தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்துப் பிரார்த்திக்கவேண்டும். பிரார்த்தனை வருமாறு :—

ஓ சுவாமின் க்ஷேத்ரபாலரே! பூமியில் உள்ள எல்லா ஜீவராசிகளையும் இரக்ஷிப்பதற்கான:சிவபூஜையைச் செய்வதற்காக முத்ரா தண்டத்தைத் தந்தருளும் என்பதாம்.

இவ்வாறு பிரார்த்தித்து நிரோதார்க்யம் கொடுத்து, நமஸ்காரமுத்ரை காண்பித்து, அங்குச முத்ரை செய்து கொண்டு முத்ராதண்டத்தைக் கிரகித்துக்கொள்ளல் வேண்டும்.

### சயநாலய பூசை (சயநாலயம்—பள்ளியறை.)

பின்னர், சயநாலயத்தின் வாயிலை அடைந்து, சிவனும் சத்தியும் நித்திரையை விட்டெழுந்தருளும் பொருட்டு, வாயிலின் பக்கத்தில்தேவதாஸிகளைக்கொண்டு கீதங்களையும்வாத்தியம் முதலியவற்றையும் படிக்கச் செய்து துவாரபூசை செய்ய வேண்டும். அது வருமாறு :—

ஓம் ஹாம் கம் கணபதயே நம: என்று தெற்குப் பக்கத்திலும், ஓம் ஹாம் சரஸ்வத்யை நம: என்று வடக்குப் பக்கத்திலும், ஓம் ஹாம் மகாலக்ஷ்ம்யை நம: என்று மத்தியத்திலும், ஓம் ஹாம் கங்காயை நம: என்று வலது பக்கத்திலும், ஓம் ஹாம் யமுனாயை நம: என்று இடது பக்கத்திலும், ஓம் ஹாம் நர்மதாயை நம: என்று மத்தியத்திலும், ஓம் ஹாம் கன்யா

பயோஷ்ண்யை நம:, ஓம் ஹாம் சிந்தவே நம: என்று மேலி டத்திலும், ஓம் ஹாம் துங்கபத்ராயை நம: ஓம் ஹாம் சந்த்ர பாகாயை நம: என்று கீழிடத்திலும் இவ்வாருக துவாரபூசை செய்து, ''ஓ வேதாந்தத்தால் அறியப்படுபவரே! எல்லா வுலகவடிவினரே! வியாபகரே! விருபாக்ஷரே! விசேஷமாக அறியப்படுபவரே! உலகத்திற்கு நாயகரே! விசேஷமான வடிவத்தையுடையவரே! காலனுக்குக் காலனுயிருப்பவரே! கதவைத் திறந்தருளல்வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டு கதவைத் திறக்கவேண்டும். பின்னர், மூன்று விக்கினங்களை யும் விலக்கிக்கொண்டு உள்ளே புகுந்து, அருக்யஜலத்தினுல் அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மஞ்சத்தின் திரை யைப் புரோக்ஷித்து கவசமந்திரத்தால் அப்யுக்ஷணஞ்செய்து, மஞ்சத்தின்மேல் அருக்யஜலத்தை ஸ்வத்துக்கொண்டு அந்த ஜலத்தால் அஸ்திரமந்திரத்தை உச்சரித்து மூர்த்தியைப் புரோக்ஷித்து நிர்மால்யத்தை விஸர்ஜனஞ்செய்து, திருவடி திருக்கரங்களின் சுத்தியின் பொருட்டு அஸ்திரமந்திரத்தை உச்சரித்து தீர்த்தத்தைச்சமர்ப்பித்து, அபிஷேகம் செய்வித்த தாகப் பாவித்து, மூலமந்திரத்தை உச்சரித்து அருக்யஜலத் தால் புரோக்ஷித்து, புதிதான வஸ்திரம் கந்தம் மாலை என்னும் இவற்ருல் அலங்கரித்து, மூலமந்திரம் பஞ்சப்ரஹ்ம மந்திரம் அங்கமந்திரம் என்னும் இவற்ருல் பூசித்து, சித்ரான்ன மேனும் பொரியேனும் நிவேதித்து, தூபம் தீபம் அருக்யம் தாம்பூலம் என்னும் இவற்றைச் சமர்ப்பித்து, சக்தியின்றித் தேவரைச் சிவிகைமீதாரோகணித்து, எல்லாவாத்தியோப சாரங்களுடனும் பரிஜனங்களுடனும் லிங்கத்தின் சன்னிதியை அடைந்து, அந்த மூர்த்தியை உத்பவமுத்ரை செய்துகொண்டு, புஷ்பத்தினுல் லிங்கத்தில் சேர்த்து, யதாஸ்தானத்தில் மூர்த் தியை வைத்துவிட்டு, பூசை செய்தற்பொருட்டு ஸ்நபன மண்டபத்தில் கூர்மாசனத்திலமர்ந்து ஸ்தான சுத்தி செய்ய வேண்டும்.

## ஸ்தான சுத்தி

அருக்யஜலத்தால் பூமியைப் புரோக்ஷித்து, அஸ்திரமந்தி ரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்று ஒட்டை அளவாகச் சது ரச்ரத்தைச் செய்து, வாமதேவமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்துப் பூமிதேவியின் பொருட்டு ஆசனம் முதல் ஆவாஹன மீருகவுள்ள கிரியைகளைச் செய்து தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு :—

இரண்டு கைகள், இரண்டு நேத்திரங்கள், கரண்டமகுடம் உடையவளாயும், கைகளை வரம் அபயமாகவுடையவளாயும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளாயுமுள்ள பூமிதேவியை வணங்குகின்றேன்'' என்பதாம். இவ்வாறு தியானித்து இருதய மந்திரத்தால் புரோக்ஷித்து அஸ்திரமந்திரத்தால் பூசித்து, நைவேத்தியம் அருக்கியம் என்னுமிவற்றைச் சமர்ப்பிக்கவேண்டும்.

## திரவிய சுத்தி

பின்னர் சங்கு, அருக்கியபாத்திரம், பாத்தியபாத்திரம், ஆசமனீய பாத்திரம், வர்த்தநிபாத்திரம் புஷ்பபாத்திரங்களையும், ஏனைய பாத்திரங்களையும், அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கழுவி, இருதயமந்திரத்தால் தாபித்துப்பார்த்து வர்த்தநிபாத்திரத்திலும் சங்கபாத்திரத்திலும் மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு நீரை நிரப்பி அமிருதீகரணஞ் செய்து, சிவமந்திரத்தால் வர்த்தநிபாத்திரத்தைப் பூசித்து, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலும் அங்க மந்திரங்களாலும் அபிமந்திரணஞ்செய்து அருச்சித்து, லிங்கமுத்திரை பத்மமுத்திரைகள் சமர்ப்பித்து, சங்கோதகத்திற்கு நீரீக்ஷணம் புரோக்ஷணம் தாடனம் அப்யுக்ஷணம் அவகுண்டனம் ஆகிய ஐந்து சுத்திகளையும் செய்து, மூலமந்திரத்தை உச்சரித்துப் பூசித்து, பதினொருமுறை சிவ மந்திரத்தால் அபிமந்திரணஞ்செய்து, தேநுமுத்திரை பத்ம முத்திரை லிங்கமுத்திரை அஸ்திர முத்திரை மகாமுத்திரைகள் சமர்ப்பித்து, தூபதீபம் சமர்ப்பித்து, அந்தச் சங்கு தீர்த்தத்தால் பூசாதிரவ்யங்களையும் ஹோமதிரவ்யங்களையும் புரோக்ஷிக்க வேண்டும்.

## பாத்தியம் அருக்கியம் ஆசமநீயங்களைக்கற்பிக்கு முறை

மூன்று கோஷ்டங்கள் கீறி, அந்தக்கோஷ்டங்களை ஓம் ஹாம் ஆத்ம தத்வகோஷ்டாய நம:, ஓம் ஹாம் வித்யா தத்வ கோஷ்டாய நம;, ஓம் ஹாம் சிவதத்துவ கோஷ்டாய நம: என்று பூசித்து, அந்தக்கோஷ்டங்களில் மூன்று பாத்திரங்களை முக்காலியில் வைத்து, அந்தப்பாத்திரங்களை ஓம் ஹாம் ஆதார பாத்ராய நம: ஓம்ஹாம் விஜய பாத்ராய நம:, ஓம் ஹாம் வ்யோமபாத்ராய நம: என்று பூசித்து, ''ஓ கூர்ச்சமே! கர்மாக்களை நாசஞ் செய்யும் குரூரர்களான அரக்கரை முதலாவது நாசஞ்செய்; உன்னை இந்தக் கும்பத்தில் அர்ப்பணஞ்செய்கிறேன்; நான் செய்யப்

புகும்காரியம் பயன்பெறுமாறு அருள்புரியவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டு கூர்ச்சத்தைப் பாத்தியபாத்திரத்தில் அர்ப்பணஞ் செய்யவேண்டும்.

பின்னர் பாத்தியபாத்திரத்தில் ''ஆபோவா இதகும் சர்வம்'' என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அரைப் படி ஜலத்தை நிரப்பி, ''ஈசாநஸ்ஸர்வவித்யாநாம்'' என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு குங்குமத்தைச் சமர்ப் பித்து, 'நாகேசுபர்ண' என்னும் மந்திரத்தால் விலாமிச்சை வேரை இட்டு, ''கந்தத்வாராம் துராதர்ஷாம்'' என்று உச்சரித்துச் சந்தனத்தைச்சாத்தி, 'தந்மஹே சாயவித்மஹே வாக்விசுத்தாயதீமஹி தந்நச்சிவ: ப்ரசோதயாத்' என்ற சிவகாயத்ரீமந்திரத்தால்அறுகைச்சாத்தி, 'கிதவாஸோயத்ரி ரிபுர்நதிவி' என்னும் மந்திரத்தால் வெண்கடுகு இட்டு, 'அத்யவோ சததிவக்தா' என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கவசமந்திரத்தால் கரைத்து, 'சந்நோதேவீரபிஷ்டய ஆபோப வந்துபீதயே சய்யோரபிஸ்ரவந்துந;' என்னும் மந்திரத்தால் பாத்யத்தை அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.

ஆசமனீயபாத்ரத்தில் யாதேருத்ரசிவாதநூ என்னும் மந்திரத்தால் கூர்ச்சத்தை இட்டு, அப: ப்ரணயதி என்னும் மந்திரத்தால் அரைமரக்கால் அளவான ஜலத்தை நிரப்பி, த்ரயம்பகம் யஜாமஹே என்னும் மந்திரத்தால் ஏலத்தைப் போட்டு, சந்நோவயகும்ஸி என்னும் மந்திரத்தால் சாதிக்கா யையும் போட்டு, ஸத்யோஜாதம்ப்ரபத்யாமிஎன்ற மந்திரத் தால் பச்சைக்கருப்பூரத்தையும் இந்திரம் விச்வா என்னும் மந்திரத்தால் லவங்கத்தையும் போட்டு, நமோ அஸ்துநீலக்ரீ வாய ஸஹஸ்ராக்ஷாயமீடுஷே என்ற மந்திரத்தால் கரைத்து, ''யோவேதாதௌஸ்வர: ப்ரோக்தோ'' என்னும் மந்திரத் தால் ஆசமனீயத்தை அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.

அருக்கியபாத்ரத்தில் ப்ரமுஞ்சதந்வநஸ்துவம் என்னும் மந்திரத்தால் கூர்ச்சத்தை இட்டு, யாஸாம்தேவா என்னும் மந்திரத்தால் அரைமரக்கால் அளவான நீரை நிரப்பி, ஸா வித்ரீ என்னும் மந்திரத்தால் எள்ளையும், ச்யேநஸ்யபக்ஷ என்னும் மந்திரத்தால் பாலையும், கத்ருத்ராயப்ர சேதஸே என்னும் மந்திரத்தால் தருப்பையின் நுனியையும், பூர்புவஸ் ஸுவரோம் என்னும் மந்திரத்தால் யவத்தையும், தத்வாயா மிப்ரஹ்மணா என்னும் மந்திரத்தால் வெண்கடுகையும்,

ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி - பவோத்பவாய நம: என்னும் மந்திரத்தால் அரிசியையும், மர்மாணிதேவர்மபிச்சாதயாமி என்னும் மந்திரத்தால் கடுகையும் போட்டு, உத்தீப்யஸ்வஜாத வேதோ என்னும் மந்திரத்தால் மதனஞ்செய்து, இமாஆபச் சிவதமா என்னும் மந்திரத்தால் அருக்கியத்தை அபிமந்தி ரணஞ்செய்து தருப்பத்தால் மூடவேண்டும். கூறப்பட்ட திர வியங்கள் கிடைக்காவிடில் சுத்தோதகத்துடன் கந்தத்தைச் சேர்த்து, பஞ்சப்ரஹமமந்திரங்களால் அபிமந்திரணஞ் செய்ய வேண்டும்.

## பாத்யம், அருக்யம், ஆசமனீயம் என்னுமிவற்றைச் சுருக்கமாகக் கற்பிக்கும் முறை

விசேஷார்க்யபாத்திரம் பாத்யபாத்திரம் ஆசமனீயபாத்தி ரம் என்னும் இவற்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு, கூறப் பட்ட திரவியங்களை அவற்றில் இட்டு, அர்க்யஜலத்தை அஸ் திரமந்திரம், ப்ரஹ்மாங்கமந்திரங்களால் அருச்சித்து அபிமந் திரணஞ் செய்துகொள்ளவும். பாத்யஜலத்தை இருதய மந்திரத்தால் அருச்சித்து, பிரணவமந்திரத்தால் ஏழுமுறை அபிமந்திரணஞ் செய்துகொள்ளவும். ஆசமநீயஜலத்தைப் பத்து பீஜாக்கரங்களால் அருச்சித்து, பஞ்சப்ரஹ்மஷடங்கங் களால்அபிமந்திரித்து, இம்மூன்றிற்கும் தேநுமுத்ரை, பத்ம முத்ரை, லிங்கமுத்ரை, அஸ்திரமுத்ரை, மஹாமுத்ரைகளைக் காண்பித்து, தூபதீபம் சமர்ப்பிக்கவேண்டும்.

## பஞ்சகவ்யம்

பரமசிவனுடைய சந்நிதியில் கோமயத்தால் மெழுகப் பட்ட தரையில், பதக்கு அளவுள்ள அரிசியைப் பரப்பி, அதன் மேல் *நவகோஷ்டம் கீறி, அவற்றின்மேல் பொரி தர்ப்பை அக்ஷதை எள்ளு என்னும் இவற்றைப்பரப்பி, ஒன்பது பாத்தி ரங்களை வைக்க வேண்டும். மத்யகோஷ்டத்தில் ஓம் ஹாம் சிவதத்வகோஷ்டாய நம: என்று கோஷ்டத்தைப் பூஜித்து, ஓம் ஹாம் ஸுப்ரதிஷ்டபாத்ராய நம: என்று பாத்ரத்தை யும் பூசித்து, அந்தப் பாத்திரத்தில் ''ஆப்யாயஸ்வ'' என் னும் மந்திரத்தால் பாலை இட்டு, ஈசானஸ் ஸர்வவித்யாநாம்

* இழக்குவடக்காக நான்கு நான்கு ரேகைகள் கீறவேண்டும். ஒரு ரேகையினின்றும் ஒரு ரேகைக்கு ஒட்டையளவு இருக்கவேண்டுமென் பது காரணாகமம்.

என்னும் மந்திரத்தால் பூசித்து, இந்த மந்திரத்தாலேயே ஒரு முறை அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.

இவ்வாறே கிழக்குக்கோஷ்டத்தில் ஓம் ஹாம் ஸதாசிவ தத்வகோஷ்டாய நம: என்று கோஷ்டத்தைப்பூஜித்து, ஓம் ஹாம் ஸுசாந்த பாத்ராய நம: என்று பாத்ரத்தையும் அருச்சித்து, ததிக்ராவிண்ணே என்ற மந்திரத்தால் அந்தப் பாத்திரத்தில் தயிரை இட்டு, தத்புருஷாயவித்மஹே என்னும் மந்திரத்தால் பூசித்து, இந்த மந்திரத்தாலேயே இருமுறை அபிமந்திரிக்கவேண்டும்.

தெற்குக்கோஷ்டத்தில் ஓம் ஹாம் வித்யாதத்வகோஷ் டாய நம: என்று கோஷ்டத்தையும், ஓம் ஹாம் தேஜோவத் பாத்ராய நம: என்று பாத்ரத்தையும் அருச்சித்து, அந்தப் பாத்திரத்தில் சுக்ரமஸிஜ்யோதிரஸி என்னும் மந்திரத்தால் நெய்யை இட்டு, அகோரேப்யோத கோரேப்யோ என்னும் மந்திரத்தால் பூசித்து, இந்த மந்திரத்தால் மூன்றுமுறை அபிமந்திரிக்கவேண்டும்.

வடக்குக்கோஷ்டத்தில் ஓம் ஹாம் புருஷதத்வகோஷ்டாய நம: என்று கோஷ்டத்தையும், ஓம் ஹாம் ரத்னோதகபாத் ராய நம: என்று பாத்ரத்தையும் அருச்சித்து, அந்தப் பாத் திரத்தில் தத்ஸவிதுர்வரேண்யம் என்னும் மந்திரத்தால் கோஜலத்தை இட்டு, வாமதேவாய என்னும் மந்திரத்தால் பூசித்து, நான்கு முறை அபிமந்திரிக்கவேண்டும்.

மேற்குக்கோஷ்டத்தில் ஓம் ஹாம் காலதத்துவகோஷ் டாய நம: என்று கோஷ்டத்தையும், ஓம் ஹாம் அமிருதாத் மகபாத்ராய நம: என்று பாத்ரத்தையும் அருச்சித்து, அந்தப் பாத்திரத்தில் கோமயத்தை கந்தத்வாராம் என்ற மந்திரத் தால் இட்டு, ஸத்யோ ஜாதமந்திரத்தால் பூசித்து, ஐந்து முறை அபிமந்திரிக்கவேண்டும்.

ஈசானகோஷ்டத்தில் ஓம் ஹாம் பிரகிருதிதத்வகோஷ் டாய நம: என்று கோஷ்டத்தையும், ஓம் ஹாம் அவ்யக்த பாத்ராய நம: என்று பாத்ரத்தையும் பூசித்து, அந்தப் பாத் திரத்தில் குசோதகத்தை (தருப்பை ஜலத்தை) தேவஸ்யத் வாஸவிது: ப்ரஸவே என்னும் மந்திரத்தால் இட்டு, மூலமந் திரத்தால் ஆறுமுறை அபிமந்திரிக்கவேண்டும்.

பின்னர் மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கோமயத்தைக் கோஜலத்திலும் அவ்விரண்டையும் நெய்யிலும், அம்மூன்றையும் தயிரிலும், அந்நான்கையும் பாலிலும் சேர்த்து இறுதியில் குசோதகத்தையும் ஒன்ருகச் சேர்க்கவேண்டும். இவ்வாறே ஸ்ரீமத் காரணுகமத்திலும் ''கோமயத்தை கோஜலத்திலும், கோஜலத்தை நெய்யிலும், நெய்யைத் தயிரிலும், தயிரைப் பாலிலும் சேர்க்கவேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கிறது மீண்டும் தர்ப்பையுடன்கூட சம்ஹிதாமந்திரங்களால் அபிமந்திரித்து மர்த்தனஞ் செய்து, சம்ரக்ஷணஞ்செய்து, அவகுண்டனஞ்செய்து, அமிருதீகரணமும் செய்யவேண்டும். * பிராயச்சித்தவிஷயமாயின் மூலமந்திரத்தை நூற்றெட்டு முறை அபிமந்திரிக்கவேண்டும்.

## பஞ்சாமிருதம்

பஞ்சகவ்யம் வைத்திருக்குமிடத்துக்குக் கிழக்குப் பக்கத்தில் நெல்லால் மேடைசெய்து, நடுவில் ஒன்பது கோஷ்டங்கள் கிறி, அக்னிதிக்கு முதலிய நான்கு திக்குக்களில் இருக்கும் நான்கு கோஷ்டங்களேயும் † விட்டு, எஞ்சிய ஐந்து கோஷ்டங்களுள் நடுக்கோஷ்டத்தில் ஓம் ஹாம் ப்ருதிவீதத்வ கோஷ்டாய நம: என்றும், கிழக்குக் கோஷ்டத்தில் ஓம் ஹாம் அப்தத்வகோஷ்டாய நம: என்றும், தெற்குக் கோஷ்டத்தில் ஓம் ஹாம் தேஜஸ்தத்வகோஷ்டாய நம: என்றும், வடக்குக் கோஷ்டத்தில் ஓம் ஹாம் வ்யோமதத்வகோஷ்டாய நம: என்றும், மேற்குக் கோஷ்டத்தில் ஓம் ஹாம்வாயுதத்வகோஷ்

---

* பூருவகாரணுகமத்தில் ஈசானமுதல் ஸத்யோஜாதமீருகவுள்ள மந்திரங்களே அபிமந்திரிக்கும் விஷயத்தில் எண்முறை ஐந்து எட்டு ஏழு எட்டு ஒன்பது என்று காணப்படுகிறது, அக்னி நிருருதி வாயு ஆகியதிக்குக்களில் மாப்பொடி, மஞ்சட்பொடி, நெல்லிப்பொடிஆகிய இவற்றை சிகை, அஸ்திரம், கவசம் ஆகியமந்திரங்களால் பாத்திரங்களில்வைத்து, வ்யாஹ்ருதி, இருதய மந்திரம், சிரோ மந்திரம் ஆகிய இவற்ருல்முறையே ஆறு ஏழு எட்டுமுறை அபிமந்திரிக்கவேண்டும் என்றும் காணப்படுகிறது. இன்னும் இதுபோன்றவற்றை அங்குக் காண்க.

† அக்னிதிக்கு முதலிய நான்கு திக்கிலுள்ள கோஷ்டங்களில் வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம், கந்தோதகம் ஆகிய இவற்றத் தாபித்து, முறையே இருதயம், சிரசு, சிகை, கவசம் ஆகிய மந்திரங்களால் அபிமந்திரிக்கவேண்டுமென்று காரணுகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

டாய நம: என்றும், கோஷ்டங்களை அருச்சித்துப் பாத்திரங்களை நூலால் சுற்றி, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து நீரால் சுத்திசெய்து, இருதய மந்திரத்தால் தூபம் சமர்ப்பித்து, பாத்திரங்களைக் கோஷ்டங்களில் வைத்து, நடுப்பாத்திரத்தை ஓம் ஹாம் கந்த தத்வ பாத்ராய நம: என்றும், கிழக்குப் பாத்திரத்தை ஓம் ஹாம் ரஸதத்வ பாத்ராய நம: என்றும், தெற்குப் பாத்திரத்தை ஓம் ஹாம் ரூபதத்வபாத்ராய நம; என்றும் வடக்குப் பாத்திரத்தை ஓம் ஹாம் சப்ததத்வ பாத்ராய நம என்றும், மேற்குப் பாத்திரத்தை ஓம் ஹாம் ஸ்பர்ச தத்வ பாத்ராய நம: என்றும் அருச்சித்து, நடுப்பாத்திரத்தில் பாலையும், கிழக்குப் பாத்திரத்தில்பழத்தையும், தெற்குப் பாத்திரத்தில் தேன் நெய் என்னும் இவற்றுள் யாதானுமொன்றையும், வடக்குப் பாத்திரத்தில் கருப்பஞ்சாறு இளநீர் என்னும் இவற்றுள் யாதானுமொன்றையும், மேற்குப் பாத்திரத்தில் சர்க்கரை வெல்லம் என்னும் இவற்றுள் யாதானுமொன்றையும் வைத்து, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களால் பூஜித்து, பஞ்சகவ்யத்தைப்போல் பஞ்சபிரம மந்திரங்களாலும், அங்கமந்திரங்களாலும் அபிமந்திரித்து, கிழக்கு முதலிய நான்குதிக்குகளில் வைக்கும் பாத்திரங்களிலிருக்கும் திரவியங்களை மத்திய பாத்திரத்திற் சேர்த்து அந்தப் பாத்திரத்தில் சதாசிவரை ஆவாகனஞ்செய்து, ஆவாகனமுத்திரை முதலிய ஐந்து முத்திரைகளைச் சமர்ப்பித்து, தூபம், தீபம், அருக்கியங்கள் சமர்ப்பித்து, :நைவேத்தியம் முதலியவற்றையும் நிவேதித்து மூலமந்திரத்தால் அபிமந்திரித்து, திக்பந்தனம் அவகுண்டனங்களைச் செய்து, பஞ்சப்பிரமஷடங்க மந்திரங்களால் அபிமந்திரிக்கவேண்டும்.*

## ஸ்நபனபூஜை

பஞ்சாமிருதஸ்தானத்திற்குக் கிழக்குப்பக்கத்தில் ஆறு மரக்கால் நெல், அரிசி, எள்ளு முதலிய தானியங்களைப் பரப்பி அதன் மேல் ஐந்து ஒட்டை அளவுள்ளதாகச் சதுரச்ரத்தைச் செய்து, அதன்மேல் பத்மத்தை வரைந்து, பத்மாசனம்வரை அருச்சித்து, ஒன்பது கும்பங்களையும் வர்த்தனிகும்பத்தையும்

---

* ஸம்யுக்தபஞ்சாமிருதம் அஸம்யுக்தபஞ்சாமிருதம் என்னுமிவை கற்பிக்கப்படும் விபரம் சிவார்ச்சனசந்திரிகையில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.

நூலாற்சுற்றி, இருதய மந்திரத்தாற் சுத்திசெய்து, அஸ்திர மந்திரத்தால் தூபம் சமர்ப்பித்து, நீரை நிரப்பி, சுகந்த திரவியங்களேயும் ரத்தினத்தையும், இட்டு, கூர்ச்சம், மாந்தளிர், தேங்காய், புஷ்பமாலை என்னுமிவற்ருலும், சந்தனம், அக்ஷதை, வஸ்திரம் என்னுமிவற்ருலும் அலங்கரித்து, அஸ்திர மந்திரத்தால் பத்மத்திற்குமேல் தாபித்து, நடுக்கும்பத்தில் ஆதாரசக்தி முதல் அருச்சித்து, சிவாஸநாய நம:, சிவமூர்த்தயே நம: என்று ஆஸனமூர்த்தி மந்திரங்களால் பூஜித்து, ஸதாசிவரை ஆவாகனம் செய்து, ஆவாகனமுத்திரை தாபன முத்திரை முதலிய ஐந்து முத்திரைகளேச் சமர்ப்பிக்க வேண்டும். பிறகு வர்த்தனியில் மனேன்மனியை மனேன்மனியின் மூலமந்திரத்தால் ஆவாகனஞ் செய்து, ஸ்தாபனம் முதலியவற்றைச் செய்து, பத்மமுத்திரையோனி முத்திரை மகாமுத்திரைகளேச் சமர்ப்பித்து, கிழக்குமுதலிய எட்டுத்திக்குகளில் உள்ள கும்பங்களில் முறையே அநந்தர், சூக்ஷுமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்னும் அஷ்டவித்யேசுவரர்களே ஆவாகனஞ் செய்து, அருச்சித்து, நைவேத்தியம், தூபம், தீபம், அருக்கியங்களேச் சமர்ப்பித்து, மாதிருகாநியாசம் கலாநியாஸங்களேச் செய்யவேண்டும்.

## உஷக்கால பூசை

உத்தரகாரணுகமத்தில் பாதுகாராதன விதிப்படலத்தில், ''சூரியோதயத்திற்கு முன் மூலலிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்து, நைவேத்தியமும் சமர்ப்பிக்கவேண்டும். பூசையின் முடிவில் சூரியோதயம் ஆகக்கூடியதாக இருக்கவேண்டும். இவ்வாறு சங்கற்பித்து நடத்தும் உஷக்கால பூசை சிறப்புடையதாகும்'' என்னும் வசனம் இருத்தலால், உஷக்கால பூசை செய்வது இன்றியமையாதது என்று அறியப்படுகிறது.

அந்தப் பூசை எவ்வாறு செய்யவேண்டுமெனில், முன் கூறப்பட்ட பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் முதலியவற்ருலும் ஸ்நபன ஜலத்தாலும் மூல லிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்து, நிவேதனம் முதலிய உபசாரங்கள் செய்யவேண்டும். * அவ்வாறே அம்பாளுக்கும் செய்க.

---

* உத்தரகாரணம் தநுர்மாஸபூஜாபடலத்தில் அம்பாளுக்கும் பூஜை செய்தல் கூறப்பட்டிருக்கிறது.

## திருமஞ்சனம்

சிவபெருமான் அர்த்தயாமபூஜையின்முடிவில்சிவிகையின் மீது எழுந்தருளி நர்த்தனம் கானம் முதலிய வாத்யங்களுடன் பள்ளியறைக்குச் சென்றதும், பரமசிவனது ஜடையிலுள்ள கங்கா தேவியானவள் மனோன்மனி அம்பிகையைத் தரிசித்து வெகுவேகமாக அங்கிருந்து நீங்கினள். ஆதலின், அர்த்தயாமத்தில் பரமசிவனுடைய ஜடையில் நின்றும் நீங்கிய கங்கையை எல்லாத் தீர்த்தங்களுடனும் சேர்ந்திருப்பதாகப் பாவிக்க வேண்டும். அந்தக் கங்கையின் பரிசத்தால் எல்லாத் தீர்த்தங்களும் பரிசுத்தமாகின்றன.

மீண்டும் கங்காதேவியைப் பரமசிவனுடைய சடாமகுடத்தில் சேர்க்கும்பொருட்டு, விடியற்காலத்தில் வேதியர் சுத்தமாக இருந்து, பலவித வாத்தியகோஷங்களுடனும் எல்லாவுபசாரங்களுடனும் சொர்ணம் தாம்பிரம் வெள்ளி இவற்றுள் யாதானு மொன்றால் செய்யப்பட்ட கடத்தில் நதியிலுள்ள நீரை நிரப்பி ''ஆபோவா'' என்னும் ஆரம்பமுள்ள மந்திரத்தை உச்சரித்து கங்கையைப் பிரவேசிக்கச் செய்யவேண்டும்.

பின்னர் மாந்தளிர் தேங்காய் தருப்பை கூர்ச்சம் ஆடை சந்தனம் அக்ஷதை புஷ்பம் என்னும் இவற்றால் விசேஷமாக அந்தக் கும்பத்தை அலங்கரித்து, யானையின் சிரசிலேனும் பரிசாரகருடைய சிரசிலேனும் ஏற்றி, குடை வெண்சாமரங்களுடன் வாத்ய கோஷங்கள் முழங்க ஆலயத்தை வலம் வந்து லிங்கத்தின் சிரசில் அபிஷேகஞ் செய்யவேண்டும். நந்திதேவரிடத்தில் அபிஷேகம் செய்தால் எல்லாக்காரியங்களும் சித்தியாகும். பலிபீடம், துவஜ தண்டம், விருஷபம், டிண்டி, முண்டி, ஸ்தூபியின் நுனி, பரமசிவனுடைய சிரசு என்னும் இவற்றுள் யாதானுமொன்றில் தினந்தோறும் விதிப்படி இவ்வாறு செய்து அபிஷேகஞ் செய்தால் கிராமத்திற்கும் அரசனுக்கும் விருத்தி உண்டாகும்; லக்ஷ்மீகடாக்ஷம் சித்திக்கும்; எல்லாப்பிராணிகளுக்கும் சுகம் உண்டாகும். நதிதீர்த்தம் உத்தமம். தடாகதீர்த்தம் மத்யமம். கிணற்று நீர் அதமம்.

* இவ்வாறு கூறப்பட்டிருப்பதால் உஷக்கால பூசை முடிந்ததும், சந்தனம்முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட, சொர்ண

---

* திருமஞ்சனம் எடுத்தற்குரிய இந்த வாக்யங்கள் ஆங்காங்குள்ள சிவாசார்யர்களிடமிருந்த பிரதிகளிலிருந்து சேர்க்கப்பட்டன,

கும்பத்தை எடுத்து அதில் நதி முதலியவற்றுள் யாதானும் ஓர் தீர்த்தத்தை நிரப்பி, எல்லாவித வாத்யோபசாரங்களுடன் யானையின் சிரசிலேனும் பரிசாரகருடைய சிரசிலேனும் அக்கும்பத்தை ஆரோகணித்து ஆலயத்தை வலஞ்செய்து லிங்கம் முதலியவற்றுள் யாதானும் ஒன்றன் சிரசில் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

## காலசந்திபூஜை

உத்தரகாரணாகமத்தில் தநுர்மாஸ பூஜாவிதிப்படலத்தில் * ''காலசந்தியில் சூரியன், கணேசர், மகேசுவராதிகள், பரிவாரங்கள் ஆகிய இவர்களுக்கு அபிஷேக அலங்காரங்களையும், பூஜையையும் செய்து, மூலலிங்கத்திற்கும் அம்பாளுக்கும் விசேஷமாகப் பூஜை செய்யவேண்டும். பிறகு கணேசர், மூலலிங்கம், மகேசுவராதிமூர்த்தங்கள், பரிவாரங்கள், கௌரி ஆகிய இவர்கட்கு நிவேதனத்தையும் தூபதீபோபசாரங்களையும் செய்து, பலி சமர்ப்பித்து, அக்னிகாரியம், நித்யோத்ஸவங்களைச் செய்து, சண்டேச பூஜையையும் செய்யவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

## சூரியபூசை

ஆகையால், காலசந்திபூசையின் ஆரம்பத்தில் சூரியபூசை செய்யவேண்டும். கிழக்குத் திக்கு அக்கினி திக்குகட்கு மத்தியத்திலேனும் ஈசானதிக்கிலேனும் சூரியனைப் பூசிக்கவேண்டும்.

---

ஆறுகாலங்களுக்கு வசனம்

* சூரியோதயத்திற்குமுன் மூன்றேமுக்கால் நாழிகை உஷக்காலமாகும். சூரியோதயம்முதற்கொண்டு ஏழரை நாழிகை காலசந்தியாகும். காலசந்தியின் முடிவுமுதற்கொண்டு மூன்றேமுக்கால் நாழிகை உபசந்திகாலமாகும். உபசந்தியின் முடிவுமுதற்கொண்டு ஒரு யாமம் உச்சிக்காலமாகும் சூரியாஸ்தமனத்திற்குமுன் மூன்றேமுக்கால் நாழிகை பிரதோஷகாலம். பிரதோஷத்தின் முடிவுமுதல் மூன்றேமுக்கால் நாழிகை சாயங்காலம் சாயங்காலத்தின் முடிவுமுதல் மூன்றேமுக்கால் நாழிகை அர்த்தயாமமாகும். இவற்றுள், உஷக்காலம் காலத்துட் சேராது அது நீங்கிய ஏனைய ஆறுகாலங்களுள் பிரதோஷகாலமென்பது மகாப்பிரதோஷ பூஜையைக் குறித்ததன்று. பிரதோஷகாலத்திற் செய்யப்படும் நித்யபூஜையைக் குறித்தது.

## பூசிக்குமுறை

சூரியனுக்கு முன்னர் * வடக்குமுகமாக இருந்துகொண்டு, ஓம் ர: அஸ்திராயபட் என்று கைகளின் முன்பக்கம் பின்பக்கங்களை வலம் இடமாகத் துடைத்துக்கொண்டு, ஓம் ஹ்ராம் ஹ்ரீம்ஸ: ஸிவஸூர்யாயவௌஷட் என்ற மந்திரத்தால் கைத்தலங்களை நனைந்தவையாகப் பாவனை செய்து பெருவிரல்களில் சுட்டுவிரல்களால் ஓம் அம் ஹ்ருதயாய நம: என்றும், கடைவிரல் அணிவிரல் நடுவிரல்களில் பெருவிரல்களால் ஓம் அம் அர்க்காய சிரசே நம:, ஓம்அம் பூர்புவஸ்ஸுவரோம்ஜ்வாலிநீ சிகாயைநம:, ஓம்அம் ஹ்ரூம்கவசாய நம: என்றும், உள்ளங்கைகளில் நடுவிரல்களால் ஓம் பம்பாநுநேத்ராப்யாம் நம: என்றும், சுட்டுவிரல்களில் பெருவிரல்களால் ஓம் ர: அஸ்த்ராய பட் என்றும் நியாசம்செய்துகொண்டு, கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, இரண்டு கைகளையும் குவித்து வௌஷடந்தமான சூரியமூலமந்திரத்தை நியாசஞ்செய்து சூரியமூலமந்திரத்தால் தேகசுத்தி செய்து, வலது அணிவிரல் பெருவிரல்களால் இருதயத்தில் இருதயமந்திரத்தையும், சிரசில் சிரோமந்திரத்தையும், சிகையில் சிகாமந்திரத்தையும், சுட்டுவிரல்களால் புயங்களில் கவசமந்திரத்தையும், நடுவிரல் சுட்டுவிரல்களால் நேத்திரங்களில் நேத்ரமந்திரத்தையும், கைத்தலங்களில் அணிவிரல்களால் அஸ்திரமந்திரத்தையும் நியாசஞ்செய்து அஸ்திரமந்திரத்தை உச்சரித்துச் சோடிகையால் பத்துத்திக்குக்களையும் பந்தனம் செய்து, மகாமுத்ரையால் எல்லா அங்கங்களிலும் மூலமந்திரத்தை நியாசஞ் செய்து, தன்னைச் சூரியனாகப் பாவிக்கவேண்டும்.

பின்னர், பிரணவத்தால் அருக்கியத்தைத்தாபித்து, வாயிலைப் புரோக்ஷித்துத் துவாரத்தின் வலது இடதுபக்கங்களில் ஓம் அம்தண்டிநே நம:, ஓம் அம் பிங்களாய நம: என்றும், பத்மத்தின் ஈசானத்தில் ஓம் அம்கணபதயேநம: என்றும், பத்மத்தின் ஆக்னேயத்தில் ஓம் அம் குருப்யோ நம: என்றும் அருச்சித்து, ஓம் அம்பிரபூதாஸநாய நம: என்று சுவேதபீடத்தை அருச்சித்து, அக்கினிதிக்கு முதலிய உபதிக்குக்களில் ஓம் ஹாம் விமலாய நம:, ஓம் ஹாம் ஸாராய நம:,

---

* கிழக்குமுகமாக இருந்துகொண்டு என்று க்ரியாக்ரம தியோதிகையில் இருக்கின்றது.

ஓம் ஹாம் ஆராத்யாய நம; ஓம் ஹாம் பரமசுகாய நம: என்று உச்சரித்துக்கொண்டு, வெண்மை, செம்மை, பொன்மை, பச்சைவர்ணமுடைய நான்கு சிம்மங்களைத் தியானித்து அருச்சிக்கவேண்டும்.* பின் ஓம் அம் பத்மாய நம: என்று வெண்மையான பத்மத்தை அருச்சித்து, பத்மமுத்ரை காண்பித்து, பத்மத்தின் கிழக்கு முதற்கொண்டு ஈசானமீறன எட்டுத் திக்குக்களிலும், ஓம் ராம் தீப்தாயை நம:, ஓம் ரீம் சூக்ஷ்மாயை நம:, ஓம் ரும்ருஜாயை நம:, ஓம் ரூம் பத்ராயை நம:, ஓம்ரேம் விபூத்யை நம:, ஓம் ரைம் விமலாயை நம:, ஓம் ரோம் அமோகாயை நம:, ஓம் ரௌம் வித்யுதாயை நம: என்றும், கர்ணிகையின் ஈசானத்தில் ஓம் ர: ஸர்வதோமுக்யை நம: என்றும் பூசித்து, விஸ்புரமுத்ரை காண்பித்து, ஓம் அம் அர்க்காஸநாய நம: என்று அர்க்காசனத்தைப் பூசித்து. ஓம் கம் கஷோல்காய சூரியமூர்த்தயே நம: என்று ஆசனத்தின் மீது மூர்த்தியை நியாசஞ்செய்து, ஓம் பம் பாநுநேத்ராப்யாம் நம: என்று நேத்ரம் சமர்ப்பித்து, புஷ்பாஞ்சலி செய்துகொண்டு, நெற்றியில் பிரகாசிக்கும் அருணபிந்துவை இழுத்து அஞ்சலியில் இருப்பதாகப் பாவித்து, ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: சிவசூர்யாய நம: என்ற மூலமந்திரத்தை உச்சரித்து, ஆவாஹனமுத்ரையால் ஆவாஹனஞ்செய்து, ஸ்தாபனம் முதலிய ஐந்து முத்ரைகள் காண்பித்து, தூபம், தீபம், அருக்யங்கள் சமர்ப்பித்து, சூரியதியானம் செய்யவேண்டும்.

தியானம் வருமாறு:— எல்லாவற்றிற்கும் கருத்தாவாயும், பன்னிருகலைகளுடன் கூடியவராயும், இரண்டு கைகளில் தாமரைப் பூக்களையுடையவராயும், எல்லாவுலகங்களுக்கும் சாக்ஷிபூதராயும் இருக்கும் சூரியபகவானை நமஸ்கரிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து ''அச்வத்வஜாய வித்மஹே பத்மஹஸ்தாய தீமஹி தந்நஸ்ஸூர்ய: ப்ரசோதயாத்'' என்னும் சூரியகாயத்திரியை நியாசஞ்செய்து, இருதயம் முதலிய ஸ்தானங்களில் அவ்வந்த மந்திரங்களை நியாசஞ்செய்து, பாத்யாசமனார்க்யங்களைச் சமர்ப்பித்து, பிம்பத்தைத் தீர்த்

---

* விமலம் முதலிய நான்கையும் கர்ப்பாவரணத்தில் நிருருதிதிக்கு முதற்கொண்டு ஈசானதிக்குவரை பூசிக்கவேண்டுமென்று பிரதியிலிருக்கின்றது. இங்கே கிரியாக்கிரமதியோதிகையை அநுசரித்தெழுதியிருக்கிறது.

தத்தால் அபிஷேகஞ்செய்து, மீண்டும் தைலம் முதலிய சகல திரவியங்களாலும் அபிஷேகஞ்செய்து, அலங்காரஞ்செய்து, மூலமந்திரத்தால் அருச்சித்து, பத்மமுத்ரை விஸ்புரமுத்ரை யோனிமுத்ரைகளைச் சமர்ப்பித்து, இருபக்கங்களிலும் உஷை ப்ரத்யுஷை ஆகிய தேவிகளைப் பூசிக்கவேண்டும்.

பின்னர் முதலாவரணத்தில் இருதயம், சிரசு, சிகை, கவசம் ஆகிய மந்திரங்களைச் சூரியனுடைய இருதயம் முதலிய ஸ்தானங்களிலிருந்தும் எடுத்து, அக்னி, ஈசானம், நிருதி, வாயு ஆகிய தளங்களில் நியாசஞ்செய்து அழகாயும் செம்மைவர்ண முடையவையாயும், வரதம் தாமரை என்னுமிவற்றை இரு கைகளில் உடையவையாயும், அலங்கரிக்கப்பட்டவையாயும் இருக்கும் சூரியனுடைய அங்கங்களைப் பாவிக்கவேண்டும். இவ்வாறு பாவித்து அருச்சித்து சூரியனுடைய முன்னர் நேத்ர தேவதையையும், கிழக்கு முதலிய நான்கு திக்குக்களில் அஸ்திரதேவதையை மின்னற்கூட்டம்போல் பிரபையை உடையதாகவும், கோரப்பல்லால் பயத்தைச் செய்கிறதாகவும் தியானித்து அருச்சித்து, இருதயம் முதலியவற்றிற்குத் தேநு முத்ரையும், அஸ்திரத்திற்கு த்ராஸிநீமுத்ரையும் சமர்ப்பிக்க வேண்டும்.

பின்னர் இரண்டாவது ஆவரணத்தில் கிழக்கு முதலிய நான்கு தளங்களுள் கிழக்குத்தளத்தில் ஓம் ஸம்ஸோமாய நம: என்றும், தெற்குத்தளத்தில் ஓம் பும் புதாய நம: என்றும், மேற்குத்தளத்தில் ஓம் ப்ரும் ப்ரஹஸ்பதயே நம: என்றும், வடக்குத்தளத்தில் ஓம் பம் பார்க்கவாய நம: என்றும், அக்னிதிக்கிலுள்ள தளத்தில் ஓம் அம் அங்காரகாயநம: என்றும், நிருருதிதிக்கிலுள்ள தளத்தில்ஓம் சம் சனைச்சராய நம: என்றும், வாயுதிக்கிலுள்ள தளத்தில் ஓம் ரம் ராஹவே நம: என்றும், ஈசான திக்கிலுள்ள தளத்தில் ஓம் கம் கேதவே நம: என்றும் இவ்வாறு எட்டுக்கிரங்களையும் பூசிக்க வேண்டும்.

பின்னர் மூன்றுமாவரணத்தில்பத்துத் திக்குப்பாலர்களைப் பூசிக்கவேண்டும். அது வருமாறு—கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் இந்திராய நம: என்றும், தெற்குத்திக்கில் ஓம் ஹாம் யமாய நம: என்றும், மேற்குத்திக்கில் ஓம் ஹாம் வருணாய நம: என்றும், வடக்குத்திக்கில் ஓம் ஹாம் சோமாய நம: என்றும், அக்னிதிக்கில் ஓம் ஹாம் அக்னயே நம: என்றும், நிருருதிதிக்கில் ஓம் ஹாம் நிருருதயே நம: என்றும், வாயுதிக்கில் ஓம்:

ஹாம் வாயவே நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஈசாஞய நம: என்றும், உயர ஓம் ஹாம் ப்ரஹ்மணே நம: என்றும், கீழே ஓம் ஹாம் விஷ்ணவே நம: என்றும் பூசை செய்து, நைவேத்யம், தூபம், தீபம், அருக்யங்கள் சமர்ப்பித்துத் தோத்திரம் செய்யவேண்டும்.

தோத்திரம் வருமாறு—தண்டி முதலிய நான்கு துவாரபாலர்களாலும், திப்தை முதலிய சக்திகளாலும் சேவிக்கப்படுபவராயும் விமலம் முதலிய நான்கு சிம்மங்களைக் கால்களாகவுடைய ஆசனத்தில் வீற்றிருப்பவராயும், செம்மையான இரத்தினத்தின் காந்தி போன்ற காந்தியை உடையவராயும், கஷோல்கமூர்த்தியாயும், தனது இருதயம் முதலிய அங்கங்களாலும் தனக்கு உட்பட்ட சந்திரன் முதலிய கிரகங்களாலும் நக்ஷத்திரங்களாலும் சூழப்பட்டவராயும், வெண்டாமரையில் அமர்ந்திருப்பவராயும், வெண்டாமரைகளைத்தோள்களில் சாத்திப்பிடித்திருக்கும் இரண்டு கைகளையுடையவராயும், மங்களகரமான இரண்டு கண்களையுடையவராயும் உள்ள சிவ சூரியபகவான் நம்மை இரக்ஷிக்கவென்பதாம்.

இவ்வாறு தோத்திரஞ்செய்து நமஸ்கரித்து சுவாஹாந்தமான கஷோல்கமந்திரத்தால் பராங்முகார்க்யம் கொடுத்து மூலமந்திரத்தால் தன் இருதயத்தில் சூரியனைச் சேர்ப்பிக்க வேண்டும்.

அதன்பின் அவருடைய இடது பக்கத்தில் ஓம் அம் தேஜச்சண்டாஸஞய நம: ஓம் அம் தேஜச்சண்டமூர்த்தயே நம என்று ஆசனமூர்த்திமந்திரங்களால் தேஜச்சண்டரைப் பூசித்துத் தியானிக்க வேண்டும். தியானம் வருமாறு—

செம்மைவருணமும், பயங்கரமான முகமும், தாமரை அபயம் என்னும் இவற்றையுடைய இரண்டு கைகளும், கோரப் பல்லால் பயங்கரமாக விளங்கும் வாயும், ஜடையும், செம்மை வஸ்திரமும் ஆகிய இவற்றையுடைய தேஜச்சண்டேசுவரரை நமஸ்கரிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து ஓம் அம் தேஜச்சண்டாய நம: என்று பூசித்து, சூரியநின்மாலியத்தை நிவேதனஞ்செய்து விஸர்ஜனஞ்செய்யவேண்டும்.

பின்னர் கணபதி ஆலயஞ்சென்று, அக்ரமண்டபத்தில் வடக்குமுகமாக அமர்ந்து, பிராணுயாமஞ்சகளீகரணங்கள்

## கணேசபூஜை

செய்து வியாபகநியாசம் செய்யவேண்டும். அது வருமாறு—
ஓம் காம் சர்வேசுவராய நம: என்று சிரசிலும்,
ஓம் கிம் கஜமுகாய நம: என்று முகத்திலும்,
ஓம் கூம் விக்னஹந்த்ரே நம: என்று நேத்திரத்திலும்,
ஓம் கைம் ஸ்ரீகண்டாய நம: என்று கழுத்திலும்,
ஓம் கௌம் ஸ்கந்தப்ரியாய நம: என்று புயங்களிலும்,
ஓம் க: பாசாங்குசஹஸ்தாய நம: என்று கைகளிலும்,
ஓம் காம் கணநாதாய நம: என்று இருதயத்திலும்,
ஓம் கிம் லம்போதராய நம: என்று வயிற்றிலும்,
ஓம் கூம் ஹேரம்பாய நம: என்று இடுப்பிலும்,
ஓம் கைம் ஆகுவாஹநாய நம: என்று இருதுடைகளிலும்,
ஓம் கௌம் விக்னேசுவராய நம: என்று இருமுழங்கால்களிலும்
ஓம் க: கணேசுவராய நம: என்று பாதகங்களிலும் நியாசஞ் செய்துகொண்டு மீண்டும்,

ஓம் கணாநாம் த்வா கணபதிகும் ஹவாமஹே கோம் ஈசான மூர்த்தாய நம; என்று சிரசிலும், ஓம் கவிங்கவீநாம் கேம் தத்புருஷவக்த்ராய நம: என்று முகத்திலும், ஓம் உப மச்ரவஸ்தமம்கும் அகோரஹ்ருதயாய நம: என்று இருதயத்திலும், ஓம் ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணஸ்பதேகிம்வாமதேவகுஹ்யாய நம: என்று குய்யத்திலும், ஓம் ஆநச்ருண்வந்நூதிபிஸ் ஸீத ஸாதநம் கம் சத்யோஜாதபாதாய நம: என்று பாதங்களிலும், இவ்வாறு ஐந்துதானங்களிலும், கணபதி மந்திரத்துடன் பஞ்சப்ரஹ்மமந்திரங்களை நியாசஞ்செய்து, மீண்டும் ஓம் காம் இருதயாய நம: ஓம் கிம் சிரேஸேஸ்வாஹா, ஓம் கூம் சிகாயைவஷட், ஓம் கைம் கவசாய ஹூம், ஓம் கௌம் நேத்ரத்ரயாய வௌஷட் ஓம் க: அஸ்த்ராயபட் என்று இவ்வாறு ஷடங்கமந்திரங்களையும் நியாசஞ்செய்யவேண்டும். இவ்வாறு நியாசம் செய்தலே கணேச வியாபகநியாசமாகும்.

பின்னர், அருக்யம் பாத்யம் ஆசமனீயம் முதலியவற்றை முன்போல் செய்துகொண்டு, புண்யாஹம் முதற்கொண்டு ஸ்நபனம் ஈறுகவுள்ள காரியங்களையும் முன்போலவே செய்து கொண்டு, துவாரத்தை அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து வாயிலின் ஊர்த்வபாகத்தில் உள்ள தென்பக்கத்தில் ஓம் கம் கணபதாய நம: என்றும், வடப்பக்கத்தில் ஓம் ஸம் ஸரஸ்வத்யை நம: என்றும், நடுவில் ஓம்மம் மஹா

லக்ஷ்ம்யை நம: என்றும் பூசித்து, த்வாரத்தின் மேலும் கீழும் உள்ள சிலைகளில், புவங்கர், பதங்கர்களை அருச்சித்து, வலது இடது பக்கங்களில் கூச்மாண்டர், குண்டோதரர் முதலிய துவாரபாலர்களைப் பூசித்து, விநாயகருக்கு எதிரே இருக்கும் மஹாமூஷிகத்தை அருச்சித்து, நைவேத்தியம் முதலிய உப சாரங்களைச் செய்து, உள்ளே பிரவேசிக்கவும்.

பின் நிருருதி திக்கில் ஓம் ஹாம் வாஸ்து தேவாய நம என் றும். மேற்குத்திக்கில் ஓம் ஹாம் ஸரஸ்வத்யை நம: என்றும் வாயுதிக்கில் ஓம் ஹாம்மஹாலக்ஷ்ம்யை நம:என்றும் வடக்குத் திக்கில் ஓம் ஹாம் ஸமிருத்யை நம: என்றும் ஈசானத்தில் ஓம் ஹாம் விஜயாய நம: என்றும் பூசித்து, சிந்தாமணி பீடத்தில் ஆதாரசக்தி முதல் பத்மாஸனம் முடிய அருச்சிக்கவேண்டும்.

அது வருமாறு:— ஓம் ஹாம் ஆதாரசக்தயே நம: என்று ஆதாரசக்தியைப் பூசித்து, ஓம் ஹாம் அநந்தாஸனாய நம: என்று அநந்தாசனத்தைப் பூசித்து, ஆசனத்தின் அக்னி நிருருதி வாயு ஈசானம் ஆகிய திக்குகளில் ஓம் ஹாம் தர்மாய நம: ஓம் ஹாம் க்ஞானாய நம: ஓம் ஹாம் வைராக்யாய நம: ஓம் ஹாம் ஐசுவர்யாய நம: என்று அருச்சித்து, ஓம் ஹாம் கந்தாயநம:, ஓம் ஹாம் பீஜாய நம:, ஓம் ஹாம் அங்குராய நம:, ஓம் ஹாம் நாளாய நம:, ஓம் ஹாம் கண்டகேப்யோ நம:, ஓம் ஹாம் தளேப்யோ நம:, ஓம் ஹாம் கேசரேப்யோ நம:, ஓம் ஹாம் கர்ணிகாப்யோ நம:, ஓப் ஹாம் பத்மாய நம:, என்று பத்மாஸனத்தை அருச்சிக்க வேண்டும்.

பின்னர், முன்போல் கணேசருடைய வியாபகநியாசத் தைக் கணேசருடைய அந்தந்த ஸ்தானங்களில் செய்து கொண்டு ஓம் ஹாம் கணபத்யாசனாய நம:, ஓம் ஹாம் கணபதி மூர்த்தயே நம: என்று ஆசனம் மூர்த்திகளைப் பூசித்து, ஓம் ஹாம் வித்யாதேகாய நம: என்று வித்யாதேகம் கற்பித்து, நேத்ரேப்யோ நம: என்று நேத்ரங்களைப் பூசித்து, ஓம் ஹாம் கம் கணபதயே நம: என்ற மூலமந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து, வக்ரதுண்டாய வித்மஹே ஹஸ்திவக்த்ராய தீமஹி, தந்நோ தந்தீ ப்ரசோதயாத் என்ற கணபதி காயத்ரியை நியாசஞ் செய்யவேண்டும்.

பின்னர் பாசமுத்ரை, அங்குசமுத்ரை, திரிகண்டமுத்ரை, யோனிமுத்ரை, நமஸ்காரமுத்ரைகளை ஸமர்ப்பித்துத் தியா னிக்க வேண்டும். தியானம் வருமாறு:—

மூன்று கண்களையுடையவராயும், செம்மைவர்ணமுடையவராயும், நான்கு கைகளையுடையவராயும், வலது கைகளில் பாசம் தந்தம் என்னும் இவற்றையும் இடது கைகளில் அங்குசம் மோதகம் என்னும் இவற்றையும் உடையவராயும் உள்ள விநாயகரைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து அருச்சித்து தைலாபிஷேகம் முதலியவற்றாலும் முன் கூறப்பட்டபடி பஞ்ச கவ்யம், பஞ்சாமிருதம், ஸ்நபனங்களாலும் அபிஷேகம் செய்து, வஸ்திரம் முதலியவற்றால் அலங்கரித்து முன் சுவாமியைப் பூசித்தவாறுபோல் பூசிக்கவேண்டும். பின்னர் விநாயகருடைய வலது பக்கத்தில் ஓம் ஸ்ரீம் ஸித்திலக்ஷ்மியை நம: என்றும், இடது பக்கத்தில் ஓம் ஹ்ரீம் வல்லபாயை நம: என்றும் அருச்சிக்க வேண்டும்.

## விநாயகருடைய ஆவரணபூஜை

முதல் ஆவரணத்தில் ஓம் கோம் ஈசானமூர்த்தாய நம:, ஓம் கேம் தத்புருஷவக்த்ராய நம:, ஓம் கும் அகோரஹ்ருதயாய நம:, ஓம் கிம் வாமதேவகுஹ்யாய நம:, ஓம் கம் சத்யோஜாதமூர்த்தயே நம:, ஓம் காம் ஹ்ருதயாய நம:, ஓம் கிம் சிரசே நம:, ஓம் கூம் சிகாயை நம:, ஓம் கைம் கவசாய நம: ஓம் கௌம் நேத்ரேப்யோ நம:, ஓம் க: அஸ்த்ராய நம: என்று பஞ்சப்பிரம ஷடங்கமந்திரங்களைப் பூசிக்கவேண்டும்.

இரண்டாவது ஆவரணத்தில்

கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் விக்னேசுவராய நம:,
தெற்குத்திக்கில் ஓம் ஹாம் மகாகர்ணாய நம:,
மேற்குத் திக்கில் ஓம் ஹாம் கஜவக்த்ராய நம:,
வடக்குத் திக்கில் ஓம் ஹாம் மகோதராய நம:,
அக்னிதிக்கில் ஓம் ஹாம் ஏகதந்தாய நம:,
நிருருதிதிக்கில் ஓம் ஹாம் மகாகாயாய நம:,
வாயுதிக்கில் ஓம் ஹாம் விக்னேசாய நம:,

ஈசானதிக்கில் ஓம் ஹாம் கணாதிபாய நம: என்று கணேசருடைய அஷ்டமூர்த்திகளைப் பூசிக்கவேண்டும். இவ்வாறே ஸ்ரீமத் யோக ஜாகமத்திலும் விக்னேசுவரரையும், மகாகர்ணரையும், கஜவக்த்ரரையும், மகோதரரையும், ஏகதந்தரையும், மகாகாயரையும், விக்னேசரையும், கணாதிபரையும் இரண்டாவது ஆவரணத்தில் பூசிக்கவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

மூன்ருவது ஆவரணத்தில் கிழக்குத்திக்கில் ஓம் பால கணபதயே நம:, ஓம் பக்தகணபதயே நம: என்றும், தெற்குத் திக்கில் ஓம் வீரகணபதயே நம:, ஓம் சக்திகணபதயே நம: என்றும், மேற்குத்திக்கில் ஓம் ஸித்திகணபதயே நம:, ஓம் பிங்களகணபதயே நம: என்றும் வடக்குத்திக்கில் ஓம் உச்சிஷ்ட கணபதயே நம:, ஓம் ரக்தகணபதயே நம: என்றும், அக்னி திக்கில் ஓம் க்ஷிப்ர கணபதயே நம:, ஓம் ஹேரம்பகணபதயே நம:, என்றும், நிருருதி திக்கில் ஓம் லக்ஷ்மீகணபதயே நம:, ஓம் விஜயகணபதயே நம:, என்றும், வாயுதிக்கில் ஓம் நிருத்த கணபதயே நம:, ஓம் ஊர்த்வ கணபதயே நம: என்றும், ஈசா னத்தில் ஓம் மகாகணபதயே நம:, ஓம் ஹரித்ராகணபதயே நம: என்றும் பதினாறு கணபதிகளை அருச்சிக்கவேண்டும். இவ் வாறே சிந்தியாகமத்திலும், பாலகணபதி, பக்த கணபதி, வீரகணபதி, சக்தி கணபதி, ஸித்திகணபதி, பிங்களகணபதி, உச்சிஷ்டகணபதி, ரக்தகணபதி, க்ஷிப்ரகணபதி, ஹேரம்ப கணபதி, லக்ஷ்மீகணபதி, விஜயகணபதி நிருத்தகணபதி, ஊர்த்வகணபதி, மஹாகணபதி ஹரித்ரா கணபதி ஆகிய இந் தப் பதினாறு கணபதிகளையும் மூன்ருமாவரணத்தில் பூசிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கின்றது.

நான்காவது ஆவரணத்தில் அக்னிதிக்கில் ஸந்தானவிரு க்ஷத்தைப் பாவித்து அதன் அடியில் ஓம் ஸ்ரஸ்வதீஸமேதாய ப்ரஹ்மணே நம; என்றும், நிருருதிக்கில் மந்தார விருக்ஷத் தைப் பாவித்து அதனடியில் ஓம் லக்ஷ்மீஸமேதாய விஷ்ணவே நம: என்றும் வாயுதிக்கில் கற்பகவிருக்ஷத்தைப் பாவித்து அத னடியில் ஓம் பாவநீஸமேதாய மகேசுவராய நம; என்றும், ஈசானதிக்கில் சந்தனவிருக்ஷத்தைப் பாவித்து அதனடியில் ஓம் ரத்யாஸமேதாய காமதேவாயநம: என்றும் பூசிக்கவேண்டும்.

ஐந்தாவது ஆவரணத்தில், கிழக்குத்திக்கில் ஓம் இந்திராய நம; என்றும் தெற்குத் திக்கில் ஓம் யமாய நம: என்றும், மேற் குத் திக்கில் ஓம் வருணாய நம: என்றும், வடக்குத்திக்கில் ஓம் குபேராய நம: என்றும், அக்னிதிக்கில் ஓம் அக்னயே நம: என்றும், நிருதிதிக்கில் ஓம் நிருருதயே நம: என்றும் வாயு திக்கில் ஓம் வாயவே நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஈசா னாய நம: என்றும், ஊர்த்வபாகத்தில் ஓம் ப்ரஹ்மணே நம: என்றும், கீழே ஓம் விஷ்ணவே நம: என்றும் இவ்வாறு பத்து லோகபாலர்களை அருச்சிக்கவேண்டும்.

பின்னர், தேங்காய், பலவித அன்னங்கள், மோதகம், லட்டு முதலிய நைவேத்தியங்களை நிவேதனஞ் செய்து, தூபம் தீபம் அருக்கியங்கள் சமர்ப்பித்து, அதன் பின்னர் துவார பாலருக்கும் மூஷிகத்திற்கும் எட்டுத் திக்தேவதைகட்கும் பலி யிடவேண்டும். பின்னர், மஹாபலிபீடத்தை ஓம் ஸர்வவிக்ன கணரூபாய நம: என்று அருச்சித்து, ஓம் ஸர்வவிக்னகணேப் யஸ்வாஹா என்று பலிசமர்ப்பித்து, சந்நிதியில் நிரோதார்க் யம் சமர்ப்பித்து எல்லா உபசாரங்களையும் செய்யவேண்டும்.

## சிவபூஜாவிதியிலுள்ள துவாரபூஜை

பின்னர் சிவாலயத்தின் வாயிலையடைந்து, தென்பக்கத் தில் அமர்ந்திருக்கும் கணபதியை அபிஷேகம் முதலிய உபசா ரங்களால் பூசித்து, அர்க்யஜலத்தால் துவாரத்தை அஸ்த்ர மந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து வாயிற்படியின்தெற்கு வடக்கு நடு ஆகிய இடங்களில் புஷ்பங்களைச் சொரிந்து, ஊர்த் வபாகத்தில் தென்பக்கத்தில் ஓம் கணபதயே நம: என்றும், வட பாகத்தில் ஓம் ஸரஸ்வத்யை நம: என்றும், நடுவில் ஓம் மஹாலக்ஷ்ம்யை நம: என்றும் அருச்சித்து, துவாரத்தின் தென்பக்கத்தில் ஓம் ஹாம் நந்தினே நம: என்று அருச்சித்து, அவருக்கு வலது பக்கத்தில் ஓம் ஹ்ரீம் கங்காயை நம: என்று கங்கையை அருச்சித்து, துவாரத்தின் வடபாகத்தில் ஓம் ஹாம் மகா காளாய நம: என்றும், அவருக்கு இடது பக்கத் தில் ஓம் ஹ்ரீம் யமுனையை நம: என்றும் அருச்சித்து, துவார த்தின் கிழேயுள்ள சிலையில் ஓம் ஹாம் புவங்காய நம: என்றும், துவாரத்தின் மேலேயுள்ள சிலையில் ஓம் ஹாம் பதங் காய நம: என்றும், தெற்கு ஸ்தம்பத்தில் ஓம் ஹாம் உத்க ராய நம: என்றும், வடக்கு ஸ்தம்பத்தில் ஓம் ஹாம் அபிதா நாய நம: என்றும், தெற்குக் கதவில் ஓம் ஹாம் விமலாய நம: என்றும், வடக்குக்கதவில் ஓம் ஹாம் ஸுபாஹவே நம: என்றும், பட்டிகையில் ஓம் ஹாம் ஸ்கந்தாய நம: என்றும், தெற்குக் கதவு வளையத்தில் ஓம் ஹாம் ஸூர்யாய நம: என்றும், வடக்குக் கதவு வளையத்தில் ஓம் ஹாம் சந்திராய நம: என்றும், துவாரத்தில் ஓம் நவசக்திப்யோ நம: என்றும், ஆகாசத்தில் ஓம் ஹாம் அஸ்திராய நம: என்றும், வாயிலின் தெற்குப் பக்கத்திலுள்ள சுவரின் பக்கத்தில் ஓம் ஹாம் அஸ்த்ரத்வாரபாலாய டிண்ட்யாஸநாய நம: ஓம்

ஹாம் டிண்டி மூர்த்தயே நம: என்றும் அருச்சித்து டிண்டி தேவரைத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

செம்மை வர்ணத்தையும், பயங்கரமான முகத்தையும், மூன்று கண்களையும், பிடரியையுடைய சிங்கத்தின் சிரசின் மேல் வைக்கப்பட்ட காலையும், ஒரு முகத்தையும், பரந்த கைகளையும், விஸ்மயமுத்திரை, தண்டம் அக்னி என்னு மிவற்றையும், மணிமாலையையும் உடைய டிண்டி தேவரைப் பஜிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து ஓம் ஹாம் டிண்டிநே நம: என்று பூஜித்து, அருக்யத்தைக் கொடுத்து, பின்னர், வடக்குச் சுவரின் பக்கத்தில் அஸ்த்ரத்வாரபாலாய ஓம் ஹாம் முண்ட்யாஸநாய நம:, ஓம் ஹாம் முண்டி மூர்த் தயே நம: என்று பூசித்து முண்டிதேவரைத் தியானம் செய்ய வேண்டும். தியானம் வருமாறு :—

அக்னிக்குச் சமானமான அங்கத்தை உடையவரும், பயங் கரமான முகத்தை உடையவரும், ஜடையை உடையவரும், கையில் தண்டத்தை உடையவரும், பிறிதொரு கையில் வஸ்து முத்ரையை உடையவரும், இடுப்பில் பாசத்தைக் கட்டியிருப் பவரும், கிங்கிணி மாலையையும் ஸர்ப்பாபரணத்தையுமுடைய வரும், இருஷிகள் தேவர்கள் மனிதர்கள் ஆகிய எல்லோ ராலும் சேவிக்கப்படுபவருமாயிருக்கும்* முண்டிதேவரைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து ஓம்ஹாம் முண்டினே நம: என்று பூஜித்து அர்க்யம் சமர்ப்பிக்கவும்.

---

* பூர்வகாரணாகமத்தில் நித்யார்ச்சனவிதிப் படலத்தில் டிண்டி தேவர் முண்டி தேவர்களின் தியானம் இவ்வாறு இருக்கின்றது. அதா வது, செம்மை வர்ணத்தையும், இரண்டு கண்களையும், சர்ப்பப் பூணூலையும், பயங்கரமான சொருபத்தையும், கோரப் பல்லையும், இரண்டு கைகளையும், ஒரு முகத்தையும், ஆச்சரியக் குறிப்பையும், தண்டாயுதத்தையும், வலது பக்கத்தில் இருத்தலையும் உடையவராக டிண்டிதேவரின் சொருபம் கூறப்படுகிறது.

கருமை நிறத்தையும், நான்கு கைகளையும், ஒரு முகத்தையும், பயங்கரமான சொருபத்தையும், கோரப்பல்லால் பயங்கரமான முகத் தையும், தண்டத்தின்மீது வைக்கப்பட்ட ஒரு காலையும், கிங்கிணி மாலையாகிற ஆபரணத்தையும்; தண்டத்தின்மீது வைக்கப்பட்ட கையையும், குந்தளங்களால் அலங்கரிக்கப்பட்ட முகத்தையும், இடது பக்கத்தில் இருத்தலையும் உடையவராக முண்டிதேவரின் சொருபம் கூறப்படுகிறது என்பதாம்.

பின்னர், சுவாமியினுடைய சந்நிதியில் ஓம் ஹாம் விருஷபேசுவஸரானுய நம; ஓம் ஹாம் விருஷபேசுவரமூர்த் தயே நம: என்று ஆசனமூர்த்தி மந்திரங்களால் விருஷப தேவரைப்பூசித்துத் தியானஞ் செய்யவேண்டும். தியானம் வருமாறு:—

*வெள்ளிக்குச் சமானமான சரீரநிறமுடையவராயும், நான்கு கால்களையுடையவராயும், ஊர்த்வமுகத்தையுடையவராயும், செம்மை நிறமுள்ள கொம்புகளையும், அக்கினியின் வர்ணத்தையுடைய மூன்று கண்களையும், கழுத்தில் இர்த்தின மாலையையுமுடையவராயும், கிங்கிணிமாலையை ஆபரணமாக அணிந்தவராயும், பிரமவிஷ்ணு ருத்திர சொரூபராயும், முதன்மையான தேவராயும் இருக்கும் விருஷபராஜரைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து ஓம் ஹாம் விருஷபேசுவராய நம: என்று அருச்சித்து, அருக்யஞ் சமர்ப்பித்து, யஸ்ஸ¬சிருங்க என்னுமாரம்பமுள்ள மந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து, தீக்ஷ்ணசிருங்காயவித்மஹே வேதாபாதாய தீமஹி, தந்நோ விருஷப: ப்ரசோதயாத் என்னும் விருஷப காயத்ரியை நியாசஞ்செய்து, அருக்யம் சமர்ப்பித்து, எல்லாத் துவாரபாலர்கட்கும் நைவேத்யம் சமர்ப்பித்து, தூபம் தீபம் அருக்யங்களையும் சமர்ப்பிக்கவேண்டும்.

பின்னர் வாயிலின் அருகே தேவலோகம் ஆகாயம் பூமி என்னும் இவற்றில் உண்டான மூன்றுவித விக்னங்களையும் போக்கும் நிமித்தம் ஆகாசத்தை திவ்யதிருஷ்டியால் பார்க்க வேண்டும். இடைவெளியில் நாராசமுத்திரை செய்து கொண்டு அஸ்த்ராயஹு¬ம்பட் என்னும் மந்திரத்தால் புஷ்பத்தைச் சிதறவேண்டும். வலதுகால் கட்டைவிரலால் மூன்று முறை பூமியை அஸ்திரமந்திரத்தை உச்சரித்துத் தட்டவேண்டும். மீண்டும் மூன்றுவித விக்னங்களையும் போக்கும் நிமித்

* கிரியாக்கிரம தியோதிகையில் விருஷபத்தின் தியானம் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

விருஷபத்தின் சொரூபத்தை உடையவராயும், மூன்று கண்களை உடையவராயும், உருத்திரரிடம் பற்றிய மனதையுடையவராயும், தர்ம சொரூபராயும், சுத்தமான படிகம்போல் நிர்மலராயும், கூர்மையான கொம்புகளையுடையவராயும் பலமுள்ளவராயும் இருப்பவராக விருஷபதேவர் தியானிக்கப்படுவர் என்பதாம்.

தம் அஸ்திரமந்திரத்தையுச்சரித்து, மணியை மூன்று முறை அடிக்கவேண்டும். வடக்குப் பக்கத்தில் வலதுகாலை முன்னிட்டு சத்யோஜாத மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு உள்ளே பிரவேசிக்க வேண்டும். ஸ்ரீமகுடாகமத்தில்:—

துவாரத்தின்பக்கத்தில் இருக்கும் தேவர்கள் பூசை நடக்குங்கால் மேற்குமுகமாகவும், பலி சமர்ப்பித்த பின்னர் கிழக்கு முகமாகவும் இருக்கின்றனர் என்று கூறப்பட்டிருக்கின்றது. பின்னர் இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு திரையை நீக்கி, ஓம் ஹாம் ஸ்தாணவே நம: என்று சொல்லிக்கொண்டு ஸ்தாணுதேவரைத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

கருமை நிறமுடைய குதிரையின்மீது ஏறியிருப்பவராயும், வஸ்திரம் மாலை என்னும் இவற்றை அணிந்தவராயும் நித்திரையால் மறைக்கப்பட்ட மூன்று உலகங்களையுடையவராயும், கட்வாங்கத்தைத் தரிப்பவராயுமிருக்கும் ஸ்தாணுதேவரை நமஸ்கரிக்கிறேன் என்பதாம்.

## காலசந்தியில் கர்ப்பாவரண பூஜை

இவ்வாறு தியானித்து அருச்சித்து, பின்னர் கருப்பக் கிருஹத்திற்குச் சென்று (தேஹளியை) கொடுங்கையை அஸ்திர மந்திரத்தால் அருச்சித்து, நிருருதி திக்கு முதற்கொண்டு ஈசானதிக்கு ஈறாக கர்ப்பாவரணபூசை செய்யவேண்டும். அது வருமாறு:—

நிருருதிதிக்கில் தம் ப்ரஹ்மாணம் என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, ஓம் ஹாம் வாஸ்த்வதிபதிப்ரஹ்மணே நம: என்று பூசிக்கவும். மேற்குத் திக்கில் நிஷிஸித்தகணபதே என்னும் மந்திரத்தால் கணபதியை அருச்சிக்கவேண்டும். வாயுதிக்கில் ப்ரஜ்ஞேதேவீஸரஸ்வதி என்னும் மந்திரத்தால் ஸரஸ்வதியை அருச்சிக்கவேண்டும். வடக்குத் திக்கில் ஹிரண்யவர்ணும் என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு லக்ஷ்மியை அருச்சிக்க வேண்டும். கோமுகியில் தேவீம்வாசம் என்னும் மந்திரத்தால் வாமை முதலிய ஒன்பது சக்திகளையும் பூசிக்கவேண்டும். ஈசான திக்கில் ஸப்ரஹ்மஸசிவ என்னும் மந்திரத்தால் ஸதாசிவர், அனந்தர், ஸ்ரீகண்டர், அம்பிகா

குரு, குஹர், விஷ்ணு, ப்ரஹ்மா ஆகிய ஏழு குரவர்களையும் பூசிக்கவேண்டும்.

## காலசந்தியில் லிங்கசுத்தி

பின்னர், அபிஷேகபாத்ரத்தை அஸ்திர மந்திரத்தால் எடுத்துக்கொண்டு, அதில் மூலமந்திரத்தால் ஜலத்தை நிரப்பி, இமம்மேகங்கே என்னும் அகமர்ஷணஸூக்த மந்திரத்தால் ஒன்பது தீர்த்தங்களையும் ஆவாஹனஞ்செய்து, தூப தீபங்கள் சமர்ப்பித்து, பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரங்களை ஒரு முறை ஜபித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, திக்பந்தனம் அமிருதீகரணங்களைச்செய்து, மூலமந்திரத்தை ஜபித்து லிங்கத்தின் சிரசில் யோருத்ரோஅப்சு என்னும்மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு உருத்திரரை அருச்சித்து, பெரு விரல் சுட்டுவிரல்களால் நிர்மால்யத்தை எடுத்து, நமோவ: கிரிகேப்யோ என்னும் மந்திரத்தால் ஈசான திக்கில் தாபித்து, ப்ரமுஞ்சதவந்வனஸ்த்வம் என்னும் மந்திரத்தால் அருக்யம் ஸமர்ப்பித்து, அஸ்த்ரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அர்க்யஜலத்தால் லிங்கத்தைப் புரோக்ஷித்து, சிரசில் ஒரு புஷ்பத்தைச் சமர்ப்பித்து, ஓம் ச்லீம்பசும்ஹூம்பட் பாசுபதாஸ்த்ராய நம: என்னும் மந்திரத்தால் லிங்கத்தை நீரால் சுத்தி செய்து, வௌஷடை இறுதியில் உடைய மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு லிங்கபீடத்தைக் குச்சுப் புல்லால் சுத்தம் செய்யவேண்டும்.

## காலசந்தியில் மந்திரசுத்தி

பின்னர் ஆசிரியன், தனது ஆசனத்தில் ஓம் ஹாம் சிவாஸநாய நம: என்றும், இருதயத்தில் ஓம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்றும், ஆசனமூர்த்திமந்திரங்களை நியாசஞ்செய்து, நெற்றியில் செஞ்சந்தனத்தை இட்டுக்கொண்டு, சிகையில் மூலமந்திரத்தை உச்சரித்துப் புஷ்பத்தை வைத்துக்கொண்டு, மந்திரங்களுக்கு அசுத்தி நீங்கும்பொருட்டு ஓம்ஹாம் என்னும் பீஜாக்கரத்தை சுழுமுனைநாடியினுள் அடக்கி, மூலாதாரம் முதற்கொண்டு மஸ்தகம் ஈறுகக் கும்பகம் செய்து, நாதாந்தமாக உச்சரித்து, மூலமந்திரத்தைப் பத்துமுறை ஜபித்து, பஞ்சப்ரஹ்மமந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் ஒருமுறை அபிமந்திரிக்கவேண்டும். அவ்வாறே காரணாகமத்தில், ''பற்

கள் நாலு உதடு இவற்றின் சம்பந்தத்தால் மந்திரங்கள் அசுத்து அடைந்திருக்கின்றன. அவ்வசுத்தியை நீக்குவதற்கு நாதாந்தமாக உச்சரிக்கவேண்டும்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

## காலசந்தியில் ஆதாரசக்தி பூஜை

பின்னர், ஆதாரசிலையில் ஓம் ஹ்ரீம் ஆதாரசக்தயேநம: என்று ஆதாரசக்தியைப் பூஜித்துத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:— ''எல்லாவற்றிற்கும் கீழே கூர்மசிலையில் அமர்ந்தவளாயும், பாலுக்குச்சமமான நிறமுள்ளவளாயும், சிரஸில் மூளைபோல் குடிலமான அடையாளத்தை உடையவளாயும், வரத்தையளிப்பவளாயும், அபயத்தைக் கொடுப்பவளாயும், பாசம் அங்குசம் என்னும் இவற்றைத் தரித்திருப்பவளாயும், எல்லாவற்றையும் தரிக்கும் ரூபத்தையுடையவளாயும் இருக்கும் கிரியாசக்தியைப் பூசிக்கின்றேன் என்பதாம்.

வேறுவிதமாகவும் ஆதாரசக்தித் தியானம் வருமாறு:— முல்லைப்புஷ்பம் சந்திரன் என்னும் இவற்றின் நிறமுள்ளவளாயும், வரத்தையளிப்பவளாயும், மூன்று கண்களையுடையவளாயும், கிரீடத்தைத் தரித்திருப்பவளாயும், வரம் அபயம் பாசம் அங்குசம் என்னும் இவற்றை வலது இடது கைகளில் தரித்திருப்பவளாயும், சூரியன் சந்திரன் என்னும் இவர்களைச் சிரசில் தரித்திருப்பவளாயுமிருக்கும் ஆதாரசக்தியைப் பூஜிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்துப் பீடத்தின்கீழ் நடுவில் ஆதாரசக்தியைப் பூஜிக்கவேண்டும்.

## அனந்தாசன பூஜை

பின்னர், பிரமபாகமான சிலையின் கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் அனந்தாய நம: என்றும், தெற்குத் திக்கில் ஓம் ஹாம் வாசுகயே நம: என்றும், மேற்குத் திக்கில் ஓம் ஹாம் தக்ஷகாய நம: என்றும், வடக்குத் திக்கில் ஓம் ஹாம் கார்கோடகாய நம: என்றும், அக்னிதிக்கில் ஓம் ஹாம் பத்மாய நம; என்றும், நிருருதிதிக்கில் ஓம் ஹாம் மஹாபத்மாய நம: என்றும், வாயுதிக்கில் ஓம் ஹாம் சங்கபாலாய நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் குளிகாய நம: என்றும் பூஜித்து, ஓம் ஹாம் அனந்தாஸனாய நம: என்று அனந்தாஸனத்தைப் பூஜிக்கவேண்டும்.

### சிம்மாஸன பூஜை

பீடத்தின் பூர்வபட்டிகை முதற்கொண்டு அநுகர்ணமீருக சிம்மாஸனத்தைத் தியானித்து, அக்கினிதிக்கில் ஓம்ஹாம் தர்மாய நம: என்றும், நிருருதிதிக்கில் ஓம் ஹாம் க்ஞானய நம: என்றும், வாயுதிக்கில் ஓம் ஹாம் வைராக்யாய நம: என்றும் ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஐசுவர்யாய நம: என்றும் பூசித்து கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் அதர்மாய நம: என்றும், தெற்குத் திக்கில் ஓம் ஹாம் அக்ஞானய நம: என்றும் மேற்குத் திக்கில் ஓம் ஹாம் அவைராக்யாய நம. என்றும், வடக்குத்திக்கில் ஓம் ஹாம் அநைசுவர்யாய நம: என்றும் பூஜிக்கவேண்டும். உயரேயுள்ள கர்ணத்தின்வளேவின் தெற்குத்திக்கில் ஓம் ஹாம் ராஜஸாய நம: என்றும், வடக்குத் திக்கில் ஓம் ஹாம் தாமஸாய நம: என்றும், நடுவில் ஓம் ஹாம் ஸாத்விகாய நம: என்றும் பூஜித்து இவ்வாறு சிம்மாஸனத்தைப் பூஜிக்கவேண்டும்.

### யோகாஸன பூஜை

அதற்குமேல் யோகாஸனத்தைப் பூஜிக்கவேண்டும். பூஜை வருமாறு—அக்னிதிக்கில் ஓம் ஹாம் கிருதயுகாய நம: என்றும், நிருருதிதிக்கில் ஓம்ஹாம் திரேதாயுகாய நம, என்றும், வாயுதிக்கில் ஓம்ஹாம் துவாபரயுகாய நம: என்றும், ஈசானதிக்கில் ஓம்ஹாம் கலியுகாய நம: என்றும் பூஜித்து, உயரேயுள்ள அநுகர்ணிகை முதல் உயரேயுள்ள பட்டிகை ஈருகவுள்ள இடத்திற்குள், ஈசானதிக்குக் கிழக்குத் 'திக்குகளின் நடுவில் ஓம்ஹாம் அவ்யக்தாய நம. என்றும் தெற்குத்திக்கு அக்னிதிக்குகளின் நடுவில் ஓம் ஹாம் நியதயே நம: என்றும், நிருருதிதிக்கு வருணதிக்குகளின் நடுவில் ஓம் ஹாம் காலாய நம: என்றும், வாயுதிக்கு வடக்குத்திக்குகளின் நடுவில் ஓம் ஹாம் கலாயை நம: என்றும், நடுவில் ஓம் ஹாம் கேசவாய நம: என்றும் பூஜித்து, நிருருதிதிக்கில் ஓம் ஹாம் அதச்சதனய நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஊர்த்வச்சதனய நம: என்றும் பூஜித்து, ஓம் ஹாம் யோகாஸநாய நம என்று யோகாஸனத்தைப் பூஜிக்கவேண்டும்.

### பத்மாசன பூஜை

உயரே உள்ள பட்டிகையின்மேல் மலர்ந்த பத்மாசனத்தைப் .பாவனைசெய்து, பட்டிகையின் அடியில் கிழக்குத்

திக்கில் ஓம்ஹாம் கந்தாய நம: என்றும், அக்னிதிக்கில் ஓம் ஹாம் பீஜாய நம: என்றும், தெற்குத் திக்கில் ஓம் ஹாம் அங்குராய நம: என்றும், நிருருதிதிக்கில் ஓம் ஹாம் நாளாய நம: என்றும், மேற்குத் திக்கில் ஓம் ஹாம் கண்டகேப்யோ நம: என்றும், வாயுதிக்கில் ஓம்ஹாம் தளேப்யோ நம: என்றும், வடக்குத்திக்கில் ஓம் ஹாம் கேசரேப்யோ நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் கர்ணிகாயை நம: என்றும், இவ்வாறு எட்டுத் திக்குகளில் பூசித்து, நடுவில் ஓம்ஹாம் பத்மாசனாயநம: என்று பத்மாசனத்தைப் பூசிக்கவேண்டும். பத்மத்தின் எட்டுத்தளங்களில் ஓம்ஹ்ரீம் வாமாயைநம: என்றும், ஓம் ஹ்ரீம் ஜ்யேஷ்டாயை நம: என்றும், ஓம் ஹ்ரீம் ரௌத்ர்யைநம: என்றும், ஓம் ஹ்ரீம் காள்யை நம: என்றும் ஓம் ஹ்ரீம் கலவிகரண்யை நம: என்றும்: ஓம் ஹ்ரீம் பலவிகரண்யை நம: என்றும், ஓம் ஹ்ரீம் பலப்ரமதின்யை நம: என்றும், ஓம் ஹ்ரீம் ஸர்வபூததமன்யை நம: என்றும், கர்ணிகையின் நடுவில் ஓம் ஹ்ரீம் மனோன்மன்யை நம: என்றும் இவ்வாறு ஒன்பது சக்திகளையும் பூசிக்கவேண்டும். பின், நமஸ்காரமுத்திரை காண்பித்து, ப்ட்டிகையின் உள்ளிருக்கும் கேசரங்களின் நுனி நடு அடி என்னும் இவற்றில் மூன்று வளைவுகளைப் பாவித்து, நுனி வளையத்தின் தென்பக்கத்தில் ஓம் ஹாம் ஆத்மதத்வாய நம:, ஆத்மதத்வாதிபதயே ஓம் ஹாம் ப்ரஹ்மணே நம: என்றும், நுனி வளையத்தின் வடக்குப் பக்கத்தில் ஓம் ஹாம் வித்யாதத்வாய நம:, வித்யாதத்வாதிபதயே ஓம் ஹாம் விஷ்ணவே நம: என்றும், நுனிவளையத்தின் நடுவில் ஓம் ஹாம் சிவதத்வாய நம: சிவதத்வாதிபதயே ஓம் ஹாம் ருத்ராய நம; என்றும் பூசிக்கவேண்டும்.

## விமலாசன பூஜை

கர்ணிகையின், நடுவில் மூன்று மண்டலங்களையும் பாவித்து, முதல் மண்டலத்தில் தளத்தின் நுனியில் உள்ள வளைவில் ஓம் ஹாம் சூரியமண்டலாய நம:, சூரியமண்டலாதிபதயே ஓம் ஹாம் ப்ரஹ்மணே நம: என்று பிரமபாகத்தில் சூரியமண்டலத்தைப் பூசித்து, இரண்டாவது மண்டலத்தில் கேசரத்தின் நுனியில் உள்ள வளைவில் ஓம் ஹாம் சோமமண்டலாய நம:, சோமமண்டலாதிபதயே ஓம்ஹாம் விஷ்ணவே நம: என்று சந்திரமண்டலத்தை விஷ்ணுபாகத்தில் பூசித்து

மூன்ருவது மண்டலத்தில் கர்ணிகையின் நுனிவளேவில் ஓம் ஹாம் அக்னிமண்டலாய நம:, அக்னிமண்டலாதிபதயே ஓம் ஹாம் ருத்ராய நம: என்று அக்னிமண்டலத்தை ருத்ரபாகத்தில் பூசிக்கவேண்டும். இது விமலாசன பூஜை.*

இவ்வாறே காரணுகமத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—'' பூசிக்கப்படும் இலிங்கத்தை மூன்று பாகமாகச் செய்துகொள்ளவும். ருத்ரபாகம் கீழே உள்ளது. நடுவில் மஹேசுவரரைப் பூசிக்கவேண்டும். மேல்பாகத்தில் சதாசிவரைப் பூசிக்க வேண்டும். சூரியமண்டலம் சந்திரமண்டலம் அக்னிமண்டலங்களேயும் பூசிக்கவேண்டும். சத்தி சிவன் என்னும் இவர்களே சுகாசனர்களாக மகேசுவரபாகம் ஸதாசிவபாகம் இவற்றில் பூசிக்கவேண்டும். ஆகவே, ஐந்து பாகங்களில் பூசைசெய்யவேண்டுமென்றவாருயிற்று. விஷ்ணுபாகத்தில் பத்மாசனம் யோகாசனம் இவற்றைப் பூசிக்கவேண்டும். சிம்மாசனபூஜை செய்தபிறகு பிரமபாகத்தில் பிரமனேயும், மகேசுவரபாகத்தில் மகேசுவரரையும், மேல்பாகத்தில் சதாசிவரையும் பூசித்து, தண்டபங்கிநியாசம், முண்டபங்கிநியாசங்களேயும் செய்யவேண்டும்'' என்பதாம். இவ்வாறு விமலாசனத்தைப் பூசித்து நடுவில் ஓம்ஹாம் சக்திமண்டலாய நம: சக்திமண்டலாதிபதயே ஓம்ஹாம் ஈசுவராய நம: என்று சக்தி மண்டலத்தைப் பூசிக்கவேண்டும்.

## ஆவாஹனம்

அதற்குமேல் உள்ள.ஸதாசிவபாகத்தில் ஓம் ஹாம் சிவாசனுயநம: என்று சிவாசனத்தையும், ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயே நம: என்று சிவமூர்த்தியையும் அருச்சித்து, சிவமூர்த்தியைத் தேஜோரூபமாயும், தண்டாகாரமாய்ப் பிரியாதிருக்குமவயவங்களுடன் கூடியதாயும், சிவதத்வசொரூபமான பரபிந்துவை வியாபிக்கிறதாயும், தியானித்து நியாசஞ் செய்து, ஹோம் ஈசானமூர்த்தாய நம;, ஹேம் தத்புருஷவக்

---

* இவ்வாறே காரணுகமத்தில் நித்யார்ச்சனு விதிப்படலத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—''ஆத்மதத்துவத்தை வலப்பக்கத்திலும், வித்யாதத்வத்தை இடப்பக்கத்திலும், நடுவில் சிவதத்வத்தையும் கற்பிக்கவேண்டும். இவ்வாருன பத்மாஸன பூஜை கூறப்பட்டது. இதற்குமேல் உள்ளது விமலாசனமாகும். இந்த விமலாசனத்திலே மூன்று மண்டலங்களேயும் கற்பிக்கவேண்டும்'' என்பதாம்.

த்ராய நம:, ஹூம் அகோர ஹிருதயாய நம:, ஹிம் வாம தேவ குஹ்யாய நம:, ஹம் ஸத்யோ ஜாதபாதாய நம: என்று பெருவிரல் முதலிய ஐந்து விரல்களாலும் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களின் பீஜாக்கரங்களுடன் ஈசானம் முதற்கொண்டு சத்யோஜாதமீருகவுள்ள மந்திரங்களை தண்டபங்கிமுறையாக நியாசஞ்செய்து பிறகு ஓம் ஹாம் ஈசானமூர்த்தாய நம: என்று ஊர்த்வமூர்த்தாவிலும், ஓம் ஹாம் தத்புருஷமூர்த்னே நம: என்று கிழக்கு மூர்த்தாவிலும், ஓம் ஹாம் அகோர மூர்த்னே நம: என்று தெற்குமூர்த்தாவிலும், ஓம் ஹாம்வாம தேவமூர்த்னே நம: என்று வடக்குமூர்த்தாவிலும், ஓம் ஹாம் ஸத்யோஜாத மூர்த்னே நம: என்று மேற்குமூர்த்தாவிலும் இவ்வாறு முண்டபங்கிக்ரமமாக ஈசாளுதிபஞ்சப்ரஹ்ம மந்திரங்களை நியாசஞ்செய்து, பிறகு ஓம் ஹாம் ஈசானவக்த்ராய நம: என்று ஊர்த்வமுகத்திலும், ஓம் ஹாம் தத்புருஷவக்த்ராய நம: என்று கிழக்குமுகத்திலும், ஓம் ஹாம் அகோரவக்த்ராய நம: என்று தெற்கு முகத்திலும், ஓம் ஹாம் வாமதேவ வக்த்ராய நம என்று வடக்கு முகத்திலும், ஓம் ஹாம் ஸத்யோ ஜாத வக்த்ராய் நம: என்று மேற்கு முகத்திலும் இவ்வாறு வக்த்ர பங்கிமுறையாகப் பூசித்து, முன்போல் அஷ்ட த்ரிம்சத் கலா நியாசங்களைச் செய்யவேண்டும். பின்னர் ஸ்ரீகண்ட நியாசம் முதலிய நியாசங்களையும் செய்யவேண்டும்.

அதன்பின் ஸதாசிவரைத் தியானிக்க வேண்டும், தியானம் வருமாறு:—

ஆதாரசக்திமுதல் குடிலைசக்தி ஈருக மந்திரத்தாலாகிய சிம்மாசனத்தில் இருப்பவராகவும், சுத்தமான படிகத்திற்குச் சமானராகவும் முப்பத்திரண்டு இலக்கணங்கள் அமைந்துள்ளவராகவும், பத்மாசனத்தின்மீது வீற்றிருப்பவராகவும், ஐந்து முகங்களும் ஒவ்வொரு முகந்தோறும் க்ஞானக்ரியேச்சாரூபமான மூன்று கண்களை உடையவராகவும், க்ஞானசக்தியாகிய சந்திரகலையை உடையவராகவும், வெண்மையான ஈசான முகத்தையும், பொன்மையான தத்புருஷ முகத்தையும் கருமையான அகோரமுகத்தையும், செம்மையான வாமதேவ முகத்தையும், வெண்மையான சத்யோஜாத முகத்தையும் உடையவராகவும், சர்ப்பத்தைப் பூநூலாக அணிந்தவராகவும், சாந்தராகவும், ஜடை; பிறை இவற்ருல் அலங்கரிக்கப்பட்டவராகவும், சத்தி, கத்தி, சூலம் கட்வாங்கம், வரம் என்

னும் இவற்றை வலதுகைகளிலும், டமருகம், மாதுளம்பழம் நாகம், ஜபமாலே, நீலோத்பலம் என்னும் இவற்றை இடது கைகளிலுமுடையவராகவும் தியானிக்க.

அல்லது பரசு, கட்கம் சூலம், வஜ்ரம், அக்னி என்னும் இவற்றை வலதுகைகளிலும், அபயம், மணி, நாகம், பாசம்; அங்குசம் என்னுமிவற்றை இடதுகைகளிலும் உடையவராக வேனும் தியானிக்க.

அல்லதுகத்தி, கேடயம், தனுசு, பாணம், கட்வாங்கம், கபாலம், கமண்டலம், ஜபமாலே, வரம், அபயம் என்னும் இவற்றை முறையே வலது இடது கைகளில் தரித்திருப்பவராகவேனும் தியானிக்க.

கைகளில் இவ்வாறு ஆயுதங்களே உடையவராகவும், லிங்கமூர்த்திக்குமேல் சத்தியுடன் தோன்றியவராகவும் தியானித்து லிங்கமென்னும் புத்தியை நீக்கவேண்டும். இவ்வாறு மூர்த்தியைத் தியானித்து ஓம் ஹாம் ஹௌம் வித்யாதேகாய நம: என்னும் மந்திரத்தால் வித்யாதேகத்தை நியாசித்து, ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நம: என்னும் மந்திரத்தால் நேத்ரத்ரயம் கொடுத்து ஆவாஹனம் செய்யவேண்டும். ஸ்ரீமத்காரணாகமத்தில்,

*''ஆவாஹனஞ் செய்யும்பொழுது யோகாசனத்தையும், அபிஷேககாலத்தில் சிம்மாசனத்தையும், அருச்சிக்கும் காலத்தில் † பத்மாசனத்தையும், நைவேத்தியஞ் சமர்ப்பிக்கும் காலத்தில் விமலாசனத்தையும், ஸ்தோத்ரம் சங்கீதம் நர்த்தனம் ஆகியவுபசாரங்களில் அனந்தாசனத்தையும் பூசிக்க வேண்டும் என்று கூறப்பட்டு இருக்கிறது.

இந்த முறைப்படி ஆவாஹனஞ் செய்யும்பொருட்டு யோகாசனத்தைப் பூசிக்கவேண்டும்.
ஸ்ரீமத்காமிகாகமத்தில்,

சுயம்புலிங்கம் தைவிகலிங்கம் இவற்றிற்கு ஆவாஹன விதி கிடையாது; ஏனையலிங்கங்கட்கு ஆவாஹனவிதி உண்டு என்று கூறப்பட்டிருக்கிறது.

---

* சிவார்ச்சனுசந்திரிகையில் பத்மாஸனத்தை என்றிருக்கிறது.

† சிவார்ச்சனுசந்திரிகையில் விமலாசனத்தை என்றிருக்கிறது.

இந்த வசனத்தை அனுசரித்து சுயம்புலிங்கம் தைவிக லிங்கமல்லாத வேறு லிங்கங்களில் செய்யப்படும் ஆவாஹன முறை வருமாறு:—

ஆசிரியன் தன்னுடைய இருதயம், கழுத்து, புருவநடு, சிரசு, துவாதசாந்தம் ஆகிய ஸ்தானங்களில் மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, முறையே பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுவரர், சதாசிவர் ஆகிய மும்மூர்த்திகளைப் பாவனை செய்து, கும்பகத்தினால் ஐவரையும் சதாசிவராகப் பாவித்து, ரேசகத்தினால் கையினுள்ளிருக்கும் புஷ்பத்துள் சதாசிவரைச் சேர்ப்பிவித்து, கோடி சந்திரனுடைய பிரகாசத்தையுடைய தாக அந்தப் புஷ்பத்தைத் தியானித்து, புருவத்தின் நேராக அஞ்சலி செய்து, பிந்து சொரூபமாகத் தியானித்து, ரேசகஞ் செய்து, திவ்விய திருஷ்டியால் பார்த்து, இருதயமந்திரத்தை உச்சரித்து உத்பவமுத்ரை செய்துகொண்டு, நமோந்தமான மூலமந்திரத்தால் லிங்கமஸ்தகத்தின்மேல், ஈசானஸ்ஸர்வ வித்யாநாம் என்பது முதல் ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி என்பது ஈருகவுள்ள பஞ்சப்ரஹ்ம மந்திரங்களால் ஆவாஹனஞ் செய்து; ஸ்தாபனம் முதல் திக்பந்தனமீருகச்செய்து, இருதயம் முதற்கொண்டு அஸ்திரமீருகவுள்ள மந்திரங்களால் பூசிக்க வேண்டும்.

பூஜை செய்யுமுறை வருமாறு:— நமோவ: கிரிகேப்யோ என்னும் மந்திரத்தால் ஸ்தாபனமும், அஸ்மின்மஹத்யர்ணவே என்னும் மந்திரத்தால் சன்னிதானமும், யாதேருத்ர சிவாதநூ என்னும் மந்திரத்தால் சன்னிரோதனமும், அத்யவோசததிவக்தா என்னும் மந்திரத்தால் அவகுண்டனமும், த்ரயம்பகம் யஜாமஹே என்னும் மந்திரத்தால் பரமீகரணமும், ப்ரமுஞ்சதந்வநஸ்த்வ என்னும் மந்திரத்தால் திக்பந்தனமும் செய்து, பிரார்த்தனை செய்யவேண்டும். பிரார்த்தனை வருமாறு:—

"உலகத்தைக் காக்கும் ஓ சுவாமி! பூஜை முடியும்வரை இந்த லிங்கத்தில் நீர் கிருபையுடன் சான்னித்தியஞ் செய்ய வேண்டும்" என்பதாம்.

இவ்வாறு 'பிரார்த்தித்துக்கொண்டு சுவாகதார்க்யம் கொடுத்து, ஷடங்கமந்திரங்களால்பூசித்து, ஓம் தந்மஹேசாய வித்மஹே வாக்விசுத்தாய தீமஹி, தந்நச்சிவப்ரசோதயாத் என்னும் சிவகாயத்ரி மந்திரத்தால் மூன்று புஷ்பாஞ்சலிகளைக்

கொடுக்கவேண்டும். ஐந்து முகங்களிலும், ஈசானம்முதலிய ஐந்து மந்திரங்களால் தேனுமுத்ரை பத்மமுத்ரை லிங்க முத்ரை அஸ்திரமுத்ரை மகாமுத்ரைகளைக் காண்பித்து, ஷடங் கங்களில் பஞ்சமுகிமுத்ரை மஹாமுத்ரை அஞ்சலி முத்ரை களைச் சமர்ப்பித்து. பாத்யம் அருக்யம் ஆசமனம் தூபம் தீபம் இவற்றைச் சமர்ப்பித்து. ருத்ரசூக்தம் வ்யோம வியாபிபதமந் திரம் இவற்றை ஒருமுறை ஜபிக்க.

## அபிஷேக விதி

பின்னர் அபிஷேகத்திற்காக சிம்மாசனத்தைப் பூசித்து; வௌஷட் என்னும் பதத்தை இறுதியில்உடைய மூலமந்திரத் தால் லிங்கத்தின் சிரசில் ஒரு புஷ்பத்தைச் சமர்ப்பித்து சதா சிவரைப் பிரார்த்திக்கவேண்டும். பிரார்த்தனை வருமாறு:—

ஓ தேவர்களுக்கும் தேவரே! உலகத்தை இரக்ஷிப்பவரே! ஐந்துமுகங்களையுடையவரே! ஊர்த்வமுகமுடைய தேவரீர் ஆத்மரக்ஷையின்பொருட்டு அபிஷேகத்திற்காக எழுந்தருள வேண்டும் என்பதாம். இவ்வாறு பிரார்த்தித்து மூலமந் திரத்தை உச்சரித்து, அபிஷேகபாத்திரத்தைக்கிரகித்து, பாத் திரத்தின் பின்பக்கம் நடு உதடு என்னும் இந்த இடங்களில் ஓம் ஹாம் சோமமண்டலாய நம: ஓம் ஹாம் சூர்யமண்டலாய நம:, ஓம் ஹாம் அக்னிமண்டலாய நம: என்று பூசித்து, மூல மந்திரத்தை அபிமந்திரித்து. மேலுங்கீழும் செல்லும் சுவாஸங் களை அடக்கிக்கொண்டு அபிஷேகஞ் செய்யவேண்டும். அவ் வாறே பீமஸம்ஹிதை என்னும் ஆகமத்தில் கூறப்பட்டிருக் கின்றது.

அது வருமாறு:— "சந்திரசூரியர்கள் இல்லாதபொழுது செய்யப்படும் பூசை எல்லாச் சித்திகளையும் தரும். இக்காலந் தவறிப் பூஜை செய்யின் அது பலனைத்தராது. சந்திரசூரியர் கள் இல்லாத காலம் மநுஷ்யஉலகில் அரிது. ஆனால் சூக்கும மாக இருக்கிறது. கேள். மேல்நோக்கிய சுவாஸம் சூரியனாகும் கீழ்நோக்கிய சுவாஸம் சந்திரனாகும். இவற்றைத் தடுத்த பொழுது சந்திரசூரியர்கள் இல்லாத காலமாகும்" என்ப தாம்.

இந்த முறையை அனுசரித்து மேலுங்கீழுமுள்ள பிராண வாயுவை நிரோதனஞ் செய்துகொண்டு, மூலமந்திரத்தை உச்சரித்து "காலையில் ஐந்து கலமும், உச்சிக்காலத்தில் பத்துக்

கலமும், சாயங்காலத்தில் மூன்று கலமும், அர்த்தஜாமத்தில் இரண்டு கலமும். உபசந்திகளில் நான்குநான்காக எட்டுக் கல மும் உள்ள தீர்த்தங்களையுபயோகப்படுத்தவேண்டும்'' என்று காரணாகமத்தில் கூறப்பட்டிருத்தலால், அந்தந்தக்காலத்திற் குரிய ஜலஅளவுடன் கூடியதாயும், பரிமளம் சேர்ந்ததாயும் உள்ள தீர்த்தத்தால் நிரப்பப்பெற்ற கலசத்தைப்பூரகஞ் செய்து எடுத்து ரேசகத்தால் கொண்டு வந்து, கீழும் மேலும் இடது வலது கைகளால் கலசத்தைக் கும்பகம் செய்து பிடித் துக்கொண்டு, லிங்கமஸ்தகத்தில் நாலு அங்குல நீளமாகவும், பசுவின்கொம்பின் பருமனாகவும் அபிஷேகஞ்செய்து, மீண்டும் இருதயமந்திரத்தை உச்சரித்து தைலத்தை அபிஷேகஞ் செய்து, கவசமந்திரத்தை உச்சரித்து, நெல்லிமாவை லிங்கத் தின் பீடத்தில் பூசி சுத்தோதகத்தால் அபிஷேகஞ்செய்து, பஞ்சப்ரஹ்மமந்திரங்களாலும் ஷடங்கமந்திரங்களாலும் பஞ் சகவ்யம் பஞ்சாமிருதம் என்னும் இவற்றை அபிஷேகஞ் செய்து வியோமவியாபிமந்திரத்தை அபிமந்திரித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, நெய் பால் தயிர் தேன் கருப் பஞ்சாறு பழச்சாறு இளநீர் என்னும் இவற்றை அஸ்திரமந்தி ரத்தால் அபிஷேகஞ்செய்து, குசோதகம், வில்வோதகம், அஸ் திரமந்திரத்தால் அபிமந்திரித்த அர்க்யஜலம் என்னும் இவற்றை புவநகலாதத்வமந்திரங்களால் அபிஷேகஞ்செய்து, மஞ்சட்பொடியுடன்கூடிய தீர்த்தத்தை சத்திமந்திரத்தால் பீடத்தின்மீது அபிஷேகஞ் செய்து. மூலமந்திரத்தை உச்ச ரித்து சுத்தோதகத்தை அபிஷேகஞ்செய்து, கஸ்தூரிபச்சைக் கருப்பூரம் குங்குமப்பூ என்னும் இவற்றின் பொடியுடன்கூடிய வாசனை தீர்த்தத்தால் மூலமந்திரத்தை உச்சரித்து லிங்கத் தின் பீடத்தில் அபிஷேகஞ்செய்து, இருதயமந்திரத்தையுச்ச ரித்து புஷ்பத்தைச் சமர்ப்பித்து, நைவேத்யம் தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து சுத்தோதகத்தால் அபிஷேகஞ் செய்து. மூலமந்திரத்தை உச்சரித்து ஸஹஸ்ரதாரை நவகல சஸ்நபனோதகம், சங்கோதம்என்னும்இவற்றையும்பஞ்சப்ரஹ் மஷடங்கமந்திரங்களால் சுத்தோதகத்தையும் அபிஷேகஞ் செய்து. சிரசில் ஒரு புஷ்பஞ் சாத்தவேண்டும். இவ்வாறே சித் தாந்த ரத்னாகரத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு—

தைலாபிஷேகம், மாக்காப்பு, நெல்லிக்காப்பு பஞ்சகவ் யம், பஞ்சாமிருதம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு,

பழச்சாறு இளநீர், சுகந்ததாரை, ஸ்நபனம், சங்கதீர்த்தம் என்னும் இவற்ருல் அபிஷேகஞ் செய்யவேண்டும் என்பதாம்.

பின்னர், சுத்தமான வஸ்திரத்தால் துடைக்கவேண்டும். இவ்வாறே பிறநூலிலும் கூறப்படுகிறது. அது வருமாறு:— உலர்ந்த சுத்தமான வஸ்திரத்தால் துடைத்தால் சுத்தம் உண்டாகும். ஈரவஸ்திரத்தால் துடைப்பின் (பிராயச்சித்த மாக) சூர்யதர்சனஞ் செய்யவேண்டும் என்பதாம்.

பின்னர், அந்த அந்தக் காலத்திற்கு உரிமையான வஸ் திரம், கந்தம், புஷ்பம், மாலை, உபவீதம் என்னும் இவற்ரு லும் பட்டம், கிரீடம், குண்டலம், ஹாரம் என்னும் இவற்ரு லும், லிங்கத்திற்கு முறைப்படி அலங்காரஞ் செய்யவேண் டும். இவ்வாறே ஸ்ரீமத் காரணுகமத்திலும் கூறப்பட்டிருக் கிறது. அதுவருமாறு:—

காலையில் பொன்மை நிறமுடைய ஆடையும், மத்தியான காலத்தில் செம்மை நிறமுடைய ஆடையும், சாயங்காலத் தில் சித்திர நிறமுடைய ஆடையும், அர்த்தயாமத்தில் எல்லாவிதவர்ணமுடைய ஆடையும் உபயோகப்படுத்தப்பட லாம். அந்த அந்தக் காலத்திற்குரிய ஆடை கிடையாவிடில் வெண்மை ஆடையை எக்காலத்திலும் உபயோகிக்கலாம். லிங்கத்தின் அளவை நான்கு பாகமாகச் செய்து அடியிலுள்ள ஒரு பாகத்தை ஆடையாலும், இரண்டாவது பாகத்தை ஆபரணங்களாலும், மூன்ருவது பாகத்தைப் புஷ்பங்களாலும், நான்காவது பாகத்தைச் சந்தனத்தாலும் அலங்கரிக்கவேண் டும் என்பதாம்.

பின்னர், மூலமந்திரத்தை உச்சரித்துப் புஷ்பங்கொண் டர்ச்சித்து, பீடத்தில் மனேன்மனியை மனேன்மனீ மூலமந் திரத்தால் அருச்சித்து, மந்திரஹவிஸ் நைவேத்யம் தூபம் தீபம் அருக்யம் சமர்ப்பித்து, ஆவரணபூசை செய்யவேண்டும். பீடத்தில் பத்மாசனத்தை அருச்சித்து நமஸ்காரமுத்ரை காண்பிக்கவேண்டும்.

## ஆவரண பூஜை

அஜிதாகமத்தில் ஆவரண பூஜை செய்யுமுறை கூறப்பட் டிருக்கிறது. அது வருமாறு:—

லிங்கபீடங்களை மத்யத்தில் பூசித்து, ஊர்த்துவ முகத் தில் ஈசான மந்திரத்தையும், கிழக்குமுகத்தில் தத்புருஷ மந்

திரத்தையும், தெற்குமுகத்தில் அகோர மந்திரத்தையும், வடக்குமுகத்தில் வாமதேவ மந்திரத்தையும், மேற்குமுகத்தில் சத்யோஜாத மந்திரத்தையும் வக்த்ரபங்கிநியாச முறையாகவும், அக்கினி திக்கில் இருதய மந்திரத்தை நமோந்தமாகவும், நிருருதி திக்கில் சிரோ மந்திரத்தை சுவாஹாந்தமாகவும், வாயு திக்கில் சிகா மந்திரத்தை வஷடந்தமாகவும், ஈசான திக்கில் கவச மந்திரத்தை ஹூம்பதத்தை இறுதியில் உடையதாகவும், மத்யத்தில் நேத்ர மந்திரத்தை வௌஷடந்தமாகவும், அதற்கு ஈசானபாகத்தில் அஸ்திரமந்திரத்தை ஹூம்படந்தமாகவும் பூசை செய்யவேண்டும். இவ்வாறு முதலாவரணமாக முகங்களில் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களையும் பீடத்தின்மேல் அங்க மந்திரங்களையும் பூசிக்கவேண்டும்.

இரண்டாமாவரணமாக ஊர்த்வபட்டிகையின் வளைவிலுள்ள தளங்களின் நடுவில் அஷ்டவித்யேசுவரர்களைப் பூசிக்கவேண்டும்.

மூன்றுமாவரணமாகக் கண்டமென்னுமிடத்தில் கணேசர் முதலியவர்களைப் பூசிக்கவேண்டும்.

நான்காமாவரணமாகக் கீழ்ப்பட்டிகையில் திக்பாலர்களைப் பூசித்து, ஐந்தாமாவரணமாகச் சிலையில் ஆயுதங்களைப் பூசிக்கவேண்டும். இவ்வாறு வக்திரபங்கிக்ரமமான பூஜை கூறப்பட்டது. தேகபங்கிக்ரமமாக சதாசிவர், மகேசுவரர், உருத்திரர், விஷ்ணு, பிரமன் ஆகிய இவர்களைப் பூசிக்கவேண்டும் என்பதாம்.

இவ்வாறு முதலாவரணத்தில் முறையே சிரசின் ஈசான பாகத்தில் ஓம் ஹோம்* ஈசாநாய நம: என்றும், கிழக்குப் பாகத்தில் ஓம் ஹேம் தத்புருஷாய நம: என்றும், தெற்குப் பாகத்தில் ஓம் ஹூம் அகோராய நம: என்றும் வடக்குப் பாகத்தில் ஓம் ஹிம் வாமதேவாய நம: என்றும், மேற்குப் பாகத்தில் ஓம்ஹம் ஸத்யோஜாதாய நம: என்றும் அருச்சித்து, மீண்டும் ஈசான பாகத்தில் ஓம் உமாயை நம: என்றும், கிழக்குப் பாகத்தில் ஓம் கௌர்யை நம: என்றும், தெற்குப் பாகத்தில் ஓம் கங்காயை நம: என்றும், வடக்குப் பாகத்தில் ஓம் கணாத்யக்ஷாயை நம: என்றும், மேற்குப் பாகத்தில் ஓம் அம்பிகாயை நம: என்றும் இவ்வாறு ஐந்து சக்திகளையும் அருச்சிக்கவேண்

* தண்டபங்கிக்ரமமாக அர்ச்சிக்கப்படும் முறை சிவார்ச்சனசந்திரிகையில் கூறப்பட்டிருக்கிறது.

டும். இவ்வாறே அம்சுமான் ஆகமத்திலும் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு :—

உமை கௌரி, கங்கை, கஜும்பிகை, அம்பிகை ஆகிய ஐந்து சக்திகளையும் ஈசானம் முதலிய பாகங்களில் பூஜிக்க வேண்டும் என்பதாம்.

பின்னர் அக்கினிதிக்கில் ஓம்ஹாம் ஹ்ருதயாய நம: * நிருருதிதிக்கில் ஓம் ஹீம்சிரசே சுவாஹா, வாயுதிக்கில் ஓம் ஹூம் சிகாயை வஷட், ஈசானதிக்கில் ஓம் ஹைம் கவசாய ஹூம், நடுவில் ஓம் ஹௌம் நேத்ரத்ரயாயவௌஷட், அதற்கு ஈசானத்தில் ஓம்ஹ: அஸ்த்ராயபட் என்று அருச்சித்து, மகேசுரபாகத்தில் ஓம்ஹாம் வித்யாதேகாய நம: என்று அருச்சித்து. மீண்டும் அக்னி திக்கில் ஓம் வாமிந்யை நம: நிருருதிதிக்கில் ஓம் நீலின்யை நம:, வாயுதிக்கில் ஓம் சக்ரியை நம:, ஈசானதிக்கில் ஓம் †பாசாங்க்யை நம:, நடுவில் ஓம் கட்கின்யை நம:, மீண்டும் ஈசானத்தில் ஓம் ‡பங்கின்யை நம:, வித்யாதேகத்தில் ஓம் வாக்ம்யை நம: என்று இவ்வாறு ஏழு சக்திகளையும் பூசிக்கவேண்டும். இவ்வாறே சூக்ஷூமாகமத்திலும் கூறப்பட்டிருக்கின்றது, அது வருமாறு :—

அக்னிதிக்கில் வாமினியையும், நிருருதிதிக்கில் நீலினியையும், வாயுதிக்கில் சக்ரியையும். ஈசானத்தில் பாசாங்கியையும், மத்தியத்தில் கட்கினியையும், மீண்டும் ஈசானத்தில் பங்கினியையும், வித்யாதேகத்தில் வாக்மியையும், இவ்வாறு ஏழு சக்திகளையும் பூசிக்கவேண்டும் என்பதாம்.

## இரண்டாம் ஆவரண பூஜை

பீடத்தின் மேல்பட்டிகையில் கிழக்கு முதலிய எட்டுத் தளங்களிலும் ஓம் ஹாம் அநந்தாய நம:, ஓம் ஹாம் ஸூக்ஷ்மாய நம:, ஓம் ஹாம் சிவோத்தமாய நம:, ஓம் ஹாம் ஏகநேத்ராய நம:, ஓம் ஹாம் ஏகருத்ராய நம:, ஓம் ஹாம் த்ரிமூர்த்தயே நம:, ஓம் ஹாம் ஸ்ரீகண்டாய நம;, ஓம் ஹாம்

---

* ஈசானதிக்கில் ஓம் ஹீம் சிரஸேஸ்வாஹா நைருத திக்கில் ஓம் ஹூம் சிகாயைவஷட், வாயுதிக்கில் ஓம் ஹைம் கவசாய ஹூம் என்று கிரியாக்ரமதியோதிகையில் இருக்கின்றது.

† சங்கிநீ என்று சிவார்ச்சனுசந்திரிகையில் இருக்கின்றது.

‡ கங்கினி என்று சிவார்ச்சனுசந்திரிகையில் இருக்கின்றது.

சிகண்டினே நம: என்று இவ்வாறு அஷ்டவித்யேசுவரர்களைப் பூசித்து, அதே தளங்களில் அவர்களின் சக்திகளைப் பூசிக்க வேண்டும். பூசிக்கும் முறை வருமாறு:—

ஓம் ஹாம் பூம்யை நம:, ஓம் ஹாம் ஸ்வாஹாயை நம:, ஓம் ஹாம் ஸ்வதாயை நம:, ஓம் ஹாம் க்ஷாந்தியை நம:, ஓம் ஹாம் புஷ்ட்யை நம:, ஓம் ஹாம் ச்ரியை நம:, ஓம் ஹாம் கீர்த்யை நம:, ஓம் ஹாம் மேதாயை நம: என்று பூசிக்க வேண்டும் என்பதாம். இவ்வாறே பிறநூல்களிலுங் கூறப் பட்டிருக்கிறது. அது வருமாறு:—

பூமி தேவியையும், சுவாஹாதேவியையும், சுவதா தேவியையும், க்ஷாந்திதேவியையும், புஷ்டிதேவியையும், ஸ்ரீதேவியையும், கீர்த்திதேவியையும், மேதாதேவியையும், இவ்வாறு மங்களகரங்களான எட்டுச் சக்திகளையும் பூசிக்க வேண்டும் என்பதாம்.

## மூன்றும் ஆவரண பூஜை

பின்னர், கண்டத்தில் இந்திரதிக்கு ஈசானதிக்கு என்னும் இவற்றின் நடுவில் ஓம் ஹாம் நந்தினே நம: என்றும், இந்திர திக்கு அக்னிதிக்கு என்னும் இவற்றின் மத்தியில் ஓம் ஹாம் மஹாகாளாய நம: என்றும். தெற்குத் திக்கு அக்னி திக்கு என்னும் இவற்றின் மத்தியில் ஓம் ஹாம் ப்ருங்கிணே நம: என்றும், தெற்குத் திக்கு நிருருதி திக்கு என்னும் இவற்றின் மத்தியில் ஓம் ஹாம் கணபதயே நம: என்றும் நிருருதிதிக்கு வருணதிக்கு என்னும் இவற்றின் நடுவில் ஓம்ஹாம் விருஷபாய நம; என்றும், வாயுதிக்கு வருணதிக்கு என்னும் இவற்றின் நடுவில் ஓம் ஹாம் ஸ்கந்தாய நம: என்றும், வாயுதிக்கு ஸோமதிக்கு என்னும் இவற்றின் நடுவில் ஓம் ஹ்ரீம் தேவ்யை நம: என்றும், ஈசானதிக்கு சோமதிக்கு என்னும் இவற்றின் நடுவில் ஓம் ஹாம் சண்டேசுவராய நம: என்றும் இவ்வாறு இரண்டு இரண்டு திக்குகளின் சந்திகளில் பூசிக்கவேண்டும்.

பின்னர் ஓம் ஹாம் குண்டல்யை நம:, ஓம் ஹாம் பத்மின்யை நம: ஓம் ஹாம் ஹ்ராதின்யை நம:, ஓம் ஹாம் ப்ருங்கிண்யை நம:, ஓம் ஹாம் பத்ராயை நம:, ஓம் ஹாம் தேவயாந்யை நம:, ஓம் ஹாம் உமாயை நம:, ஓம் ஹாம் ரூபிண்யை நம: என்று இவ்வாறு எட்டுச் சக்திகளையும் அருச்சிக்கவேண்டும். இவ்வாறே பிறநூலிலும் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

குண்டலி, பத்மினி, ஹ்ராதினி, ப்ருங்கிணி, பத்ரா, தேவயாநீ, உமை, ரூபிணி, ஆகிய இந்த எட்டுச் சக்திகளும் பூசிக்கத் தகுந்தவை என்பதாம்.

## நான்காம் ஆவரண பூஜை

பின்னர், கீழ்ப்பட்டிகையில் கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் லம் இந்திராய நம:, அக்னிதிக்கில் ஓம் ஹாம் ரம் அக்னயே நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் ஹம் யமாய நம:, நிருருதி திக்கில் ஓம் ஹாம் ஷம் நிருருதயே நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் வம் வருணாய நம:, வாயுதிக்கில் ஓம் ஹாம் யம் வாயவே நம:, வடக்குத் திக்கில் ஓம் ஹாம் ஸம் சோமாய நம:, ஈசான திக்கில் ஓம் ஹாம் ஶம் ஈசானாய நம:, ஈசானதிக்கிற்கு வலது பக்கத்தில் ஓம் ஹாம் பிரம் ப்ரஹ்மணே நம:, நிருருதி திக்குக்கு இடதுபக்கத்தில் ஓம் ஹாம் வம் விஷ்ணவே நம: என்று அருச்சித்து அவர்களின் சக்திகளையும் கிழக்கு முதலிய திக்குக்களில் அருச்சிக்க வேண்டும். அருச்சிக்கும் முறை வருமாறு :

ஓம் ஹாம் சச்யை நம:, ஓம் ஹாம் ஸ்வாஹாயை நம:, ஓம் ஹாம் காலகண்ட்யை நம:, ஓம் ஹாம் தாஹின்யை நம:, ஓம் ஹாம் போகின்யை நம:, ஓம் ஹாம் கோராயை நம:, ஓம் ஹாம் கம்பீரிண்யை நம:, ஓம் ஹாம் ஹர்ஷிண்யை நம:, ஓம் ஹாம் ஸாவித்ரியை நம:, ஓம் ஹாம் ச்ரியை நம: என்றவாறும்.

இவ்வாறே பிறநூலிலும் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—சசி, ஸ்வாஹா, காலகண்டீ, தாஹிநீ, போகினீ கோரா, கம்பீரிணீ, ஹர்ஷிணீ, ஸாவித்ரீ, ச்ரீ ஆகிய இவர்கள் இந்திராதி தேவர்களின் சக்திகளாகக் கூறப்பட்டிருக்கின்றனர் என்பதாம்.

## ஐந்தாம் ஆவரண பூஜை

இவ்வாறு நான்காமாவரணத்தை பூஜித்த பின்னர் ஐந்தாமாவரண பூஜை செய்யுமுறை வருமாறு :—

ஆதாரசிலையில் கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் வஜ்ராயநம:, அக்னிதிக்கில் ஓம் ஹாம் சக்தயே நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் தண்டாய நம:, நிருருதிதிக்கில் ஓம் ஹாம் கட்காய நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் பாசாய நம:, வாயுதிக்கில்

ஓம் ஹாம் அங்குசாய நம:, வடக்குத்திக்கில் ஓம் ஹாம் கதாயை நம:, ஈசானதிக்கில் ஓம் ஹாம் த்ரிசூலாய நம:, ஈசானத்திற்கு வலது பக்கத்தில் ஓம் ஹாம் பத்மாய நம:, நிருருதிக்கு இடது பக்கத்தில் ஓம் ஹாம் சக்ராய நம: என்று பத்து ஆயுதங்களையும் பூசிக்கவேண்டும்.

* பின்னர் ஓம் ஹாம் விலாஸின்யை நம:, ஓம் ஹாம் ரூபிண்யை நம:, ஓம் ஹாம் தாரிண்யை நம:, ஓம் ஹாம் விமுக்யை நம:, ஓம் ஹாம் நிர்மல்யை நம:, ஓம் ஹாம் துர்மல்யை நம:, ஓம் ஹாம் மதிக்ராஹ்யை நம:, ஓம்ஹாம் சுமாலின்யை நம:, ஓம் ஹாம் சுதிருச்யை நம:, ஓம் ஹாம் ஹம்ஸமால்யை நம: என்று இவ்வாறு பத்து ஆயுதங்களின் சக்திகளையும் முறையே கிழக்கு முதலிய திக்குக்களில் பூசிக்க வேண்டும்.

இவ்வாறே விலாஸீ, ரூபிணீ, தாரணீ, விமுகி, நிர்மலீ, துர்மலீ, மதிக்ராஹீ, ஸுமாலினீ, ஸுதிருசி, ஹம்ஸமாலீ என்னும் இவை ஆயுதங்களின் சக்திகளாகும் எனப்பிற நூலிலும் கூறப்பட்டிருக்கிறது.

இவ்வாறே ஆவரணபூஜை காரணாகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு :—

பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரங்களால் முதல் ஆவரணமும், வித்யேசுவரர்களால் இரண்டாமாவரணமும், கணேசுவரர்களால் மூன்றுமாவரணமும், திக்பாலர்களால் நான்காம் ஆவரணமும், தசாயுதங்களால் ஐந்தாமாவரணமும் ஆக இவ்வாறு ஐந்தாவரணங்களும் ஈசுவரருக்குச் செய்யப்படல் வேண்டும் என்பதாம்.

## தத்துவார்ச்சனை

பிறகு பிரமபாகத்தில் கீழ்ப்பட்டிகைகளில் கிழக்கு முதற்கொண்டு ஈசானம் முடிய தத்துவங்களை அருச்சிக்கவேண்டும். அருச்சிக்குமுறை வருமாறு :—

ஓம் ஹாம் பிரகிருதிதத்வாய நம:, ஓம் ஹாம் குணதத்வாய நம:, ஓம் ஹாம் புத்திதத்வாய நம:, ஓம் ஹாம் அஹங்கார தத்வாய நம:, ஓம் ஹாம் சித்த தத்வாய நம:'

---

* ஆயுதசக்திகளின் பெயர்கள் சிவார்ச்சனுசந்திரிகையில் வேறு விதமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ஓம் ஹ்ராம் ச்ரோத்ர தத்வாய நம:, ஓம் ஹ்ராம் த்வக்தத்வாய நம:, ஓம் ஹ்ராம் சக்ஷுஸ் தத்வாய நம:, ஓம் ஹ்ராம் ஜிஹ்வாதத்வாய நம:, ஓம் ஹ்ராம் க்ராண தத்வாய நம:, ஓம் ஹ்ராம் வாக்தத்வாய நம:, ஓம் ஹ்ராம் பாததத்வாய நம:, ஓம் ஹ்ராம் பாணிதத்வாய நம:, ஓம் ஹ்ராம் பாயுதத்வாய நம:, ஓம் ஹ்ராம் உபஸ்ததத்வாய நம:, ஓம் ஹ்ராம் சப்ததத்வாய நம:, ஓம் ஹ்ராம் ஸ்பர்சதத்வாய நம:, ஓம் ஹ்ராம் ரூபதத்வாய நம:, ஓம் ஹ்ராம் ரஸதத்வாய நம:, ஓம் ஹ்ராம் கந்ததத்வாய நம:, ஓம் ஹ்ராம் ஆகாசதத்வாய நம:, ஓம் ஹ்ராம் வாயுதத்வாய நம:, ஓம் ஹ்ராம் அக்னிதத்வாய நம:, ஓம் ஹ்ராம் ஜலதத்வாய நம:, ஓம் ஹ்ராம் ப்ருதிவீதத்வாய நம: என்று அருச்சிக்க வேண்டும்.

அதன்பின் ஓம் ஹ்ராம் ஆத்மதத்வாய நம: ஆத்மதத்வாதிபதயே ஸ்ருஷ்டிரூபாய ஸரஸ்வதி ஸமேதாய ஓம் ஹ்ராம் ப்ரஹ்மணே நம: என்று உச்சரித்துக்கொண்டு பிர்மஜஞானம் என்னும் மந்திரத்தை உச்சரித்து பிரமனைத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:

நான்கு முகத்தை உடையவராயும், நான்கு கைகளை உடையவராயும், ஊர்த்வஜடையுடையவராயும் *தண்டம் கமண்டலம் இவற்றைக் கையில் உடையவராயும், வரம் அபயம் இவற்றைக் கையில் உடையவராயும், மங்களகரராயும் இருக்கும் பிரமதேவரைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு பிரமபாகத்தில் தியானித்து, † பிறகு ஹம்ஸாரூடாய வித்மஹே கூர்ச்சஹஸ்தாயதீமஹிதந்நோ ப்ரஹ்மாப்ரசோதயாத் என்னும் ப்ரஹ்மகாயத்ரியை அபிமந்திரணம் செய்யவேண்டும்.

பின்னர், கண்டம் முதல் ஊர்த்வபட்டிகையின் கீழ்வரை விஷ்ணுபாகத்தில் முன்போல் அருச்சிக்கவேண்டும். அருச்சிக்கு முறை வருமாறு:—ஓம் ஹ்ராம் மாயாதத்வாய நம:, ஓம் ஹ்ராம் காலதத்வாய நம:, ஓம் ஹ்ராம் நியதிதத்வாய நம:, ஓம் ஹ்ராம் கலா தத்வாய நம:, ஓம் ஹ்ராம் வித்யா தத்வாய நம:, ஓம் ஹ்ராம் ராக தத்வாய நம:, ஓம் ஹ்ராம் புருஷதத்வாய நம: என்று அருச்சித்து ஓம் ஹிம் வித்யா தத்வாய நம:

* ஸ்ருவம்.

† சதுர்முகாய வித்மஹே ஹிரண்யகர்பாய தீமஹி என்பது சிலர் கொள்கை.

வித்யாதத்வாதிபதயே ஸ்திதிரூபாய லக்ஷ்மீஸமேதாய ஓம் ஹிம் விஷ்ணவே நம: என்று பூசித்து "இதம் விஷ்ணுர்வி சக்ரமே" என்னும் மந்திரத்தை அபிமந்திரணஞ் செய்து தியானஞ்செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

நீல நிறமுடையவரும், தாமரைபோல் முகமுடையவரும், பொன்மை வஸ்திரமுடையவரும், அபயஹஸ்தமும் * ஊருஹஸ்தமும் உடையவரும், சக்கிராயுதத்தையும் சங்கத்தையும் கையிலுடையவரும், கிரீடத்தைச்சிரஸிலுடையவரும் சாந்தருமாயுள்ள வாஸுதேவரைத் தியானிக்கிறேனென்பதாம். இவ்வாறு தியானித்து நாராயணாய வித்மஹே வாசுதேவாய தீமஹி தந்தோ விஷ்ணு: ப்ரசோதயாத் என்ற விஷ்ணுகாயத்ரியை அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.

பிறகு, ஊர்த்வபட்டிகையில் ருத்ரபாகத்தில் கிழக்கு முதற்கொண்டு மீண்டும் கிழக்குவரை ஓம் ஹாம் சிவதத்வாய நம: ஓம் ஹாம் சக்திதத்வாய நம:, ஓம் ஹாம் சாதாக்யதத்வாய நம:, ஓம் ஹாம் ஈசுவரதத்வாய நம:, ஓம் ஹாம் சுத்த வித்யாதத்வாய நம: என்று அருச்சித்து, ஓம் ஹாம் ஹூம் சிவதத்வாய நம; சிவதத்வாதிபதயே ஸம்ஹாரரூபாய ரௌத்ரீஸமேதாய ஓம் ஹாம் ருத்ரேசுவராய நம: என்று பூசித்து, யோ ருத்ரோ அக்நௌ என்னும் மந்திரத்தை அபிமந்திரணஞ்செய்து தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

ஒன்பது கண்களும் மூன்று முகமும் உடையவராயும், ஸர்ப்பத்தை யக்ஞோபவீதமாக அணிந்தவராயும், ஆறு கைகளையும் பாதபத்மங்களையும் கருமையான கழுத்தையும் உடையவராயும், அக்னிஜ்வாலைபோன்ற கேசங்களையுடையவராயும், அபயம் வரதம் சூலம் அக்னி உருத்திராக்ஷமாலை மான் இவற்றைக் கைகளில் தரித்திருப்பவராயும், வெண்மைவர்ணமுடையவராயும் இருக்கும் உருத்திரதேவரைத் தியானிக்கின்றேன் என்பதாம். இவ்வாறு தியானஞ்செய்து தத்புருஷாய வித்மஹே மகாதேவாயதீமஹி. தந்நோருத்ர: ப்ரசோதயாத் என்னும் காயத்ரியை அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.

பின்னர் அதற்கு மேலுள்ள மகேசுவரபாகத்தில் புரியஷ்டகதேகத்தை அருச்சிக்கவேண்டும். அருச்சிக்குமுறை வரு

---

* ஊரு—துடை.

மாறு:— ஓம் ஹாம் அகங்காரதத்வாயநம:, ஓம் ஹாம் மனஸ் தத்வாய நம:, ஓம் ஹாம் புத்திதத்வாய நம:, ஓம் ஹாம் கந்த தத்வாய நம:. ஓம் ஹாம் ரஸதத்வாய நம;, ஓம்ஹாம் ரூபதத் வாய நம:, ஓம் ஹாம் ஸ்பர்சதத்வாய நம:, ஓம் ஹாம் சப்ததத்வாய நம: என்று அருச்சித்து, திரோபாவரூபராயும் மகேசுவரியுடன் கூடியவராயும் இருக்கும் ஓம் ஹாம் மகேசுவ ராய நம: என்று அருச்சித்து, யோவேதாதௌ என்னும் மந்தி ரத்தை அபிமந்திரணஞ் செய்து தியானஞ்செய்ய வேண்டும். தியானம் வருமாறு :—

நான்கு முகங்களையுடையவரும், எட்டுக்கைகளை உடைய வரும் பன்னிருகண்களை உடையவரும், எலும்பு, டிண்டிமம் என்னும் வாத்யம், பாசம், அங்குசம், மணி, தீபம், வரம், அபயம் என்னும் இவற்றை உடையவரும், பூணூலைத் தரித் திருப்பவரும், செம்மை வர்ணமுடையவரும், பாதங்களில் பாதுகைகளை உடையவரும், ஜடாமகுடத்தால் அலங்கரிக்கப் பட்டவருமான மகேசுவரரைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து ஓம் தந்மஹேசாய என்னும் காயத் ரியை அபிமந்திரணஞ் செய்யவேண்டும். இவ்வாறே அநலா க்மத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, புரியஷ்டகதேகத் தையும், எல்லாச் சித்திகளையும் கொடுப்பவராயும் மங்களகர ராயுமுள்ள மகேசுவரரையும், மந்திரங்களை உச்சரித்துப் பூசிக்கவேண்டும் என்பதாம்.

பிறகு சதாசிவபாகத்தில் ஓம் ஹாம் ஸ்தூலதத்வாய நம: ஓம் ஹாம் ஸூக்ஷ்மதத்வாய நம:, ஓம் ஹாம் காரணதத்வாய நம:, என்று அருச்சித்து, அனுக்ரகரூபரும் மனோன்மணியுடன் கூடியவருமான ஓம்ஹாம் ஸதாசிவாயநம: என்று உச்சரித் துக்கொண்டு ஈசானஸ்ஸர்வவித்யாநாம் என்னும் மந்தி ரத்தை அபிமந்திரணஞ் செய்து தியானஞ்செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

சரத்காலத்துச் சந்திரனுக்குச் சமானமான வடிவத்தை யுடையவராயும், ஐந்து முகங்கள் பத்துக் கைகள் ஒரு இரு தயம் ஒரு கழுத்து இரண்டு கால்கள் ஆகிய இவற்றை உடை யவராயும், சித்திரவஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்டவரா யும், எல்லா ஆபரணங்களையுமணிந்தவராயும், ஜடாமகுடத் துடன் கூடியவராயும், வலது கையில் டங்கம் சூலம் கத்தி வஜ்ரம் அபயம் என்னுமிவற்றையும், இடதுகையில் பாசம்

வரதம் கண்டை அக்னி அங்குசம் என்னுமிவற்றையும் உடையவராயும், சோதி சொரூபராயும் இருக்கும் ஸதாசிவரைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து ''நிரஞ்சனாயவித்மஹே நிராபாஸாயதீமஹி. தந்நோ தநுஸூக்ஷ்ம: ப்ரசோதயாத் என்னும் காயத்ரியை அபிமந்திரணஞ் செய்ய வேண்டும்.* விஜயாகமத்தில்,

போகாங்க பூஜை செய்யும்பொழுது தண்டபங்கியாலும், லயாங்கபூஜை செய்யும்பொழுது முண்டபங்கியாலும் பூசிக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது.

## நைவேத்தியஞ் சமர்ப்பித்தல்

பின்னர், நைவேத்தியம் சமர்ப்பித்தற்பொருட்டு விமலாஸனத்தை அருச்சித்து த்ரிபாதி (முக்காலி)யின் மீது வியஞ்சனங்களுடன் ஹவிஸ்வைத்திருக்கும் பாத்திரத்தை வைத்து அஸ்திர மந்திரத்தை உச்சரித்து மணி அடிக்கவேண்டும். காரணாகமத்தில் அசுரர்களும் ராக்ஷஸர்களும் பிசாசுகளும் பிர்மராக்ஷஸங்களும் மணியின் சப்தத்தைக் கேட்டவுடன் வெகுதூரத்தில் செல்லுகின்றனர் என்று கூறப்பட்டிருக்கின்றது.

முதலாவது, வாயிலில் உள்ள விக்னேசுவரருக்கு ஹவிஸ் தாம்பூலம் இவற்றை நிவேதனஞ் செய்து, பின்னர் ஈசுவரருடைய சன்னிதியில் ஹவிஸ்வைத்திருக்கும் பாத்திரத்தை அஸ்திரமந்திரத்தால் அருச்சித்து ஐந்து சுத்திகளையும்செய்து, ஹவிசுக்கு நடுவே மூலமந்திரத்தை உச்சரித்து புஷ்பத்தை யிட்டு தேனுமுத்ரை முதலான முத்ரைகளைச் சமர்ப்பித்து, கவசமந்திரத்தை உச்சரித்து அமிருதீகரணஞ்செய்து, பூர்புவஸ்வரோம் என்று புரோக்ஷித்து, பரிஷேசனம் செய்து, ஆபோசனங்கொடுத்து, ப்ராணாயஸ்வாஹா என்றது முதலாக அந்நசூக்தஞ் சபித்து, தன்னுடைய கையினால் கௌரியின் வலது ஹஸ்தத்தால் அந்நங்கொடுக்கிறதாகப் பாவித்து, கௌரியின் கையிலுள்ள அந்நம் சிவனது கையில் சேர்க்கப் பட்டதாகப் பாவித்து, அந்நசூக்தத்தின் இறுதியில் உத்தராபோசனங் கொடுத்து, ஹவிஸ்பாத்திரத்தை வேறிடத்தில் வைக்கவேண்டும், பின்னர் சுவாமியினுடைய கை முகம் கால்களின் சுத்திக்காக சுத்தோதகத்தால் மூன்றுமுறை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷிக்கவேண்டும்.

---

* இந்த தத்துவார்ச்சனையைப் பஞ்சாவரணபூஜைக்கு முன்னராவது அல்லது பின்னராவது செய்யலாமென்பது சிலர் கருத்து.

நைவேத்யவிஷயமான காமிகாகமத்தின் வாக்கியம் வருமாறு :—சுத்தான்னத்தை ஊர்த்வமுகத்திலும், சர்க்கரை அன்னத்தைக் கிழக்குமுகத்திலும், எள்ளன்னத்தைத் தெற்கு முகத்திலும், பயறன்னத்தை வடக்கு முகத்திலும், பாயஸ அன்னத்தை மேற்கு முகத்திலும் இவ்வாறு ஐந்து முகங்களிலும் நிவேதனஞ்செய்ய வேண்டும். * யானை உண்ட விளாங் கனியின் சாரத்தைப்போல் லிங்கத்தின் முகங்களில் நிவேதனஞ்செய்த அன்னத்தைப் பாவிக்க வேண்டும் என்பதாம்.

பின்னர், ஆசமனம் அருக்யம் பாத்யம் என்னும் இவற்றை முறையே மூன்று ஒன்று ஐந்து சங்கியையாக முறையே கைகள் ஊர்த்வமுகம் இரண்டு பாதங்கள் என்னும் இவற்றில் சமர்ப்பித்து, வாயின் சுத்திக்காக முகவாசத்தைச் சமர்ப்பித்து, ஏலம் கிராம்பு பச்சைக்கருப்பூரம் என்னும் இவற்றாலாகிய வாசனை மாத்திரையுடன் தாம்பூலத்தையும் நிவேதனஞ் செய்து, உபசாரத்திற்குரிய அனந்தாசனம் பூசித்து, தூப தீபம் முதலியவற்றை அவ்வவற்றிற்குரிய காலஅளவுடன் ஐந்துமுகங்களிலும் அங்கங்களிலும் சமர்ப்பித்துச் சுற்றி, கீழே வைத்து, கையைச் சுத்திசெய்துகொண்டு, ஆராத்ரிகம் நீராஜனம் பஸ்மம் கண்ணாடி குடை சாமரம் விசிறி பனைஓலை விசிறி பாத்யம் அருக்யம் ஆசமனீயம் மந்திரபுஷ்பம் என்னுமிவற்றை அந்த அந்த உபசாரத்திற்குரிய காலஅளவுடன் சமர்ப்பித்து, பிறகு நான்கு வேதங்கள் சூத்ரங்கள் புராணஸ்தோத்ரம் க்ஞானவழியாயுள்ள கீதம் என்னுமிவற்றை ஓதும்படிசெய்து, நிருத்தமண்டபத்தில் தாளம் மத்தளம் வாத்யம் கீதம் நர்த்தனம் ஆகிய உபசாரங்களைச் செய்வித்து ஈசுவரருக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

## போகசக்திபூஜை

அக்ரமண்டபத்துள் வடக்குத்திக்கில் போகசக்திபிம்பத்தில் ஓம் ஹ்ரீம் போகசத்யாஸனாய நம:, ஓம் ஹ்ரீம் போகசத்திமூர்த்தயே நம:, ஓம் ஹ்ரீம் போகசக்த்யை நம: என்று ஆசனமூர்த்தி மூலமந்திரங்களால் போகசத்தியைப் பூசித்து, ஆவாகனமுத்ரை முதலிய ஐந்துமுத்ரைகளைக் காண்பித்து, மாதிருகாநியாசம் இருபத்தைந்து கலைகளின் நியாசம் இவற்றைச் செய்து, சத்திமூலமந்திரத்தால் அபிஷேகத்திற்காக

* யானை என்பது ஒரு நோய்

அருக்யஜலத்தால் புரோக்ஷித்து, பழைய வஸ்திரத்தைக் களைந்து விட்டுவேறு வஸ்திரத்தால் துடைத்து, வஸ்திரம் சந்தனம் மாலைகளாலும் சொர்ண ஆபரணங்களாலும் அலங் கரித்து' பத்மாசனத்தைப்பூசித்து, தேவியினுடைய இருதயத் தில் பத்துமுறை *காயத்ரியை அபிமந்திரித்துத் தியானிக்க வேண்டும்.

தியானம் வருமாறு:—

நீல நிறமுடையவளாயும், சித்திரவஸ்திரம் அணிந்தவ ளாயும், தாமரைபோன்ற முகமுடையவளாயும், அங்கங் களில் சொர்ண ஆபரணமணிந்தவளாயும், கேசபந்தமுடைய வளாயும், வயிற்றில் மூன்று மடிப்பை உடையவளாயும், ஸ்தனங்களின் பாரத்தால் வளைந்த திருமேனியை உடையவ ளாயும், நீண்ட கால்களையுடையவளாயும், நல்ல முகத்தை உடையவளாயும், நீலோத்பலத்தை வலது கையில் உடையவ ளாயும், இடதுகையில் தாமரையை உடையவளாயும், எப் பொழுதும் பிரஸன்னையாயும், பிரமன் விஷ்ணு இவர்களால் தோத்திரம் செய்யப்பட்டவளாயும், ஈசுவரியாயுமுள்ள போகசக்தியை வணங்குகிறேன் என்பதாம். இவ்வாறு தியா னம்செய்து சத்திமந்திரத்துடன் கூடிய ஈசானுதி பஞ்சப்ரஹ்ம மந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் முதலாவரணத்தில் பூஜை செய்யவேண்டும்.

இரண்டாவது ஆவரணத்தில், கிழக்குத் திக்கில் ஓம் ஹாம் வாமாயை நம:, அக்கினிதிக்கில் ஓம் ஹாம் ஜ்யேஷ் டாயை நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் ரௌத்ர்யை நம:, நிருருதிதிக்கில் ஓம் ஹாம் காள்யை நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் கலவிகரண்யை நம:, வாயுதிக்கில் ஓம் ஹாம் பல விகரண்யை நம:, வடக்குத் திக்கில் ஓம் ஹாம் பலப்ர மதின்யை நம:, ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஸர்வபூததமன்யை நம: என்று இவ்வாறு கிழக்கு முதலிய எட்டுந்திக்குக்களிலும் அருச்சித்து நடுவில் மகேசுவரியைப் பூசிக்கவேண்டும்.

பிறகு ஆசனத்தைச் சுற்றிக் கிழக்குத் திக்கில் ஓம் ஹாம் சச்யை நம:, அக்கினிதிக்கில் ஓம் ஹாம் ஸ்வாஹாயை நம:, தெற்குத்திக்கில் ஓம்ஹாம் காலகண்ட்யை நம:, நிருருதிதிக்

---

* காத்யாயந்யை ச வித்மஹே கந்யாகுமார்யை ச தீமஹி. தந்நோ கௌரீ ப்ரசோதயாத் என்பது காயத்ரீ.

கில் ஓம் ஹாம் தாஹ்ரின்யை நம;, மேற்குத்திக்கில் ஓம்ஹாம் போகின்யை நம:, வாயுதிக்கில் ஓம் ஹாம் கோராயை நம:, வடக்குத்திக்கில் ஓம் ஹாம் கம்பீரிண்யை நம:, ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஹர்ஷிண்யை நம:, என்று இவ்வாறு இந்திரன் முதலியவர்களின் சக்திகளைப் பூஜித்து, ஈசான திக்குக்கு வலது பக்கத்தில் சரஸ்வதியையும், நிருருதிதிக்குக்கு இடது பக்கத்தில் மகாலக்ஷ்மியையும் அருச்சித்து நைவேத்தியம் தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பிக்க வேண்டும்.

போகசக்தி பூஜை முடிந்தது

---

## பரிவார பூஜை

பரிவார பூஜை விஷயமாக சுப்ரபேதாகமத்தின் கூற்று வருமாறு :—

கர்ப்பக்கிருகத்தில் சிவனையும், அக்ரமண்டபத்தில் கௌரியையும், ஈசுவரருக்கு முன் விருஷபத்தையும், விருஷபத்திற்கு இடது பக்கத்தில் சூரியனையும், அக்னி திக்கில் மகேசுவரரையும், தெற்குப் பாகத்தில் சக்திகளையும், தேவகோஷ்டத்திலுள்ள தெற்குப் பாகத்தில் தக்ஷிணாமூர்த்தியையும், நிருருதிதிக்கில் கணேசரையும், மேற்குத் திக்கில் விஷ்ணுவையும், வாயுதிக்கில் சுப்ரமணியரையும், அதற்கு வடபாகத்தில் ஜ்யேஷ்டாதேவியையும் இலக்ஷ்மியையும், கோமுகியின் மேல் பாகத்தில் பிரமனையும், கோமுகிக்கு ஈசான பாகத்தில் சண்டர், துர்க்கை, புஸ்தகத்தைக் கையில் உடைய சரஸ்வதி ஆகிய இவர்களையும், வடபக்கத்தில் நடராஜாவையும், இந்துசேகரமூர்த்தியையும், ஈசானதிக்கில் க்ஷேத்திரபாலரையும் நவக்கிரகங்களையும் சுரதேவரையும், இரண்டாவது ஆவரணத்தில் ஏகாக்ஷரீ, மனோன்மநீ, மனோன்மநியின் இடது பக்கத்தில் லகுளீசர் ஆகிய இவர்களையும், தெற்குப் பாகத்தில் இருஷிகள் பக்தர்களையும் பூசிக்க வேண்டுமென்பதாம். இம் முறையாக மகேசுவரர் முதலாயினர்க்குச் சகளாங்க பூஜை செய்து நைவேத்தியம் தூபம் தீபம் ஓமம் பலி சமர்ப்பித்தல் முதலியன செய்யவேண்டும்.

## நித்யஹோமவிதி

பின்னர், ஈசானதிக்கில் யாகமண்டபத்திலேனும்* பசனாலயத்திலேனும், மூன்று மேகலைகளுடன் ஒரு முழத்தில் முறைப்படி† உயர்வு தாழ்வு உள்ளனவாக, சதுரச்ரமாகவேனும் வட்டமாகவேனும் குண்டத்தைச் செய்து, கிழக்கு முகமாகவேனும் வடக்கு முகமாகவேனும் அமர்ந்து, உயரே உள்ள மேகலையின் மீது நாபியைக் கற்பித்து, நாபியில் அருக்யபாத்ரத்தை வைத்துக்கொண்டு பிராணாயாமம் ஸகளீகரணங்களைச் செய்து, பவித்ரத்தை அணிந்துகொண்டு, பிரணவத்தால் சாமான்யார்க்யத்தை செய்து, குண்டத்தை அருக்யஜலத்தால் புரோக்ஷித்து, அந்த இடத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக் கோமயத்தால் மெழுகிச் சுத்தம் செய்து, வலமாக வைக்கப்பட்ட திரவியங்களுக்கு அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஐந்து சுத்திகளையுஞ்செய்து, ஐந்து வர்ணப் பொடிகளாலும் அலங்கரித்து, குண்டத்திற்கு முறைப்படி பதினெண் ஸம்ஸ்க்காரங்களையும் செய்து, கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு நடு என்னும் இவற்றில் முறையே நிவிருத்தி பிரதிட்டைவித்தை சாந்தி சாந்திய தீதை ஆகிய ஐந்து கலைகளையும் அருச்சித்து அஸ்திர மந்திரத்தை உச்சரித்து மூன்று நூல் கொண்டு குண்டத்தைச் சுற்றி, பிரமன் விஷ்ணு ருத்ரர் அனந்தர் முதலியவர்களைப் பூஜைசெய்து, கையில் தர்ப்பையைக் கொண்டு உல்லேகன மந்திரத்தால் உல்லேகனஞ்செய்து, (கீறி) அதன் நடுவில் சதுஷ்பதத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துப் பூசித்து, நடுப்பக்கம் வடபக்கம் தென்பக்கம் என்னும் இவ்விடங்களில் பிரமன் முதலிய தேவதைகளைப் பூசித்து, மற்ற ரேகையின்மேல் ‡ரௌத்ரீ லக்ஷ்மீ ஸரஸ்வதீ என்னுமிவர்களைப் பூசித்து, சதுஷ்பத நியாசம் செய்தற்பொருட்டு அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, தர்ப்பைகளைக் கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் பரப்பி, கவசமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, தர்ப்பைகளால் அக்ஷபாடஞ் செய்து, நடுவில் உள்ள இரண்டு கூர்ச்சங்களிலும் வாகீசுவரி

---

* பசனம்—சமைத்தல்.

† பூமிக்குமேல் மேகலை ஒன்பது அங்குல உயரமும், பூமிக்குக்கீழ் ஒன்பது அங்குல ஆழமுமாகக் குண்டம் அமைக்கவேண்டும்.

‡ ரௌத்ரீ லக்ஷ்மீ ஸரஸ்வதீ இவர்களுக்கு இங்கு பூஜை கிடையாது என்பது சிலர் கொள்கை.

வாகீசுவரர்களைத் தியானித்து கந்தம்முதலியவற்ருல் பூசித்து, பசனுலயத்தில் உண்டான அக்கினியை மண்பாத்திரத்திலேனும் தாம்பிர பாத்திரத்திலேனும் எடுத்துக்கொண்டு வந்து குண்டத்தின் வலது பக்கத்தில் வைத்துக்கொண்டு, மூலமந்திரத்தால் அக்கினியை அருச்சித்து, மூலாதாரத்தில் உண்டான அக்கினியை சுழுமுன நாடியின் வழியாக அக்கினி பீஜாக்கரங்களுடன் கும்பகஞ்செய்து எழுப்பி ரேசகத்தினுல் வைந்தவாக்கினியுடன் ஒன்ருகச் செய்து, அந்த அக்கினியைப் பூதாக்கினியுடன் சமரசமாகப் பாவிக்கவேண்டும்.

பின்னர் சிவாக்கினியாகப் பாவித்து, மூலமந்திரத்தால் பூசித்து, அக்கினிபாத்திரத்தை அக்கினி திக்கிலேனும் ஈசான திக்கிலேனும் வைத்துவிட்டு, ராக்ஷஸபாகமாக அக்கினித் துண்டை நிருருதி திக்கில் எறிந்து, அக்கினியின் நடுவில் தத்வத்ரய மந்திரங்களாலும் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலும் பூசித்து, மூலமந்திரத்தால் ஆவாஹனஞ்செய்து சைதன்ய ரூபமாகப் பாவித்து, அக்கினி பாத்திரத்தை நாபிக்குமேல் வைத்து, குண்டமத்யத்தில் வாகீசுவரி வாகீசுவரர்களை யௌவனப் பருவமுள்ளவர்களாகப் பாவித்துத் தியானஞ் செய்யவேண்டும். தியானம் வருமாறு:—

* கருமையான திருமேனியை உடையவளாயும், நல்ல யௌவனப் பருவமுடையவளாயும், சந்திரனையும் மாலையையும் கூந்தலில் பூஷணமாக அணிந்தவளாயும், பூர்ணசந்திரனுக்குச் சமானமான முகத்தை உடையவளாயும், புஷ்பவதியாயுமிருக்கும் அக்கினிமாதாவைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து ஓம் ஹ்ரீம் வாகீசுவர்யை நம: என்று பூசித்து, அவளது சமீபத்தில் வாகீசுவரரையும் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

---

* கிரியாக்ரமதியோதிசையில் நித்தியாக்கினி கார்யப்பிரகரணத்தில் உயிர்களுக்கு மெய்ஞானத்தைத் தோற்றுவிக்குந் துணையாயும், உலகங்களுக்குத் தாயாராயும், கருமைநிறமுடையவளாயும், புஷ்பவதியாயும், நல்ல வஸ்திரம் மாலை இவற்றை அலங்காரமாகவுடையவளாயும், தெளிவான முகத்தை உடையவளாயும், தாமரை இதழ்களை ஒத்த காந்தியுள்ள மூன்று கண்களையுடையவளாயும் உள்ள வாகீசுவரியை விதிப்படி தியானித்து ஆவாஹனஞ் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

ஐந்து முகங்களும், முகந்தோறும் மூன்று கண்களும், * வெண்மை வர்ணமும், நான்கு கைகளும், அவற்றில் வரம் அபயம் அக்ஷமாலை தாமரை என்னும் இவற்றைத் தரித்திருத்தலும் ஆகிய இவற்றை உடைய வாகீசுவரரைத் தியானிக்கிறேன் என்பதாம்

இவ்வாறு தியானஞ்செய்து ஓம் ஹாம் வாகீசுவராய நம: என்று அருச்சித்து, பஞ்சப்ரஹ்மஷடங்கமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அக்கினியை எடுத்துக் குண்டத்தைச் சுற்றி, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு இரண்டு முழங்கால்களையும் பூமியில் வைத்து, கைகளைத் தூக்கி அக்கினியை மூக்கு நுனிவரை தூக்கிக் கொண்டு யோனிவழியாகக் குண்டத்துள் சேர்க்கவேண்டும்.

பின்னர் அக்னிபாத்திரத்தைக்குண்டத்தின் நாபியில் தாபித்து மூலமந்திரத்தால் புரோக்ஷித்து, புஷ்பம் அக்ஷதை என்னுமிவற்றைப் போட்டு வேறிடத்தில் வைத்து, சௌசம் ஆசமனம் இவற்றாலுண்டாகும் சுத்திக்காக இருதய மந்திரத்தை உச்சரித்து ஜலபிந்துவை விட்டு, கவசமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு நல்ல சமித்துக்களைச் சமர்ப்பித்து, அஸ்திரமந்திரத்தால் சுவாலை செய்து, மூலமந்திரத்தால் † கர்ப்பாக்னியை நமோந்தமாகப் பூசித்து, கர்ப்பத்தை ரக்ஷித்தற்பொருட்டு அஸ்திரமந்திரத்தால் அக்கினியை அபிமந்திரணஞ் செய்து, கவசமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தேவியினுடைய கையில் தருப்பையாலாகிய கங்கணத்தைச் சமர்ப்பித்து, ஸத்யோ ஜாதமந்திரத்தால் கர்ப்பாதான நிமித்தமாக அருச்சித்து, இருதய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு எள்ளால் மூன்று ஆகுதிகளைச் செய்யவேண்டும்.

மூன்றும் மாதத்தில் பும்ஸவநத்திற்காக வாமதேவ மந்திரத்தால் அருச்சித்து, சிரோமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு எள்ளால் மூன்று ஆகுதிகளைச்செய்து, ஜீவனுன தீர்த்தத் துளியைவிடவேண்டும்.

ஆறுவது மாதத்தில் ஸீமந்தம் செய்தற்பொருட்டு அகோர மந்திரத்தால் பூசித்து, சிகாமந்திரத்தால் என்னைக்

---

* கிரியாக்கிரம தியோதிகையில் செம்மை நிறமென்று இருக்கிறது. அக்ஷமாலை தாமரைப் புஷ்பமென்னுமிவற்றின் ஸ்தானத்தில் பாசம் சூலம் என்னுமிவை இருக்கின்றன.

† ஓம் ஹாம் கர்ப்பாக்னயே நம: என்பது மூலமந்திரம்.

கொண்டு மூன்று முறை ஆகுதிகளைச் செய்து, முகங்கள் அங்கங்கள் சித்தித்ததற்காக சிகாமந்திரத்தால் மூன்றுமுறை அபிமந்திரிக்க வேண்டும்.

பத்தாவது மாதத்தில் ஜநநமாகும் நிமித்தம் தத்புருஷ மந்திரத்தால் பூசித்து, கவச மந்திரத்தால் எள்ளைக்கொண்டு மூன்று ஆகுதிகளைச் செய்து, அக்கினி தேவதையாகிய குழந்தை பிறந்ததாகப் பாவிக்க வேண்டும்.

பின்னர் கர்ப்பமலங்கள் நீங்கும் பொருட்டுத் தருப்பை முதலியவற்றல் அக்கினியைச் சொலிப்பித்து, தேவியின் கையில் உள்ள முன் கங்கணத்தை மூலமந்திரத்தால் நீக்கி, குழந்தையின் ரக்ஷணத்திற்காகச் சொர்ண கங்கணத்தைத் தேவியின் இடது கையில் கட்டினதாகப் பாவித்து, இருதய மந்திரத்தால் பூசித்து, சூதகம் நிவிருத்தி ஆகும் நிமித்தம் குண்டத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அருக்யஜலத்தால் புரோக்ஷித்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்துத் தருப்பையால் தாடனஞ் செய்து, கவச மந்திரத்தால் அப்யுக்ஷணஞ் செய்க.

பின்னர் அக்னியாகிய குழந்தையை ரக்ஷிக்கும்பொருட்டுக் கிழக்கு முதலிய திக்குகளில் ஏழு தருப்பைகளால் கீழ்மேகலை யில் * பரிஸ்தரணஞ் செய்து, நடுமேகலையில் அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு நான்கு திக்குகளிலும் விஷ்டர கூர்ச்சத்தையும், ஊர்த்வமேகலையில் பரிதிகளையும் ஸ்தாபித்து, அக்னியின் வாயினின்றும் உண்டாகும் நீரைச் சுத்தி செய்யும் நிமித்தமாக ஐந்து ஸமித்துக்களை அடியையும் முடியையும் நெய்யில் நனைத்து அக்கினி மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு ஸ்வாஹா என்று ஹோமஞ்செய்து, கிழக்கு முதலிய நான்கு திக்குகளிலும் பரிதிகளில் பிரமன் விஷ்ணு ருத்ரன் அநந்தர் இவர்களைப் பூசித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு இரண்டு ஆகாரஸமித்துக்களை ரக்ஷிப்பதன் பொருட்டு மேலுங்கீழுமாக நாட்டி, விஷ்டரங்களின் மேல் (விஷ்டரகூர்ச்சங்களின்மேல்) கிழக்குத் திக்கில் ஓம் ஹாம் இந்திராய நம:, அக்கினிதிக்கில் ஓம் ஹாம் அக்நயேநம:, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் யமாய நம:, நிருதிதிக்கில் ஓம் ஹாம் நிருருதயே நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் வருணாய நம:, வாயுதிக்கில் ஓம் ஹாம் வாயவே நம:, வடக்குத்திக்கில் ஓம்

* பரிஸ்தரணம்—பரப்புதல்.

ஹாம் ஸோமாய நம:, ஈசானத்தில் ஓம்ஹாம் ஈசானாய நம: என்று பூசைசெய்து, ஈசானத்திற்கு வலப்பக்கத்தில் ஓம்ஹாம் ப்ரஹ்மணே நம:, நிருருதிதிக்குக்கு இடதுபக்கத்தில் ஓம் ஹாம் விஷ்ணவே நம: என்று பூசித்து அருக்யஞ்சமர்ப்பித்து விக்நங்களைப்போக்கி அக்கினிக்குழந்தையை ரக்ஷியுங்களெனத் தெரிவித்து அக்கினியைப் பரிசேஷனஞ்செய்து பாலாக்னியைத் தியானிக்கவேண்டும்.

தியானம் வருமாறு:—செம்மையான திருமேனியை உடையவராயும், ஆறு கண்களையும் மூன்று முகங்களையும் ஏழு நாக்களையும் உடையவராயும், கைகளில் நெய் நிரம்பிய ஸ்ருவம், விசிறி, கண்டை, சக்தி, அக்ஷமாலை, கூர்மையான தோமரம் என்னும் இவற்றை உடையவராயும் இருக்கும் பாலாக்கினியைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து ஓம் ஹாம் பாலாக்னயே நம: என்று பாலாக்னியைப் பூசித்து, ஸ்ருக்ஸ்ருவங்களை மேலுங் கீழுமாகப் பிடித்து ஐந்து சுத்திகளைச்செய்து தருப்பைகளின் அடி நடு நுனிகளால் ஸ்ருக்ஸ்ருவங்களின் அடி நடு நுனிகளைப் பரிசித்து, தனித்தனி பிரமன் விஷ்ணு உருத்ரன் இவர்களை நியாசித்து, அக்கினியிற் காட்டி, தருப்பைகளை அக்னியிற் போட்டுவிட்டு, ஸ்ருக்ஸ்ருவங்களின் சிரசு முதற்கொண்டு பாதமீறுக அவ்வந்தஸ்தானங்களில் அவ்வந்தத்தேவதா மூல மந்திரங்களால் அபிமந்திரணஞ்செய்து, வலப்பக்கத்தில் தருப்பைகளுக்குமேல் தாபித்து, அவற்றில் சிவசக்திகளைப் பூசித்து, கவசமந்திரத்ஸத உச்சரித்துக் கொண்டு மூன்று நூலாற்சுற்றி, ஸ்ருக்ஸ்ருவங்களைத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—பார்வதிபரமேசுவரருடைய சரீரங்களாயும், உயரே தூக்கிய கைகளை உடையவையாயும், மூன்று கண்களை யுடையவையாயும், அடிகளில் பிர்மாவையும் நடுவில் விஷ்ணுவையும் கமலத்தில் சூரியன் சந்திரன் இவர்களையும் உடையவையாயும், நுனியில் நெய் ஒழுகும் வழியை உடையவையாயும், சமஸ்த மந்திரரூபமான அங்கத்தை உடையவையாயும், இருக்கும் ஸ்ருக்ஸ்ருவங்களைப் பஜிக்கின்கின்றேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து நெய்ப்பாத்திரத்தைத் தனக்கு இடதுபக்கத்தில் குண்டத்தின் உயரே உள்ள மேகலையின்மீது தாபித்து நெய்யை நிரப்பி, முன்போல் சுத்தியைச் செய்து,

நாபியின் சமீபத்தில் இருக்கும் சிறிய தணலில் நெய்ப்பாத்தி ரத்தை வைத்து, சுத்தி ஏற்படும் நிமித்தமாக இரண்டு தருப் பையின் நுனியைக் கொளுத்திச்சுற்றி அக்னியில் போடவேண் டும். அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு இரண்டு தருப்பைகளின் நுனியை நெய்யின் நடுவில்போட்டு, நெய்ப் பாத்திரத்தை நாபிக்குமேல் ஸ்தாபித்து, அக்கினியை குண் டத்திலுள்ள அக்னியுடன் சேர்க்கவேண்டும்

பின்னர் ஸ்தாபன ஹோமம் அதிச்ரயணஹோமம் உத்வா ஸனஹோமம் செய்தற்பொருட்டு, முறையே தன்னைப் பிர்ம விஷ்ணு ருத்ரர்களாகத் தியானித்து, அவ்வந்த மந்திரங்க ளால் தருப்பை நுனிகளால் முறையே ஆக்நேயம் ஈசானம் நாபியாகிய இவற்றில் நெய்ப்பாத்ரத்தை வைத்துக்கொண்டு ஹோமஞ்செய்யவேண்டும்.

ஒட்டை அளவான இரண்டு தருப்பைகளின் நுனியால் செய்யப்பட்ட நடுவில் முடிச்சை உடைய பவித்ரத்தை நெய் யின் நடுவில் போட்டு இரு கைகளிலுள்ள பெருவிரல் அணி விரல்களால் நுனியையும் அடியையும் பிடித்துக்கொண்டு, அக்கினிக்கு எதிராக அஸ்திரமந்திரத்தால் அந்தப்பாத்தி ரத்தினுள் மூன்றுமுறை †உத்ப்லவனஞ்செய்து, பின்னர் தனக்கு எதிராக இருதயமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அந்தப் பாத்திரத்தினுள் மூன்றுமுறை *ஸம்ப்லவனஞ் செய்து அந்தப் பவித்ர முடிச்சை அவிழ்த்து, அருக்யஜலத்தால் புரோ க்ஷித்து அக்கினியில் போடவேண்டும்.

பின்னர் பவித்ரிகரண நிமித்தமாக அக்கினி ஜ்வாலையுடன் கூடிய ஒரு தருப்பையை, நெய் ஹவிஸ் பாத்திரங்களுக்குக் காண்பித்துச் சுற்றி அக்கினியில் போடவேண்டும்.

மீண்டும் இரண்டு தருப்பைகளால் செய்யப்பட்ட நடுவில் முடிச்சை உடைய பவித்ரத்தை நெய்யின் மத்யத்தில் தாபித்து, இடைபிங்கலை சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளைக் கற்பித்து அக்கினியை மூலமந்திரத்தால் தனக்கு எதிராகப் பாவித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, மிருகி முத்ரையால் ஸ்ருவத்தை எடுத்து ஸ்ருவத்தினுல் நெய்யை

† உத்ப்லவனம்—உயரே தூக்கிவிடுதல்.
* ஸம்ப்லவனம்—அரைத்தல்.

வலப்பக்கத்திலிருந்து எடுத்து, அக்னயேஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, அக்கினியின் வலது கண்ணில் ஹோமஞ் செய்து, இடப்பக்கத்திலிருந்து நெய்யை எடுத்து, ஓம் ஹாம் ஸோமாயஸ்வாஹா என்று இடது கண்ணிலும், நடுவிலிருந்து எடுத்து ஓம் ஹாம் அக்கினீஷோமாப்யாம் ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு அக்கினியினுடைய நடுநேத்ரத்திலும் ஹோமஞ்செய்து, மூன்று பாகங்களினின்றும் சிறிது நெய்யை எடுத்து ஓம் ஹாம் அக்னயேஸ்விஷ்ட க்ருதேஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு அக்கினியினுடைய முகத்தில் ஹோமஞ்செய்து, எஞ்சிய நெய்யை அவ்வந்தப் பாகங்களில் ஸ்வாஹா என்று ஹோமஞ் செய்யவேண்டும்.

கிருஷ்ணபக்ஷத்தில் ஓம் ஹாம் ஸோமாயஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, அக்கினியின் இடது கண்ணில் இடப்பக்கத்திலிருந்தும் நெய்யை எடுத்து ஹோமஞ்செய்து, பின்னர் வலப்பக்கத்திலிருந்தும் நெய்யை எடுத்து ஓம் ஹாம் அக்னயேஸ்வாஹா என்று அக்கினியின் வலது கண்ணில் ஹோமஞ் செய்து, நடுவிலிருந்தும் நெய்யை எடுத்து ஓம் ஹாம் ஸோமாக்கினிப்யாம் ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு அக்கினியினுடைய நடுக்கண்ணில் ஹோமஞ்செய்து, மூன்று பக்கங்களினின்றும் நெய்யை எடுத்து ஓம் ஹாம் அக்னயேஸ்விஷ்ட க்ருதேஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு அக்கினியின் முகத்திலும் முன்போல் ஹோமஞ்செய்து, மீதியுள்ள நெய்யை மற்ற நெய்யுடன் சேர்க்கவேண்டும். இவ்வாறு சுக்லகிருஷ்ணபக்ஷங்களில் நெய் சோதனை செய்யவேண்டும்.

மீண்டும் நெய்யை ஸம்ஹிதையால் அபிமந்திரித்து, திக்பந்தனம் அவகுண்டனங்களைச்செய்து, தேனுமுத்ரையால் அமிருதீகரணஞ்செய்து மூலமந்திரத்தால் அபிமந்திரித்து, இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, நெய்யின் பிந்துவைத் தெளித்து, மற்றுமுள்ள நெய்யைச் சுத்தஞ் செய்யவேண்டும்.

பிறகு, ஓம் ஹாம் ஸத்யோஜாதாயஸ்வாஹா, ஓம் ஹிம் வாமதேவாயஸ்வாஹா, ஓம் ஹூம் அகோராயஸ்வாஹா, ஓம் ஹேம் தத்புருஷாயஸ்வாஹா, ஓம் ஹோம் ஈசானாயஸ்வாஹா என்னும் மந்திரங்களை உச்சரித்து, ஒவ்வொரு மந்திரம் தோறும் ஒவ்வொரு ஆகுதியைச்செய்து, அக்கினியின் முகத்தில் ஆகாராகுதியைச்செய்து, பிறகு ஓம் ஹம் ஹிம் ஸத்யோ

ஜாத வாமதேவாப்யாம் ஸ்வாஹா, ஓம் ஹிம் ஹூம் வாம தேவா கோராப்யாம் ஸ்வாஹா, ஓம் ஹூம் ஹைம் அகோர தத்புருஷாப்யாம்ஸ்வாஹா, ஓம் ஹைம் ஹௌம் தத்புருஷே சாஞப்யாம்ஸ்வாஹா என்ற இந்த ஆகுதிகளால் முகஸம் யோகஞ் செய்யவேண்டும்.

பின்னர் வக்த்ரைகிகரணம் செய்தற்பொருட்டு முகத்தில் ஸத்யோஜாதம் முதல் ஈசானமீறுன மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு அக்னிதிக்குமுதல் வாயுதிக்குவரை ஒரு ஆகுதியை யும், நிருதிதிக்குமுதல் ஈசானதிக்கு ஈறுக ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு பிரணவத்தால் ஒரு ஆகுதியையும் செய்ய வேண்டும்.

பிறகு நாமகரணஞ் செய்யும்பொருட்டு அக்கினியை ஈசான மந்திரத்தால் அருச்சித்து, அஸ்திர மந்திரத்தை உச்ச ரித்துக்கொண்டு, மூன்று ஆகுதிகள் செய்து, ''ஓம் ஹாம் சிவாக்கினிஸ்த் வம்ஹூதாசந:'' என்று நாமகரணஞ் செய்து, இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அக்கினிமாதிரு பிதிருப்யோ நம: என்று சொல்லிக்கொண்டு வாகீசுவரிவாகீசு வரர்களை நமோந்தமாகப் பூசித்து, புஷ்பங்களால் அருச் சித்து, உத்வாஸனஞ்செய்து, நாக்கின் உற்பத்தியைச் செய் தற்பொருட்டு அக்கினியின் நடுவில் அக்கினியின் நடுகிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள நாக்குக்களின் பொருட்டு ஆகுதி செய்தல்வேண்டும்.

ஆகுதி செய்யுமுறை வருமாறு:—

மேற்குத்திக்கில் ஓம் ஹ்ராம் *ஹிரண்யாயை ஸ்வாஹா,
நடுவில் ஓம் ஹ்ராம் கநகாயை ஸ்வாஹா,
வடக்குத்திக்கில் ஓம் ஹ்ராம் ரக்தாயை ஸ்வாஹா,
தெற்குத்திக்கில் ஓம் ஹ்ராம் கிருஷ்ணாயை ஸ்வாஹா,

---

* பூருவ காரணாகமத்தின் 166-வது பக்கத்தில் மேற்குத்திக்கில் ஹிரண்யை என்னும் நாவும், நடுவில் கநகை என்னும் நாவும், வடக் குத்திக்கில் ரக்தை என்னும் நாவும், தெற்குத்திக்கில் கிருஷ்ணை என் னும் நாவும், கிழக்குத்திக்கில் சுப்ரபை என்னும் நாவும், அக்கினி திக்கில் அதிரக்தை என்னும் நாவும், ஈசானதிக்கில் பகுருபை என்னும் நாவுமுள்ளது என்று கூறப்பட்டிருக்கிறது.

கிழக்குத்திக்கில் ஓம் ஹ்ராம் சுப்ரபாயை ஸ்வாஹா,
அக்கினிதிக்கில் ஓம் ஹ்ராம் அதிரக்தாயை ஸ்வாஹா,
ஈசானதிக்கில் ஓம் ஹ்ராம் பகுரூபாயை ஸ்வாஹா.

என்று *ஜிஹ்வா கற்பனஞ்செய்து, பின்னர் ஜிஹ்வா † சந்தானமும் ‡ஜிஹ்வைகிகரணமுஞ் செய்யவேண்டும்.

செய்யுமுறை வருமாறு :—

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹிரண்யாகநகாப்யாம் ஸ்வாஹா,
ஓம் ஹ்ரீம் ஹ்ரூம் கநகாரக்தாப்யாம் ஸ்வாஹா,
ஓம் ஹ்ரூம் ஹ்ரைம் ரக்தா கிருஷ்ணாப்யாம் ஸ்வாஹா,
ஓம் ஹ்ரைம் ஹ்ரௌம் கிருஷ்ணா சுப்ரபாப்யாம் ஸ்வாஹா,

ஓம் ஹ்ரௌம் ஹ்ரம் சுப்ரபா திரக்தாப்யாம் ஸ்வாஹா,

ஓம் ஹ்ரம் ஹ்ர: அதிரக்தாபகுருபாப்யாம் ஸ்வாஹா, என்று ஜிஹ்வாநுஸந்தானஞ்செய்து, ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரைம் ஹ்ரௌம் ஹ்ரம்ஹ்ர: ஹிரண்யாகநகா ரக்தா கிருஷ்ணா சுப்ரபா திரக்தா பகுருபாப்ய ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு மேற்கு முதலிய திக்குகளிலுள்ள நாக்குக்களைச் சேர்த்து நடுவில் உள்ள கநகை என்னும் நாவில் ஹோமஞ் செய்யவேண்டும். இது ஜிஹ்வைகிகரணமாகும்.

பின்னர், யக்ஞேசுவரருக்கு சருப்ராசனம் முதல் விவாஹம் ஈறுன கர்மாக்களைச் செய்யும்பொருட்டு ஷடங்க மந்திரங்களால் தனித்தனி மூன்று ஆகுதிகளைச் செய்யவேண்டும். பின்னர் குண்டத்தின் விசாலத்திற்குத் தக்கவாறு இஷ்டப்படி முகத்தைக் கற்பித்து, நடு நாக்கில் வௌஷடை இறுதியில் உடைய மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, ஸ்ருக்ஸ்ருவங்களை மேல்முகமாகவும் கீழ்முகமாகவும் பிடித்துக்கொண்டு நின்று ஸ்ருக்கில் உள்ள நெய்யை வால்நெல்லளவு தாரையாக அக்கினியில் வார்த்துப் பூரணாகுதியைச் செய்யவேண்டும்.

பின்னர், ஆசனத்தில் அமர்ந்து, அக்கினியை நீரால் சுற்றி மூல மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சிவாக்கினியை

---

*ஜிஹ்வாகற்பனம், நாக்குக்களை உண்டுபண்ணுதல்.
†இரண்டு இரண்டாகச் சேர்த்தல்.
‡ஏழு நாக்குகளையும் ஒன்ருகச்சேர்த்தல்.

ஸம்ஹிதா மந்திரத்தால் அருச்சித்து பதினாறு அங்குலமுள்ள பலாசஸமித்துக்களை அகரம் முதலிய உயிரெழுத்துக்களால் ஹோமஞ் செய்யவேண்டும்.

மீண்டும் ஆஸன மந்திரத்தால் பூசித்து ஆவாஹனஞ் செய்து, முன்போல் முத்ரைகளைக் காண்பித்து, அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் ஸமாவர்த்தனம் விவாஹம் ஈறாகவுள்ள கர்மாக்களின் ஸம்ஸ்க்காரத்திற்காக ஸத்யோஜாதம் முதல் ஈசான மீறான மந்திரங்களால் தனித்தனி ஏழு ஆகுதிகளால் ஹோமஞ்செய்து, விருத்தாக்கினியாகத் தியானிக்க வேண்டும். தியானிக்குமுறை வருமாறு :—

பிங்களவர்ணமுடையவராகவும், மூன்று கண்களையும் ஜடாமகுடத்தையுமுடையவராகவும், வலதுகையில் கமண்டலு அக்ஷமாலை இவற்றையும், இடதுகையில் சுருவம் தோமரம் இவற்றையும் உடையவராகவும், விருஷபாஸனத்தின்மீது வீற்றிருப்பவராகவும், வெண்மையான பூணூலை உடையவரநகவும், புலித்தோலை வஸ்திரமாகவுடையவராகவும், வயோதிகராகவும் நித்தியாக்கினியைத் தியானிக்கவேண்டும்.

இவ்வாறு தியானித்து, ஆவரணபூஜை செய்து, சருத்ரவியங்களால் ஆவரணதேவதைகளுக்கு தத்வத்ரயத்தாலாகுதி செய்து அக்கினியை நீரால் சுற்றி, மூலமந்திரத்தால் நெய் முதலிய திரவியங்களைக்கொண்டு பதினாறு முறை ஹோமஞ் செய்து, பிராயச்சித்தத்திற்காக அஸ்திரமந்திரத்தால் மூன்று நெய் ஆகுதிகளைச்செய்து, வியாஹிருதிஹோமஞ் செய்து, ஸம்பாதஹோமஞ்செய்து, வசுப்யோருத்ரேப்யோ என்னும் பூர்ணாகுதிமந்திரத்தால் பூர்ணாகுதிசெய்து, பரிதியில் இருக்கும் தேவதைகளை அருச்சித்து, ஆகாரசமித்துப் பரிதி என்னும் இவற்றை எடுத்து அக்கினியில்போட்டு, இந்திரன் முதலியவர்களைப் பூஜித்து, அவர்களுக்குப் பலி சமர்ப்பித்து, அந்தர்ப்பலி பஹிர்ப்பலிகளைச் சமர்ப்பித்து, தேவதைகளை உத்வாஸனஞ்செய்து, அக்கினியைப் பரிசேஷனஞ்செய்து, பரிஸ்தரணத்தை அர்க்யஜலத்தால் புரோக்ஷித்து, அக்கினியில் தர்ப்பைகளைச் சமர்ப்பித்து, ஸ்ருவத்துடன் நெய்ப்பாத்ரத்தை எடுத்துத் தூக்கிக்கொண்டு மூலமந்திரத்தை உச்சரித்து ஆகுதியைச்செய்து, உபஸ்தானஞ்செய்து, அக்கினிக்கு நமஸ்காரமுத்ரை அஞ்சலி முத்ரைகளைக் காண்பித்து, தூபம்

தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து. ஸ்தாலியில் பஸ்மத்தை எடுத்துக்கொண்டு ஸ்வஸ்திகோஷங்களுடனும், எல்லா வாத்யோபசாரங்களுடனும், பரிஜனங்களுடனும், ஈசுவரருடைய சந்நிதியிற் சென்று, மந்திரபுஷ்பாஞ்சலி சமர்ப்பித்து, ஈசுவரருடைய திருமுடியில் பஸ்மத்தைத் தரித்து, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலும் அங்க மந்திரங்களாலும் அருச்சித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, மற்ற எல்லாத்தெய்வங்களுக்கும் பஸ்மந்தரித்து, தன் நெற்றியில் பிராமணருடன் பஸ்மத்தைத் தரிக்கவேண்டும்.

## * சுருக்கமான நித்தியஹோமம்

ஈசானத்தில் யாகமண்டபத்தில் சதுரச்ரமாகவேனும், வட்டமாகவேனும், மூன்று மேகலைகளுடன் கூடியதாகவும், ஒரு முழ அளவு ஆழம் உடையதாகவும், மேற்குப்பக்கத்திலேனும் தெற்குப் பக்கத்திலேனும் அரசிலைபோல யோனியை உடையதாகவும், நித்தியாக்கினி குண்டத்தைச் செய்துகொண்டு, குண்டத்தின் வலப்பக்கத்தில் வடக்குமுகமாக சுகாஸனத்திலமர்ந்து, பவித்ரத்தைக் கையிலணிந்துகொண்டு, பிராணாயாமம் கரநியாசம், பூதசுத்தி அந்தரியாகங்களைச் செய்து, பிரணவத்தால் சாமான்யார்க்யத்தைச் செய்துகொண்டு, அருக்யஜலத்தால் குண்டத்தினுடைய நான்குதிக்குகளிலும் புரோக்ஷித்து குண்டத்திற்கு அகோராஸ்திரமந்திரத்தால் மார்ஜனம் புரோக்ஷணம் கோமயத்தால் மெழுகுதல் என்னும் இவற்றைச்செய்து, அந்தக்குண்டத்தில் மேற்குத் திக்கிலிருந்து தொடங்கிக் கிழக்குநுனியாகவும், தெற்குத் திக்கிலிருந்து தொடங்கி வடக்கு நுனியாகவும், தருப்பையால் மூன்று ரேகைகளைக் கீறி, குண்டத்தின் தெற்குப்பக்கத்தில் ஓம் ஹாம் யமாய நம: என்றும், வடக்குப் பக்கத்தில் ஓம்

* இங்கு முன்கூறியபடி முதலில் விரிவாக நித்யஹோமஞ்செய்த ஆசாரியன் நாடோறும் இவ்வாறு செய்வது இயலாது எனக் கருதி சுருக்கமான நித்யஹோமம் கூறப்பட்டது. விரிவான நித்யஹோமம் ஆரம்பத்தில் செய்துகொள்ளாமல் சுருக்கமான முறையை அனுட்டிக்கக் கூடாது; நாமகரணம் முதலிய இன்றியமையாத கிரியைகள் சுருக்கமான விதியில் இல்லாமல் விரிவான விதியிற்றான் இருக்கிறபடியால் என்க.

ஹாம் சோமாய நம: என்றும், நடுவில் ஓம்ஹாம் ப்ரஹ்மணே நம: என்றும் அருச்சித்து, அக்கினியின் பீஜாக்கரத்தை உச்சரித்துக்கொண்டு சுழுமுனநாடி வழியாக மூலாதாரத்திலிருந்தும் அக்கினியை வெளிப்பட்டதாகப் பாவித்து, நிரீக்ஷணம் முதலியன செய்து, அக்கினியினல் குண்டத்தைச் சுற்றி, ஸம்ஹிதாமந்திரத்தால் அக்கினியை ஸ்தாபித்து, ஸ்ம்ஹிதாமந்திரத்தால் பூசித்து, புரோக்ஷணிபாத்திரம் நெய்ப்பாத்திரம், சரு (அவிசு) சமித்து என்னும் இவற்றை அருகேவைத்துக் கொண்டு, புரோக்ஷணீபாத்ரத்தில் பிரணவத்தால் நீரை நிரப்பி, அதன்மேல் புஷ்பஞ்சமர்ப்பித்து, தர்ப்பைநுனியால் அந்தத் திர்த்தத்தை எல்லாத் திரவியங்களிலும் புரோக்ஷிக்க வேண்டும். பின்னர், அக்கினியை தருப்பைகளால் பரிஸ்தரணஞ்செய்து, மேல் மேகலைகளில் பிர்மன் விஷ்ணு ருத்ரன் மகேசுவரன் என்னும் இவர்களைப் பூசித்து, கிழக்கு முதலிய எட்டுத் திக்குக்களில் திக்பாலர்களைப் பூசித்து, ராக்ஷஸ பாகத்தை நிருதிதிக்கில் போட்டுவிட்டு, அக்கினியைப் பரிசேஷனஞ்செய்து விருத்தாக்கினியாகத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு :—

நான்கு கைகளை உடையவராயும், விருத்தராயும், மூன்று கண்களை உடையவராயும், புகைவர்ணமுடையவராயும், விருஷபத்தின் மீது எழுந்தருளியிருப்பவராயும், வரம் சக்தி என்னும் இவற்றைக் கையில் உடையவராயும் உள்ள சிவாக்கினியைத் தியானிக்கிறேன் என்பதாம்.

பின்னர் ஆசனமூர்த்திமூலங்களால் அக்கினியை யருச்சித்து, நெய்ப்பாத்திரத்தை அஸ்திரமந்திரத்தால் சுத்தி செய்து, நெய்யால் நிரப்பி நெய்யைச் சுடச்செய்து, மூன்று முறை அபிமந்திரணஞ்செய்து, குண்டத்தின் நாபியில் உள்ள தருப்பையில் தாபித்து, சுருவத்தால் நெய்யைக் கிரகித்து, ஓம் ஹாம் ஹிருதயாயஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, பதினறு முறை ஹோமஞ்செய்து அக்னயேஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு சருவைப் பதினறுமுறை ஹோமஞ் செய்து, அக்நஆயாஹிவீதயே என்னும் மந்திரத்தாலும் பிரணவத்தாலும் ஸ்வாஹாந்தமாக ஐந்து ஸமித்துக்களை ஹோமஞ் செய்து, மேல்மேகலையிலுள்ள தேவர்களுக்கு ஹவிஸை நிவேதனஞ்செய்து, எட்டுத்திக்குகளிலும் இந்திரன்

முதலாயினருக்குப் பலி சமர்ப்பித்து, பிறகு நெய்யால் வியாஹிருதி ஓமஞ்செய்து, பஞ்சப்ரஹ்ம மந்திரம் அங்கமந்திரங்களாலும் ஓமஞ்செய்து, இறுதியில் ஓம் ஹாம் அக்நயேஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு ஓமம் செய்து பரிசேஷனஞ்செய்து பரிஸ்தரணங்களை ஹோமஞ்செய்யவேண்டும். பிறகு, அக்கினியை உத்வாஸனஞ்செய்து புஷ்பங்களை எடுத்து ஈசுவரனது சிரசில் சமர்ப்பிக்க வேண்டும்.

## நித்யோத்ஸவ விதி

பின்னர், ஆசாரியர் பரிஜனங்களுடன் ஸ்ரீபலிநாதரின் சமீபஞ்சென்று, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சாமான்யார்க்ய ஜலத்தால் புரோக்ஷித்து ஆஸனமந்திரத்தால் ஆஸனத்தை அருச்சித்து, காயத்ரியால் மூர்த்தியை அருச்சித்து, மாதிருகாதி கலாநியாசங்களைச் செய்து தியானிக்க வேண்டும். தியானம் வருமாறு:—

''நான்கு கைகளையும் மூன்று கண்களையும் ஜடாமகுடத்தையும் உடையவராயும், இடதுகையில் வரம் மான் இவற்றையும் வலதுகையில் பரசு அபயம் இவற்றையும் உடையவராயும், அழகான எல்லா அங்கங்களையுமுடையவராயும், புலித்தோலை உத்தரீயமாகவுடையவராயும் இருக்கும் தேவரையும், அவருக்கு இடப்பக்கத்தில் இரண்டு கண்களையுடையவளாயும், கரண்டமகுடத்துடன் கூடியவளாயும், வலதுகையில் நீலோத்பலத்தைத் தரித்து இருப்பவளாயும், மூன்றுமடிப்பை உடைய வயிற்றை உடையவளாயும், ஒரு கையைத் தொங்கவிட்டிருப்பவளாயும்இருக்கும் தேவியையும் தியானிக்கவேண்டு மென்பதாம்.

இவ்வாறு தியானித்து, ஆவாஹனஞ்செய்து, ஸ்தாபனம் முதலிய முத்ரைகளைச் சமர்ப்பித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, அபிஷேகஞ் செய்து, வஸ்திரம் சந்தனம் மாலை ஆபரணம் இவற்றால் அலங்கரித்து, தேவரை * ரங்கத்தின் மீதாரோகணித்து, நன்றாகக்கட்டி, தேவரையும் தேவியையும் பூசித்து, நைவேத்யம் தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து, லோகபாலர்களை அருச்சித்து, † ச்சத்ரம் முதலிய உப

* ரங்கம்—சிவிகை. † ச்சத்ரம் —குடை.

சாரங்களுடனும் எல்லா வாத்யோபசாரங்களுடனும், பரி ஜனங்களுடனும் முதலாவரணத்தைச் சுற்றவேண்டும். ஆசாரி யர் அருக்யபாத்ரத்தைக் கிரகித்துக் கொள்ளவேண்டும். பரி சாரகர் ஹவிஸ்தாலியைக் கொண்டுவரவேண்டும். ஆசாரியர் ஒரு மாத்ரையுள்ளதாக மணி அடித்துக்கொண்டு ஸ்வஸ்தி மங்கள சப்தங்களுடன் துவாரத்தின் கீழே உள்ள சிலையில் தெற்கு வடக்கு நடு இந்த ஸ்தலங்களில் ஜலத்தைவிட்டு அதற்குமேல் புஷ்பத்தைச் சிதறி ஸம்ரக்ஷணஞ் செய்து, அவ குண்டனஞ்செய்து, தீபமுத்ரை காண்பிக்கவேண்டும். சூக்ஷ் மாகமத்தில் மயில் முட்டை அளவு பலி உத்தமமென்றும், எலுமிச்சங்காய் அளவு பலி மத்திமமென்றும், நெல்லிக்கனி அளவு பலி அதமமென்றும் கூறப்பட்டிருக்கிறது. அன்றியும், தேவர்களுக்கு வட்டமாகவும், கணேசுவராதிகளுக்கு நீளமாக வும், பூதங்களுக்குப் புருஷவடிவாகவும், சக்திகளுக்கு உருண்டைவடிவாகவும், ருஷிகளுக்கு ஐந்து இடங்களில் பள்ள மாகவும், யக்ஷர்களுக்கு முஷ்டி அளவாகவும் ராக்ஷஸர்களுக்கு சகடம்போலும், பைசாசங்களுக்குச் சூலவடிவாகவும், பலி சமர்ப்பிக்கவேண்டும். மனிதருடைய ஐந்து விரல்களாலும் பலிசமர்ப்பிக்கவேண்டும் என்றுங் கூறப்பட்டிருத்தலால், கூறியவாறு பலியை எடுத்துக்கொண்டு, மேலே கூறப்பட்ட மூன்று இடங்களில் ஓம் ஹாம் விக்நாயஸ்வாஹா, ஓம் ஹாம் விக்நேசுவராயஸ்வாஹா, ஓம் ஹாம் விக்நராஜாயஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு பலி சமர்ப்பித்து, தென்பக்கத்தில் ஓம் ஹாம் டிண்டிநேஸ்வாஹா என்றும், வடபக்கத்தில் ஓம் ஹாம் முண்டினேஸ்வாஹா என்றும், உள்ளே உள்ள விருஷ பத்தின் முன்னர், ஓம் ஹாம் விருஷபாயஸ்வாஹா என்றும், விருஷபத்தின் பின்பக்கத்தில் ஓம் ஹாம் ஸம்வர்த்தபூதாயஸ் வாஹா என்றும் பலியை ஸமர்ப்பித்து, அக்கினி திக்கில் ஓம் ஹாம் ஸமாவர்த்தபூதாயஸ்வாஹா என்றும், தெற்குத்திக்கில் ஓம் ஹாம் குண்டோதர பூதாயஸ்வாஹா என்றும், அதற்குத் தென்பக்கத்தில் ஓம் ஹ்ரீம் ப்ரஹ்மாணீதேவ்யையஸ்வாஹா, ஓம் ஹ்ரீம் சண்டிகா தேவ்யையஸ்வாஹா என்றும், இதற்குக் கிழக்குத் திக்கிலும் மேற்குத்திக்கிலும் ஓம் ஹாம் வீரபத்ரா யஸ்வாஹா என்றும். ஓம் ஹாம் விக்நேசுவராயஸ்வாஹா வாஹா என்றும் பலி சமர்ப்பித்து, நிருருதிதிக்கில் ஓம் ஹாம் தீர்க்கதேகபூதாயஸ்வாஹா என்றும், இதற்கு மேற்குத்திக்

கில் ஓம் ஹாம் மகாகணபதயேஸ்வாஹா என்றும், விமானத்தின் பின்பக்கத்தில் ஓம் ஹாம் ஹ்ரஸ்வதேகபூதாயஸ்வாஹா என்றும், வாயுதிக்கில் ஓம் ஹாம் ஸிம்ஹரூபபூதாயஸ்வாஹா என்றும், அதற்கு மேற்குத் திக்கில் ஓம் கும் குஹபூதாயஸ் என்றும், அதற்குக் கிழக்கில் ஓம் ஹாம் ஜ்யேஷ்டாயஸ்வாஹா என்றும், வடக்குத் திக்கில் ஓம் ஹாம் கஜமுகபூதாயஸ்வாஹா என்றும், அதற்குத் தென்பக்கத்தில் ஓம் தும் துர்க்காயையஸ்வாஹா என்றும், அதற்குக் கிழக்கில் ஓம் ஹாம் சூர்யாயஸ்வாஹா என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் ப்ராங்முகபூதாயஸ்வாஹா என்றும் இவ்வாறு பலி சமர்ப்பிக்க வேண்டும்.

இரண்டாமாவரணத்தில் வாயிலின் தென்பக்கம் வடபக்கம் ஆகிய இவற்றில் ஓம் ஹாம் ஆமோதாயஸ்வாஹா, ஓம் ஹாம்ப்ரமோதாயஸ்வாஹா என்றும், இரண்டாவது விருஷபத்தின் முன்னர் முன்போல் பலிசமர்ப்பித்து, விருஷபத்தின் பின்பக்கத்தில் ஓம் ஹாம் லம் இந்திராயஸ்வாஹா என்று பலி சமர்ப்பித்து, தூபம் திபம் வேதம் ஆகமம் கீதம் தாளம் மத்தளம் நிருத்தம் வாத்யம் ஆகிய இவற்றைச் சமர்ப்பித்துக் கொண்டு, இவ்வாறு ஈசானமீருக பலிசமர்ப்பித்து, ஈசானபலியின் தென்பக்கத்தில் ஓம் ஹாம் க்ஷேத்ரபாலாயஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு பலி சமர்ப்பிக்கவேண்டும்.

பின்னர், மூன்றுவது ஆவரணத்திற்காக இரண்டாமாவரணத்திலேயே மீண்டுஞ்சுற்றி நிருருதிதிக்கில் ஓம் ஹாம் விஷ்ணவே ஸ்வாஹா என்றும், ஈசானதிக்கில் ஓம் ஹாம் ப்ரஹ்மணேஸ்வாஹா என்றும் பலிசமர்ப்பித்து, * பூதபீடத்திற்குக் கிழக்கே மூர்த்தியை வடக்குமுகமாக வைத்துக்கொண்டு அர்க்யஜலத்தால் பீடத்தைக் கழுவி, குமுதத்திற்குமேல் எட்டுத்திக்குகளிலும் இந்திரன் முதலிய தேவதைகளைப் பூசித்து, அதற்குமேற்பட்டிகையின் மேல் வடக்குப்பக்கத்தில் ஓம்ஹாம் ப்ரஹ்மணே நம: என்றும், ப்ரஹ்மாவுக்கும் ஈசானத்திற்கும் நடுவில் ஆதித்யேப்யோ நம: என்றும், ஈசானதிக்கு இந்திர திக்குக்கட்கு நடுவில் க்ஷேத்ரபாலாய நம: என்றும், இந்திர திக்கு அக்கினிதிக்குக்கட்கு நடுவில் அசுவிநீப்யாம் நம: என்

* பூதபீடம்—சந்நிதியிலிருக்கும் பலிபீடம்.

றும், தெற்குத்திக்கு அக்கினிதிக்குக்கட்கு நடுவில் ஸப்த ருஷிப்யோ நம: என்றும், தெற்குத்திக்கு நிருதிதிக்குக்கட்கு நடுவில் பிதிருப்யோ நம: என்றும், நிருதிதிக்கு மேற்குத்திக் குக்கட்கு நடுவில் ஓம் ஹாம் அப்ஸரோகணேப்யோ நம: என்றும், மேற்குத்திக்கு வாயுதிக்குக்கட்கு நடுவில் முனிப்யோ நம: என்றும், வாயுதிக்கு வடக்குத்திக்குக்கட்கு நடுவில் ஓம் ஓம் ஹாம் வசுப்யோ நம: என்றும், வடக்குத்திக்கு ஈசானதிக் குக்கட்கு நடுவில் ஓம் ஹாம் ருத்ரேப்யோ நம: என்றும், இவ்வாறு அருச்சித்துப் பீடத்திற்கு வெளியில் கிழக்குத்திக் கில் ஓம் ஹாம் பிசாசகணேப்யோ நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் யக்ஷேப்யோ நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் ரக்ஷோப் யோ நம:, வடக்குத்திக்கில் ஓம் ஹாம் கந்தர்வேப்யோ நம:, ஈசானத்தில் ஓம் ஹாம் பூதேப்யோ நம: என்றும் இவ்வாறு பூசித்து, அதற்குமேல் எட்டுத்தளங்களிலும் எட்டுச் சக்தி களையும் பூசித்து, கர்ணிகையின் நடுவில் ஓம் ஹாம் அவிக்னய ஸ்வாஹா என்றும், கிழக்குத் தளத்தில் ஓம் ஹாம் ஆமோதா யஸ்வாஹா என்றும், தெற்குத்தளத்தில் ஓம் ஹாம் ப்ரமோ தாயஸ்வாஹா என்றும், மேற்குத்தளத்தில் ஓம் ஹாம் ப்ர முகாயஸ்வாஹா என்றும், வடக்குத் தளத்தில் ஓம் ஹாம் துர் முகாயஸ்வாஹா என்றும், ஈசானதளத்தில் ஓம் ஹாம் விக்ந ஹந்த்ரே நம: என்றும் அருச்சித்து, இவ்வாறு பலிதேவர் களின் பொருட்டு நமோந்தமாக ஸ்வாஹா என்று சொல்லிக் கொண்டு பலி சமர்ப்பித்து, நடுவில் தேங்காய் அளவான அந்நத்தால் பலி சமர்ப்பித்து, தூபதீபார்க்யங்கள் சமர்ப் பித்து, பின்னர் பீடத்தைச் சுத்திசெய்து, அதில் புஷ்பத்தைச் சமர்ப்பித்து, பலிதேவரை இருப்பிடம் சேர்த்து அருச்சித்து, நைவேத்ய தூபதீபார்க்யங்கள் சமர்ப்பித்து எல்லாவுபசாரங் களையும் செய்யவேண்டும்.



பலிபீடத்தைச் சிந்திக்குமுறை வருமாறு :—

உபாநம் அஷ்டநாக ரூபமாயும், ஜகதி ஏழு வாயுக்களின் கூட்டரூபமாயும், குமுதம் பூதங்களின் ரூபமாயும், கண்டம் ராக்ஷஸ ரூபமாயும், ஊர்த்வப்பட்டிகையுடன் கிந்நரம் கணேசுவரரூபமாயும், அதற்குமேல் உள்ள பத்மம் நூறு உருத் ரர்களால் சோபிக்கப்பட்டதாயும் இருப்பதாகச் சிந்திக்க வேண்டும்.

அன்றியும், ஐந்து முகங்கள், ஐந்து வாய்கள் ஐந்து மூக்குக்கள், பத்துக்கண்கள், பத்துக்காதுகள், பத்துப்புஜங்கள், பத்துச்சூலங்கள் ஆகிய இவைகளைத் தரித்திருப்பதாயும் ஒரு கழுத்தையும் ஒரு இருதயத்தையும் உடையதாயும், மிகச் செம்மைவர்ணமுடையதாயும், இரண்டு கால்களையுடையதாயும், பூத பலிபீடத்தின் சொருபம் அறியத்தகுந்தது. ஆமோதர், பிரமோதர், ப்ரமுகர், துர்முகர், அவிக்நர், விக்நஹர்த்தா என்னும் இந்த அறுவரும் பூதநாயகர்களாவர்.

### பலிகளுக்குரிய எண்மரின் விவரம்

தைவிகலிங்கமாயின் பவர் முதலாயினரும், மானுஷலிங்கமாயின் இந்திரன் முதலாயினரும், ஸ்வயம்பு லிங்கமாயின் பூதங்களும்' ஆர்ஷலிங்கமாயின் பரிவாரங்களும், பாணலிங்கமாயின் அஷ்டவசுக்களும், ராக்ஷஸலிங்கமாயின் யக்ஷர்களும், திவ்ய லிங்கமாயின் அநந்தர் முதலியவர்களும் இவ்வாறு ஏழுவித லிங்கங்களுக்கும் பலிக்கு உரியவர் தனித்தனி எண்மராவர். அவருள்.

பவர், சர்வர், ஈசானர், பசுபதி, உக்ரர், ருத்ரர், பீமர், மகாதேவர் ஆகிய எட்டு மூர்த்திகளும் தைவிக லிங்க பலிக்குரியவராவர்.

இந்திரன், அக்நி, யமன், நிருதி, வருணன், வாயு, சோமன், ஈசானன் ஆகிய எட்டு லோகபாலர்களும் மாநுஷ லிங்க பலிக்குரியவராவர்.

கிழக்குத்திக்கில் உந்மத்தரும், அக்கினி திக்கில் நான்முகனும், தெற்குத்திக்கில் குண்டோதரனும், நிருதிதிக்கில் சுப்ரபோதகனும், மேற்குத்திக்கில் சிம்மவக்திரனும், வாயுதிக்கில் அதோமுகனும், வடக்குத்திக்கில் ஏகபாதரும், ஈசானதிக்கில் அஷ்டபாதரும் ஆகிய இவர்கள் சுயம்புலிங்க பலிக்குரியவராவர்.

விருஷபம், அக்கினி, ப்ராஹ்மீ முதலிய சக்திகள், கணேசுவரர், சுப்ரமண்யர், ஜ்யேஷ்டாதேவி. துர்க்கை, சண்டேசுவரர் ஆகிய இவர்கள் ஆர்ஷலிங்க பலிக்குரியவர்.

தரர், த்ருவர், ஸோமர், ஆபர், அநிலர், அநலர், பிரத்யூஷர், ப்ரபாவர் ஆகிய அஷ்டவசுக்களும் பாணலிங்க பலிக்குரியவராவர்.

யக்ஷர், ராக்ஷஸர், பைசாசர், சித்தர்கள், வித்யாதரர், கிந்நரர், கிம்புருஷர், ஸர்வசித்தர் ஆகிய இவர்கள் ராக்ஷஸ லிங்க பலிக்குரியவராவர்.

அநந்தர், சூக்ஷ்மர், சிவோத்தமர், ஏகநேத்ரர், ஏக ருத்ரர், த்ரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி ஆகிய எண்மரும் திவ்யலிங்க பலிக்குரியவர்.

மந்திரநியாசம், ஹோமம், பரிவார பூஜை, பலி ஆகிய இவை காலசந்தி, உச்சிக்காலம், சாயரக்ஷை ஆகிய மூன்று காலங்களிலும் செய்யப்படல் வேண்டும். உபசந்திகளில் இவை வேண்டாம்.

தேங்காய்ப்பருமன் உள்ள பலி உத்தமம். முஷ்டி அள வுள்ள பலி மத்திமம். ஆகுதி அளவுக்குரிய பலி அதமமாகும். இவ்வாறு பலியின் அளவு அறியத்தக்கது.

## பாதுகாராதன விதி

பின்னர் பாதுகேசுவரரின் ஆலயஞ்சென்று பாதுகேசு வரரை ஸ்தாலியின்மேல் வைத்துக்கொண்டு, ஆஸனமூர்த்தி மந்திரங்களா லருச்சித்துத் தியானஞ் செய்யவேண்டும். தியா னம் வருமாறு :—

மாதுளம்பூவிற்கு நிகராயும். ஊர்த்வகேசத்தை உடை யவராயும், மூன்று கண்களையுடையவராயும், கைகளில் பாசம் அங்குசம் சூலம் கல்ஹாரம் (செங்கழுநீர்) என்னுமிவற்றை உடையவராயும், வெள்ளெருக்கு மாலையினையும் பொன்மை நிற வஸ்திரத்தையும் அணிந்தவராயும் உள்ள பாதுகேசுவர ரைத் தியானிக்கின்றேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து, மூலமந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து, ஆடை சந்தநம் மாலை ஆபரணங்களால் அலங்கரித்து அஸ்திரமந்திரத்தால் பாதுகையைப் பூசித்து ஸம்ரக்ஷணஞ் செய்து, அவகுண்டனஞ்செய்து, தேநுமுத்ரை அஸ்திரமுத் திரை லிங்கமுத்ரை மகாமுத்ரைகளைக் காண்பித்து, நைவேத் யம் தூபம்திபம் அர்க்கியம் முதலியவற்றைச் சமர்ப்பித்து, ஸ்தாலியைப் பரிசாரகரின் சிரசில் ஏற்றி எல்லா வாத்யோப சாரங்களுடனும் ஈசுவரருடையசன்னிதியில் வைத்து, ஆசாரி

யர், புஷ்பங்களுடன் மந்திர சுலோகத்தை உச்சரித்துக் கொண்டு சுளுகோதகஞ் சமர்ப்பிக்கவேண்டும்.

மந்திர சுலோகத்தின் பொருள் வருமாறு:—குஹ்யம் அதி குஹ்யம் முதலிய மந்திர தத்துவங்களனைத்தையும் காப்பவர் நீரே. ஆகையால் தேவரீர் அனைத்தையும் காக்கின்றமை பற்றி என்னுடைய ஜபத்தையும் ஏற்றருளவேண்டும். எந்த ஜபமானது உம்மிடத்திலிருக்கின்றதோ அந்த ஜபத்தைக் கொண்டு உம்முடைய பிரசாதத்தால் எங்களுக்குப் போக மோக்ஷங்கள் சித்திக்கவே செய்யும். ஆகையால் அடியேனிடத்தில் கிருபைவைத்துச் செபத்தை ஏற்றருளல் வேண்டும்.

ஹே சங்கரனே! சிவபதத்தில் இருக்கும் என்னுடைய புண்யரூபமான கன்மத்தைக் காப்பாற்றும். பாபரூபமான கன்மத்தை நாசஞ்செய்யும்.

பலன் தருபவன் சிவனே. பலனை அனுபவிப்பவன் சிவனே. எல்லா ஜகத்துக்களும் சிவனே. பூசிப்பவன் சிவனே. இவ்வாறு சிவன் எல்லாமாய் இருத்தலால் நான் சிவமாய் இருக்கின்றேன் என்பதாம்.

இவ்வாறு சொல்லிக்கொண்டு சிவனுடைய வரதஹஸ்தத்தில் சுளுகோதகத்தைச் சமர்ப்பிக்கவேண்டும். தன்னையும் ஜபகர்மாவையும் சிவனுடைய வலதுகையில் சமர்ப்பிக்க வேண்டும்.

காரணாகமத்தில் சுளுகோதகம் சமர்ப்பிக்கும் முறை சிறிது சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

நான்கு விரல்களையும் மடக்கிய வலது கையில் புஷ்பம் ஜலம் இவற்றை எடுத்துக்கொண்டு பாதங்களில் சமர்ப்பிக்க வேண்டும். இது சுளுகோதகம் எனப்படும். இதனைப் பூஜையின் இறுதியில் சமர்ப்பிக்கவேண்டும் என்பதாம்.

பின்னர் ஓ சுவாமி! எல்லா உலகங்களையும் இரக்ஷிப்பவரே! எல்லாக் காலங்களிலும் பூஜை முடியும்வரை கிருபையுடன் இந்த லிங்கத்தில் சாந்நித்யஞ் செய்யவேண்டும் என்னும் பொருளுடைய மந்திரத்தினால் பிரார்த்தித்து, மூல மந்திரத்தினால் தேவரைப் பொறுத்துக்கொள்ளும் என்று கூறி, அஷ்ட புஷ்பங்களால் பூசிக்கவேண்டும்.

காலையில் புஷ்பலிங்கமும், மத்யாஹ்னத்தில் அன்னலிங்கமும், சாயங்காலத்தில் அக்ஷதை லிங்கமுமாக மூன்றுவித லிங்கங்கள் கூறப்படுகின்றன. ஸ்தாலிக்குமேல் புஷ்பலிங்கத்தை மூலமந்திரத்தால் பூசித்து, பாசுபத மந்திரத்தால் அருச்சித்துத் தியானிக்கவேண்டும். தியானம்வருமாறு :—

"நான்கு கைகளும் மூன்று கண்களும் உடையவராயும், ஜடாமகுடத்தால் அலங்கரிக்கப்பட்டவராயும், மான் டங்கம் அபயம் வரதம் என்னும் இவற்றை உடையவராயும், வெண்மையான யக்ஞோபவீதத்தை உடையவராயும், வெண்மையான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவராயும் இருக்கும் தேவரைத் தியானிக்கிறேன்" என்பதாம். இவ்வாறு தியானித்து ஆவாஹனஞ்செய்து நைவேத்யம் தூபம் தீபம் அர்க்யங்களைச் சமர்ப்பிக்கவேண்டும். பின் பஞ்ச ப்ரஹ்ம மந்திரங்களால் அருச்சித்து, ஸ்தாலியை வஸ்திரத்தால் மூடி, சுத்த சைவரின் சிரசில் ஆரோகணித்து, முன்போல் வாத்யங்களுடன் உள்ளே சுற்றிவந்து, வஸ்திரத்தால் மறைக்கப்பட்ட அந்தப் புஷ்பலிங்கத்தை மூல மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு விருஷபத்தின் தோளில் சேர்த்து மத்யாஹ்ன காலத்தில் ஜலத்துடன் சேர்க்கவேண்டும்.

பின்னர் ஈசுவரர் பிரீதி அடைதற்பொருட்டு, பரத சாஸ்திரத்தில் கூறியவாறு சுத்த நிருத்தத்தைச் செய்வித்து, தேசிகர் பக்தர்களுடன் முறைப்படி பிரதக்ஷிணம் நமஸ்காரம் ஸ்தோத்ரம் ஜபம் தியானங்களைச் செய்து, லிங்கத்திலிருக்கும் ஈசுவரனை முன்போல் அஷ்ட புஷ்பங்களால் அருச்சித்து, நிரோதார்க்யம் சமர்ப்பித்து, திரை இட்டு வெளியில் வந்து சண்டேசருடைய ஆலயத்திற்குச் செல்லவேண்டும்.

சண்டேசருடைய ஆலயஞ்சென்று ஈசுவரருடைய நிர்மால்யத்தைக் கொண்டுவந்து, சண்டேசருடைய சன்னிதியில் அந்த நிர்மால்யங்களை ஸ்தாபித்து, சண்டருடைய பிம்பத்தைச் சுத்தோதகத்தால் அபிஷேகஞ்செய்து, ஓம் ஹாம் த்வநிச்சண்டாஸநாய நம:, ஓம்ஹாம் த்வநிச்சண்ட மூர்த்தயே நம: என்று ஆஸனம் மூர்த்தி இவற்றை யருச்சித்துத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு :—

இரண்டு கண்களையும், பொன்மை வர்ணத்தையுமுடையவராயும், ஜடாமகுடத்தால் அலங்கரிக்கப்பட்டவராயும்,

வலதுகையில் பரசையும் இடதுகையை ஊருஹஸ்தமாகவும் வலதுகாலைத் தொங்கவிட்டுக்கொண்டும் இடதுகாலைப் படுக்க வைத்துக்கொண்டு மிருப்பவராயும், பூணூலால் அலங்கரிக்கப் பட்டவராயும், அதிகமான காந்தியை உடையவராயுமிருக்கும் சண்டேசுவரரைத் தியானிக்கின்றேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து, ஓம் ஹாம் த்வநிச்சண்டாய நம: என்று ஆவாஹனம் செய்து, ஸ்தாபனமுத்ரை முதலிய முத்ரைகளைக் காண்பித்து, தைலம் முதலியவற்றால் அபிஷேகஞ்செய்து, ஆடை சந்தனம் புஷ்பமாலை முதலியவற்றால் அலங்கரித்து அருச்சிக்கவேண்டும். ஓம் ஹாம் த்வநிச்சண்டேசுவராய ஹூம்பட் நம: என்று அருச்சித்து அங்கங்களைப் பூசிக்கவேண்டும். அது வருமாறு :—

ஓம் ஹாம் சண்டேசுவராய ஹிருதயாய நம;, ஓம் ஹீம் சண்டேசுவராய சிரசேஸ்வாஹா, ஓம் ஹூம் சண்டேசுவராய சிகாயைவஷட், ஓம் ஹைம் சண்டேசுவராய கவசாய ஹூம், ஓம் ஹௌம் சண்டநேத்ராய வௌஷட், ஓம் ஹ: சண்டாஸ்த்ராயபட் என்று அங்கங்களைப்பூசித்து, ஈஸ்வரருடைய நிர்மால்யமான அன்னம் பாநகம் முதலியவற்றையும் தாம்பூலம் முதலியவற்றையும் நிவேதனஞ்செய்து, தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து, எல்லா உபசாரங்களையுஞ் செய்து பிரார்த்திக்கவேண்டும். பிரார்த்தனை வருமாறு :

ஓ சண்டேசுவர! மஹாபக்தரே! சிவத்யானம் செய்பவரே! பரமசிவனது ஆக்ஞையால் அவருடைய நிர்மால்யமானது தேவரீருக்குச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கின்றது என்பதாம். இவ்வாறு பரமசிவனது ஆணையைத் தெரிவித்து, சண்டேசுவரருடைய மூல மந்திரத்தால் அருக்யஞ் சமர்ப்பித்து, மீண்டும் சண்டரின் மூல மந்திரத்துடன் ஹ்ருதயாய ஹூம்பட் ஸ்வாஹா என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு நமஸ்காரஞ்செய்து பராங் முகார்க்யஞ் சமர்ப்பித்து விசர்ஜனஞ்செய்து, சண்டேசுவரருடைய அஷ்டகஸ்தோத்ரம் நமஸ்காரம் முதலியவற்றைச் செய்து சக்திக்குத் தக்கவாறு மூலமந்திர ஜபஞ்செய்து, ''பரமசிவனது பாத கமலங்களைச் சிந்திப்பவரான ஓ சண்டேசுவர! உமக்கு நமஸ்காரம். பரமசிவனைச் சேவித்த பலனைத் தந்தருளல்வேண்டும்

என்று இவ்வாறு மூன்றுமுறை கைகளைத் தட்டிக்கொண்டு பிரார்த்திக்கவேண்டும்.

எந்தச் சிவாலயத்தில் சுப்ரமண்யருடைய ஆலயம் திருவையாறு திருநெல்வேலி முதலிய இடங்களிற்போல் வேருக இருக்கின்றதோ ஆண்டு கீழுள்ள விதிப்படி செய்யவேண்டும்.

## ஆறுமுகர் பூஜை

ஆசாரியர் ஸாதகர்களுடன் ஆறுமுகருடைய ஆலயத்திற்குச் சென்று, வடக்குமுகமாக அமர்ந்து, பிராணுயாமம் பூதசுத்திகளைச் செய்து, புண்யாஹவாசனஞ்செய்து, அந்தத் தீர்த்தத்தால் ஆலயத்தைப் புரோக்ஷித்து. ஸ்தானசுத்தி செய்து, கந்தம் ரூபம் ரஸம் என்னும் இவை ரூபமான பாத்யம், ஆசமனீயம், அருக்யதீர்த்தம் என்னும் இவற்றை அங்க மந்திரம் அஸ்திரமந்திரம் மூல மந்திரங்களால் அபிமந்திரித்து, பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் ஸ்நபனம் முதலியவற்றைச் சேகரிக்கவேண்டும். வாயிலின் வலதுபக்கத்தில் கணபதியை அருச்சித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து வாயிலைப் புரோக்ஷித்து, தென்பக்கத்தில் ஓம் ஹாம் ஜயாய நம:, வடபக்கத்தில் ஓம் ஹாம் விஜயாய நம: என்றும், கொடுங்கையில் கணபதி முதலியவரையும் நடுவில் மகாலக்ஷ்மியையும் அருச்சித்து, மேலுங்கீழும் புவங்க பதங்கர்களையும் அருச்சித்து, தென்பக்கம் வடபக்கங்களில் இரண்டு நிதிகளையும் ஓம் ஹாம் சங்கநிதயே நம: ஓம் ஹாம் பத்மநிதயே நம: என்று பூசித்து, சன்னிதியில் ஓம் ஹாம் மயூராஸனுய நம: ஓம் ஹாம் மயூரமூர்த்தயே நம: ஓம் ஹாம் மயூராய நம: என்பது முதலாக ஆஸனமூர்த்தி மூலமந்திரங்களால் பூசித்து, எல்லோருக்கும் நைவேத்யம் தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பிக்கவேண்டும்.

அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்று விக்னங்களையும் நீக்கி உள்ளே சென்று, நைருததிக்குமுதல் ஈசானம் முடிய வாஸ்து பிரமன் கணபதி சரஸ்வதி மகாலக்ஷ்மீ ஆகிய இவர்களைப் பூசித்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூர்த்தியைப் புரோக்ஷித்து நிர்மால்யத்தை எடுத்து, தத்புருஷ மந்திரத்தை உச்சரித்துச் சண்டருக்காக ஈசான திக்கில் நிர்மாயத்தைத் தாபித்து. இருதயத்தை

உச்சரித்துத் தீர்த்தத்தால் பிம்பத்தைச் சுத்திசெய்து, அநந்தாஸனமுதல் பத்மாசன மீறுகப் பூசித்து, நடுமுகத்தில் ஸ்கந்தரின் ஆஸனமூர்த்தி மந்திரங்களால் பூசித்துத் தியானஞ் செய்யவேண்டும். தியானம் வருமாறு:

பன்னிருகைகளையும், செவந்த இரத்திநத்திற்குச் சமானமாகிய திவ்யமான ஆறுமுகங்களையும் உடையவராயும், வஜ்ரம், தநுஸ், கேடயம், வரம், பத்மம், சூலம் என்னுமிவற்றையும், பாணம், அபயம், சத்தி, கதை, கட்கம், துவஜம் என்னுமிவற்றையும் பன்னிருகைகளில் உடையவராயும், கருமையான மயில்வாகனத்தை உடையவராயுமிருக்கும் ஆறுமுகருடைய சொருபத்தைத் தியானிக்கின்றேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து, மூலமந்திரத்தாலாவாஹனஞ் செய்து ஆவாஹனமுத்ரை, ஸ்தாபனமுத்ரை முதலிய முத்ரைகளையும் வஜ்ரமுத்ரை, சத்திமுத்ரை, மஹாமுத்ரைகளையும் காண்பித்து, தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பிக்க வேண்டும்.

பின்னர் ஸ்கந்தருடைய இடதுபக்கத்தில் கஜவல்லியை ஓம் ஹ்ரீம் கம் கஜவல்யாஸநாய நம:, ஓம் ஹ்ரீம் கம் கஜவல்லீ மூர்த்தயே நம: என்று அருச்சித்துத் தியானிக்க வேண்டும். தியானம் வருமாறு:—

* பொன்மை வருணமுடையவளாயும், புஷ்பத்தைத்தரித்திருப்பவளாயும், புன்சிரிப்புள்ள முகத்தையுடையவளாயும், திவ்ய வஸ்திரத்தால் அலங்கரிக்கப்பட்டவளாயும், இடது கையைத் தொங்கவிட்டிருப்பவளாயும், மகேந்திரனுடைய பெண்ணும், மந்தாரமாலையைத் தரித்திருப்பவளாயும், தேவர்களால் அருச்சிக்கப்பட்ட பாதங்களை உடையவளாயும், சந்திரனைப்போன்ற முகத்தையுடையவளாயும், சுப்ரமணியருக்கு இடதுபக்கத்தில் இருப்பவளாயும், பலவிதமான திவ்யாபரணங்களணிந்தவளாயும், இரண்டு கண்களையுடையவளா

* பிரதியில் உள்ள தேவஸேனை வள்ளியம்மை என்னும் இவர்களின் தியானம் இன்னின்னவர்க்கு இந்த இந்த இலக்கணம் என்பதைத் தெளிவாக விளக்காமையால் வேறிடத்திலிருந்து தேவயானை வள்ளியம்மை ஆகிய இவர்களின் தியானங்கள் தனித்தனியே சேர்க்கப்பட்டுள்ளன.

யும், மூன்று மடிப்புள்ள வயிற்றை உடையவளாயும் இருக்கும் தேவயானையைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து, ஓம் ஹ்ரீம் கம் கஜவல்யை நம: என்ற மந்திரத்தால் ஆவாஹனஞ் செய்யவேண்டும்.

பின்னர் ஸ்கந்தருடைய வலதுபக்கத்தில் வனவல்லியை ஓம் ஹ்ரீம் வம் வனவல்யாஸநாய நம:, ஓம் ஹ்ரீம் வம் வன வல்லீ மூர்த்தயே நம: என்று அருச்சித்துத் தியானஞ் செய்ய வேண்டும். தியானம் வருமாறு:

கருமை நிறமுடையவளாயும், தாமரையைத் தரித்திருப் பவளாயும், இரத்தினங்களால் பிரகாசிக்கும் தாடங்கத்துடன் கூடின காதுகளால் பிரகாசிக்கிறவளாயும், வலது கையைத் தொங்கவிட்டிருப்பவளாயும், சிரசில் கிரீடத்தை உடையவ ளாயும், கஞ்சுகத்தை அணிந்த உன்னதமான ஸ்தனங்களை யுடையவளாயும் எல்லோராலும் அருச்சிக்கப்பட்ட பாதங் களையுடையவளாயும் சுப்பிரமணியருக்கு வலது பக்கத்தில் இருப்பவளாயும், குன்றிமணிமாலையைத் தரித்திருப்பவளாயும் இருக்கும் வள்ளியம்மையைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானஞ்செய்து, ஓம் ஹ்ரீம் வம் வனவல்யை நம: என்ற மூலமந்திரத்தால் ஆவாஹனஞ்செய்து, ஸ்தாப னம் முதலிய முத்திரைகளைக் காண்பித்து, அபிஷேக முறைப் படி தைலம் முதல் ஸ்நபனமீறுக அபிஷேகஞ்செய்து, திரு வொற்றாடை சாத்தி, வஸ்திரம், சந்தனம், மாலை ஆபரணங் களால் அலங்கரித்து காயத்ரியை நியாசஞ் செய்து, மூலமந் திரத்தை உச்சரித்துக்கொண்டு மாதிருகாநியாசம் முப்பத் தொரு கலாநியாசங்களைச் செய்து, நடுமுகம் முதற்கொண்டு பிரதக்ஷிணமாக இடது முகம் முடிய,

ஓம் ஹ்ராம் சம் சரவணபவாய நம:
ஓம் ஹ்ரீம் ரம் ரவணபவசாய நம:
ஓம் ஹ்ரூம் வம் வணபவசராய நம:
ஓம் ஹ்ரைம் ணம் ணபவசரவாய நம:
ஓம் ஹ்ரௌம் பம் பவசரவணாய நம:
ஓம் ஹ்ர: வம் வசரவணபாய நம:

என்று அருச்சித்து, ஷடங்கஸ்தானங்களில் ஹ்ருதயாய நம: என்பது முதல் அஸ்திராயபட் என்பது ஈறாகவுள்ள மந்திரங்

களை, சேனுபதி, சுரேசர், ஹரசூனு, சுராக்ரஜர், சுப்ரமண்யர் குமாரர் ஆகிய பெயர்கள் இறுதியாக பீஜாக்கரங்களுடன் பூசித்து அர்க்யம் சமர்ப்பிக்கவேண்டும். இது முதலாவது ஆவரண பூஜையாகும்.

இவ்வாறே காரணுகமத்தில் சேநாபதி, சுரேசர், ஹரசூனு, சுராக்ரஜர், சுப்ரமண்யர், குமாரர், ஈருகஆறு அங்கங்களையும் பூசை செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது.

பின்னர் ரௌரவாகமத்திற் கூறியவாறு எட்டுக் குமாரர் களை இரண்டாவது ஆவரணத்தில் பூசை செய்யவேண்டும். அது வருமாறு:—

''ப்ரதமர், சகுநர், ரேதர், பூதநர், வக்ரமுண்டி, நிஜர், மேஷதேசர், சங்கோபமர் ஆகிய இவர்களை முறையே குங்குமம், செம்மை, கருமை, வெண்மை, கருமை, வஜ்ரம், புகைமை, கருமை, ஆகிய வர்ணங்களை உடையவர்களாயும், வஜ்ரம் சத்தி அபயம் வரதங்களை உடையவர்களாயும், கிரீடத்தையும் இரண்டு கண்களையும் உடையவர்களாயும், பத்மாஸனத்தில் அமர்ந்திருப்பவர்களாயும் தியானிக்கவேண்டுமென்பதாம்.''

இவ்வாறு தியானித்து கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளில் ஓம் ஹாம் ப்ரதமாய நம:, ஓம் ஹாம் சகுநாயநம:, ஓம் ஹாம் ரேதாயநம:, ஓம் ஹாம் பூதநாயநம:, ஓம் வக்ரமுண்டிநே நம:, ஓம்ஹாம் நிஜாயநம:, ஓம் ஹாம் மேஷதேசாய நம:, ஓம் ஹாம் சங்கோபமாய நம: என்று அருச்சிக்கவேண்டும்.

பின்னர் இதற்கு வெளியில் மூன்ருமாவரணத்தில் கிழக்கு முதலிய எட்டுத்திக்குகளில் ஓம் ஹாம் யக்ஷகணேப்யோநம:, ஓம் ஹாம்ராக்ஷஸகணேப்யோ நம:, ஓம் ஹாம் பைசாசகணேப்யோ நம:, ஓம் ஹாம் கந்தர்வ கணேப்யோ நம:, ஓம் ஹாம் ஸௌம்யகணேப்யோநம:, ஓம் ஹாம் தானவகணேப்யோநம:, ஓம் ஹாம் கிந்நரகணேப்யோ நம:, ஓம் ஹாம் பிதிருகணேப்யோநம: என்று பூசை செய்யவேண்டும்.

பின்னர் இரண்டு தேவிகளையும் ஆஸனமூர்த்தி மூலமந்திரங்களால் பூசை செய்யவேண்டும்.

ஆறுமுகங்களின்றி ஒரு முகமுடைய சுப்பிரமணியக் கடவுளாயின் ஆறுமுகங்களின் பெயரும் தியானமும் இன்றி வேறு பெயர்களால் அருச்சித்துத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

ஒரு முகமுடையவராயும், நான்குகைகளையுடையவராயும், வஜ்ரம், சக்தி, வரம் அபயங்களை உடையவராயும், செம்மை வர்ணத்தையும், கரண்ட மகுடத்தையும் உடையவராயும், மயிலின்மீது வீற்றிருப்பவராயும், எல்லா ஆபரணங்களையும் அணிந்தவராயும், உள்ள சுப்பிரமணியரைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து, பஞ்சப்பிரம மந்திரங்களாலும், அங்கமந்திரங்களாலும் பூசித்து, ஆவரணத்தில் கிழக்கு முதலாக ஆறு திக்குக்களில் ஓம் ஸ்ராம் த்ரிபுரபவாய நம:, ஓம் ஸ்ரீம் தீப்தபவாய நம:, ஓம் ஸ்ரூம் சரவணபவாய நம:, ஓம் ஸ்ரைம் சைலஜாபவாய நம:, ஓம் ஸ்ரௌம் பவஹரசிவாய நம:, ஓம் ஸ்ர: சிவஹரபவாய நம: என்று அருச்சித்து முன்போல் மற்றத் தேவர்களையும் அருச்சிக்கவேண்டும். இவ்வாறு ஆறுமுகமாயின் அதற்குக் கூறியபடியும் ஒருமுகமாயின் அதற்குக் கூறியபடியும் பூசித்து, வியஞ்சனங்களுடன் ஹவிஸ்ஸையும் தாம்பூலத்தையும் நிவேதனம் செய்து தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து, எல்லாவுப்சாரங்களையும் செய்ய வேண்டும்.

வெளியிலேனும் கிழக்குத்திக்கிலேனும் இலக்கணம் வாய்ந்த அறுகோண குண்டத்தைக்கற்பித்து முன்போல் ஸம்ஸ்காரங்களைச் செய்து அக்னிமுகத்தில் ஸ்கந்தரை அருச்சித்து, நெய்யினால் பதினாறுமுறை மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு ஆகுதி சமர்ப்பித்து, சருவால் ஷடங்க மந்திரங்களை உச்சரித்து ஹோமம்செய்து, மூலமந்திரம் பஞ்சப்பிரம மந்திரம் அங்கமந்திரங்களால் திரவியாகுதிசெய்து, வியாகிருதியை உச்சரித்துக்கொண்டு, பிராயச்சித்தாகுதி செய்து, அந்தர் பலி, பஹிர்பலிகளைச் சமர்ப்பித்து பரிதி பரிஸ்தரணங்களை நீக்கி, அக்னியினின்றும் ரக்ஷையைக் கிரஹித்து அதனைச் சுப்பிரமணியருக்கு இடவேண்டும்.

பின்னர் பலிசமர்ப்பித்து பரிஜனங்களுடன் புஷ்பலிங்கத்தைக் கொண்டு சுற்றிவரவேண்டும். பின்னர் துவாரம் முதல்

மயூரமீருக பலிசமர்ப்பித்து, அதற்கு வெளியில் உள்ள எட்டுத் திக்குகளிலும் யக்ஷர் முதலியவர்களுக்குப் பலி சமர்ப்பித்து, பிரதானபீடத்தில் ஓம் ஹாம் ஸ்கந்தகணபீடாய நம: என்று பலி சமர்ப்பித்து, அந்த அந்தக் காலத்திற்குத் தக்கபடி புஷ்ப லிங்கம் முதலிய லிங்கங்களை யதாஸ்தானத்தில் சேர்க்க வேண்டும்.

இவ்வாறே உத்ஸவேசுவரரை பலி சமர்ப்பித்தல் முதலாகப் பூசித்து, அவருக்கு எல்லா உபசாரங்களையும் செய்து, முன்போல் சுப்ரமணியருக்கு ஈசானதிக்கில் வீற்றிருக்கும் சண்டநாதரை, ஸ்கந்தருடைய நிர்மால்யங்களால் பூசை செய்து பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும்.

## கௌரீபூஜாவிதி

சதாசிவ சக்தியானது மனோன்மனி எனவும், மகேசுவர சக்தியானது கௌரீ எனவும், ருத்ர சக்தியானது பவாநீ எனவும், இவ்வாறு சக்தி மூன்று வகைப்படும். யோகசக்தி, போகசக்தி, வீரசக்தியெனவும் சக்தி மூன்று வகைப்படும். பீடமே யோகசக்தி. அர்த்தமண்டபத்திலுள்ளது போக சக்தி. ஆலயத்தின் வெளியிலுள்ளது வீரசக்தி. இவற்றை அவ்வந்த ஸ்தானங்களில் பூசிக்கவேண்டும்.

## பூசிக்கும் முறை

ஆசாரியர் அம்பிகையின் ஆலயஞ்சென்று, புண்யாஹ மண்டபத்தில் சத்தியினருகே முன்போல் உட்கார்ந்து அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்று தாளங்கள் செய்து, சாமான்யார்க்யம் கற்பித்துக் கொண்டு, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து, பிராணாயாமம் முதலியன செய்து, முறைப்படி சகளீகரணஞ்செய்து ஆசாரியர் தன்னிடத்தில் கௌரிகலாநியாசஞ் செய்யவேண்டும். நியாஸமுறை வருமாறு:—

ஓம் ஹோம் ஸ்ரீம் ஈசானஸ்ஸர்வவித்யாநாமீசுவரஸ்ஸர்வ பூதாநாம் ப்ரஹ்மாதிபர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம் தாராயைநம: என்று மூர்த்தாவிலும், ஓம் ஹேம் ஸ்ரீம் தத்புருஷாயவித்மஹே மகாதேவாய திமஹி. தந்நோ ருத்ர: ப்ரசோதயாத் வித்யாயைநம: என்று முகத்திலும், ஓம் ஹூம் ஸ்ரீம் அகோரேப்யோ மிருத்யவேநம:

என்று இருதயத்திலும், ஓம் ஹூம் ஸ்ரீம் அதகோரேப்யச்ரத் தாயைநம: என்று கழுத்திலும், ஓம்ஹூம் ஸ்ரீம் அகோரவிர ஜாயை நம: என்று இடது புயத்திலும், ஓம்ஹூம் ஸ்ரீம் கோர தரேப்யோ மேதாயை நம: என்று வலதுபுயத்திலும், ஓம் ஹூம் ஸ்ரீம் ஸர்வேப்யஸ்ஸர்வசர்வேப்யோ நமஸ்தே அஸ்து ஸ்வதாயை நம: என்று வயிற்றிலும், ஓம் ஹூம் ஸ்ரீம் ருத்ரரூபேப்யஸ்வஸ்த்யைநம: என்று நாபியிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் வாமதேவாய பாலிந்யை நம: என்று குஹ்யத் திலும், ஓம் ஹிம் ஸ்ரீம் ஜ்யேஷ்டாய ஜ்வாலின்யை நம: என்று இடது துடையிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் ச்ரேஷ்டாய திருஷ்ணுய நம: என்று வலது துடையிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் ருத்ராயத்ருத் யைநம: என்று இடது முழங்காலிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் காலாய க்ஷாமாயை நம. என்று வலது முழங்காலிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் கலவிகரணுய மத்யை நம: என்று இடது கணுக்காலிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் பலவிகரணுய ப்ரஜாயை நம. என்று வலது கணுக் காலிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் பலாய சிந்தாயை நம: என்று இடது மணிக்கட்டிலும், ஓம்ஹிம் ஸ்ரீம் பலப்ரமதநாய பூத்யை நம: என்று வலது மணிக்கட்டிலும், ஓம் ஹிம் ஸ்ரீம் ஸர்வபூத தமனுய க்ரியாயை நம: என்று இடது பாருசுவத்திலும், ஓம் ஹிம் ஸ்ரீம் மனேன்மனுய க்ஷாந்த்யை நம: என்று வலது பாரு சுவத்திலும், ஓம் ஹம் ஸ்ரீம் ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி சாந் தியை நம: என்று இடது காலிலும், ஓம் ஹம் ஸ்ரீம் ஸத்யோ ஜாதாய வைதாந்த்யைநம: என்று வலது காலிலும், ஓம் ஹம் ஸ்ரீம் பவேபவேத்யாயை நம: என்று இடது கையிலும், ஓம் ஹம் ஸ்ரீம் அனுதிபவே ஸூத்யை நம: என்று வலது கையி லும், ஓம் ஹம் ஸ்ரீம் பவஸ்வமாம் த்யுத்யை நம: என்று இடது ஸ்தனத்திலும், ஓம் ஹம் ஸ்ரீம் பவோத்பவாய ஸித்யைநம: என்று வலது ஸ்தனத்திலும், இவ்வாறு இருபத்தைந்து கௌரீ கலாநியாசங்களைச்செய்யவேண்டும்.

பின்னர், அந்தரியாகம் முதலியவற்றையும் தானசுத்தி, திரவ்யசுத்தி, அருக்யம், பாத்யம், ஆசமனம், சக்தி ஹஸ்த பாவனே, மந்திரசுத்தி, புண்யாஹம், பஞ்சகவ்யம், பஞ்சாமிரு தம் ஸ்நபனம் ஆகிய இவற்றையும் கற்பித்து, வாயிலில் விக் னேசுவரர் முதலியவர்களுக்குப் பூசை செய்து, துவாரத்தை அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷித்து, துவாரத்தின் மேல்பாகத் தில் உள்ள இடதுபாகம் வலதுபாகம் நடுப்பாகம் என்னும்

இவற்றில் விநாயகர், சரஸ்வதி, மகாலக்ஷ்மி ஆகிய இவர்களைப் பூசித்து, வலது பக்கத்தில் ஓம் ஸ்ரீம் பூம்யை நம:, ஓம்ஸ்ரீம் கங்காயை நம:, ஓம் ஸ்ரீம் யோகிந்யைநம: என்று பூசைசெய்து, இடதுபாகத்தில் ஓம் ஸ்ரீம் ககன்யை நம:, ஓம் ஸ்ரீம் யமுனையை நம:, ஓம் ஸ்ரீம் போகினியை நம: என்று பூசித்து, துவாரத்தின்கிழ் உள்ள சிலேயில் ஓம் ஸ்ரீம் புவங்கின்யை நம: என்றும் மேல் உள்ள சிலேயில் ஓம் ஸ்ரீம் பதங்கின்யை நம: என்றும், பூசைசெய்து, இருபக்கங்களிலும் நர்மதை, சிந்து, சரஸ்வதி, கோதாவரி இவர்களை அருச்சித்து, நடுவில் காவேரியை பூஜித்து, இடது பாருசுவத்தில் ஓம் யோகின்யை நம: என்று யோகினியை அருச்சித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு:

''குங்கும வருணங்களாயும், பிரகாசிக்கின்றனவாயும் இருக்கும் அங்கங்களை உடையவளாயும், கட்கம், கேடகம், திரிசூலம், டங்கம் ஆகிய ஆயுதங்களை உடையவளாயும், பத்மாஸனமாக அமர்ந்திருப்பவளாயும், மடங்கிய கால்களையுடையவளாயும், ஜடையினையும் இரண்டு கண்களையும் உடையவளாயும் இருக்கும் யோகினியை நமஸ்கரிக்கிறேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானித்து யோகினியைப் பூசித்து, வலது பக்கத்தில் ஓம் போகின்யை நம: என்று போகினியைப் பூசித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு:—

தனுஸ், தண்டம் என்னுமிவற்றையும், பாசம், அபயம் என்னும் இவற்றையுமுடையவளாயும், கருமைவர்ணமுடையவளாயும், உட்கார்ந்து மடக்கிய கால்களை உடையவளாயும், காதில் தளிரை உடையவளாயும், மகுடத்தையும் இரண்டு கண்களையும் சிரேஷ்டமான முகத்தையு முடையவளாயுமிருக்கும் போகினியைத் தியானிக்கிறேன் என்பதாம். இவ்வாறு தியானித்து, போகினியைப் பூசித்து, அம்பாளுக்குமுன் இருக்கும் விருஷப சக்தியை அருச்சிக்கவேண்டும். விருஷப சக்தித் தியானம் வருமாறு:—

கருமையான இரண்டு கண்களையும், கடி சூத்ரத்தையும், செம்மையான இரண்டு கொம்புகளையும், செம்மையான இரண்டு காதுகளையும், வெண்மை வருணத்தையும், சொர்ணக்குளம்புகளையும் உடைய விருஷபசக்தியைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து, எல்லோருக்கும் தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து மூன்றுவித விக்னங்களையும் விலக்கி, மணி யடித்துக்கொண்டு வலது காலை முன்னிட்டு உள்ளே சென்று, அர்த்த மண்டபத் தில் திரையை நீக்கி, கர்ப்பக்கிருகம் சென்று, நைருததிக்கு முதல் அக்னிதிக்கு ஈறாக, அவ்வந்த முன் அக்ஷரமான பீஜா க்ஷரங்களுடன், வாகீசுவரீ, க்ரியை, கீர்த்தி, இலக்ஷ்மி, ஸரஸ் வதி, மாலிநீ, சுமாலிநீ ஆகிய கர்ப்பாவரண சக்திகளை நமோந்தமாகப் பூசித்து, மீண்டும் மூலதேவியை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சங்கு ஜலத்தால் புரோ க்ஷித்து நிர்மால்யத்தை அருச்சித்து ஈசானதிக்கில் சண்டேசு வரியின் பொருட்டுச் சமர்ப்பித்து, கைகளைக் கழுவி ஆஸனத் தில் அனந்தாஸனம்முதல் பத்மாஸனம் முடிய கிழக்குத்திக்கு முதலாக அருச்சித்து, சுத்த ஜலத்தால் பிம்பத்தைச் சுத்தி செய்து சிரசில் ஒரு புஷ்பத்தைச் சமர்ப்பித்து, யோகாசன பூசைசெய்து காயத்ரியால் அருச்சித்து மாதிருகாநியாசம் பஞ்சவிம் சதிகலாநியாசங்களைச்செய்து தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

† வெண்மை வர்ணமுடையதாயும், நான்கு கைகள், மூன்று கண்கள், தாமரைப்புஷ்பம், வரம், அபயம், நீலோத் பலம் என்னும் இவற்றையுடையதாயும், அங்கங்களில் சொர்ண ஆபரணங்களை அணிந்திருப்பதாயும், உயர்ந்த கிரீ டத்தால் பிரகாசிக்கிறதாயுமுள்ள மனோன்மணியின் சொரு பம் தியானிக்கத்தக்கது என்பதாம்.

இவ்வாறு தியானித்து வித்யாதேகத்தையும் நேத்ரத் யங்களையும் பூசித்து, ஆவாஹனஞ்செய்து, ஸ்தாபனமுத்ரை முதலிய முத்ரைகளைச் சமர்ப்பித்து அபிஷேகஜலத்தின் மீது வாசனையுள்ள திரவியங்களை இட்டு கங்கை முதலிய ஒன்பது தீர்த்தங்களையும் அபிமந்திரித்து தைலக்காப்பு, மாக் காப்பு, நெல்லிக்காப்பு முதலிய திரவியங்களாலும் பஞ்ச கவ்யம், பஞ்சாமிருதம், ஸ்நபனம், சுத்தோதகம் என்னு மிவற்றாலும் அபிஷேகஞ்செய்து திருவொற்றாடை சாத்தி வஸ்திரம், சந்தனம், மாலை, ஆபரணம், கஸ்தூரி என்னும்

---

† இந்தச் சுலோகம் பூர்வகாரணம் கௌர்யர்ச்சனாவிதிப்படலத்தி லுள்ளது.

இவற்ருல் அலங்காரஞ்செய்து, பதுமாஸனத்தை அருச்சித்து, த்ரிகண்டமுத்திரை, யோனிமுத்திரை, மகாமுத்திரைகளைக் காண்பிக்கவேண்டும்.

முதலாவது ஆவரணத்தில் வாமாதி சக்திகளையும், நடுவில் மனேன்மணியையும் பூசிக்கவேண்டும். பூசை செய்யு முறை வருமாறு—கிழக்குத்திக்கில் ஓம் ஹரீம் வாமாயை நம:, அக்னிதிக்கில் ஓம் ஹ்ரீம் ஜேஷ்டாயை நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் ரௌத்ரியை நம: நிருதிதிக்கில் ஓம் ஹ்ரீம் காள்யை நம: மேற்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் கலவிகரண்யை நம:, வாயுதிக்கில் ஓம் ஹ்ரீம் பலவிகரண்யை நம:, வடக்குத் திக்கில் ஓம் ஹ்ரீம் பலப்ரமதின்யை நம: ஈசானதிக்கில் ஓம் ஹ்ரீம் ஸர்வபூத தமன்யை நம: என்றும், நடுவில் ஓம் ஹ்ரீம் மனேன்மன்யை நம: என்றும் அருச்சிக்கவேண்டும்.

பின்னர் இரண்டாமாவரணத்தில் கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளிலும் ப்ராஹ்மீ முதற்கொண்டு சண்டிகை ஈருகப் பூசிக்கவேண்டும். அவ்வாறே காரணுகமத்தில் கூறப்பட் டிருக்கின்றது. அது வருமாறு: –

கிழக்குத்திக்கில் ப்ராஹ்மியையும், அக்னிதிக்கில் மாஹேசுவரியையும் தெற்குத்திக்கில் கௌமாரியையும் நிருதி திக்கில், வைஷ்ணவியையும், மேற்குத்திக்கில் வாராஹியை யும், வாயுதிக்கில் இந்திராணியையும், வடக்குத்திக்கில் சாமுண்டியையும், ஈசானதிக்கில் துர்க்கையையும் பூசிக்க வேண்டும் என்பதாம்.

பின்னர் மூன்ருமாவரணத்தில் ஸ்ரீம் என்னும் பீஜாக்கரத் தால் சம்புடம் செய்யப்பட்ட ஓம் ஹம் என்னும் பீஜாக்கரங் களை முன்னிட்டு விருஷபர் முதற்கொண்டு சூரியன் ஈருக பூசிக்கவேண்டும். பூசிக்குமுறை வருமாறு:

கிழக்குத்திக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் விருஷாபாய நம:, அக்னிதிக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் கணபதயே நம:, தெற்குத் திக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் ஸ்கந்தாய நம: நிருதிதிக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் மகாசாஸ்த்ரே நம:, மேற்குத்திக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் மந்தாய தம: வாயுதிக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம் வீரபத்ராய நம: வடக்குத்திக்கில் ஸ்ரீம் ஓம் ஹம் ஸ்ரீம்

க்ஷேத்ரபாலாய நம:, ஈசானதிக்கில் ஸ்ரீம் ஓம் ஹ்ம் ஸ்ரீம் பாஸ்கராய நம:, என்று அருச்சிக்கவேண்டும்.

பின்னர் நான்காம் ஆவரணபூஜை செய்யவேண்டும். செய்யும் முறை வருமாறு :—

கிழக்குத்திக்கில் ஓம் ஸ்ரீம் சசிதேவ்யை நம:, அக்னிதிக்கில் ஓம் ஸ்ரீம் ஸ்வாஹாதேவ்யை நம:, தெற்குத்திக்கில் ஓம் ஸ்ரீம் காலகண்டீதேவ்யை நம:, நிருதிதிக்கில் ஓம் ஸ்ரீம் *ஜாதா தேவ்யை நம:, மேற்குத்திக்கில் ஓம் ஸ்ரீம் சுகேசீ தேவ்யை நம:, வாயுதிக்கில் ஓம் ஸ்ரீம் பத்ராதேவ்யை நம:, வடக்குத்திக்கில் ஓம் ஸ்ரீம் ஹர்ஷிணீ தேவ்யை நம:, ஈசான திக்கில் ஓம் ஸ்ரீம் ஜீவோந்மநீ தேவ்யை நம:, ஈசானத்திற்கு வலது பாகத்தில் ஓம் ஸ்ரீம் ஸாவித்திரியை நம:, நிருதிதிக்கிற்கு இடது பாகத்தில் ஓம் ஸ்ரீம் பூமி தேவ்யை நம: என்று பூசிக்கவேண்டும்.

பின்னர், ஐந்தாமாவரணத்தில்பத்து ஆயுதங்களின் சக்திகளைப் பூசிக்கவேண்டும். அது வருமாறு :—கிழக்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் வஜ்ராயவிலாஸின்யை நம:, அக்கினித்திக்கில் ஓம் ஹரீம் சக்தயே விஸ்புரிண்யை நம:, தெற்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் தண்டாய யாம்யை நம;, நிருதிதிக்கில் ஓம் ஹ்ரீம் கட்காய விமுக்யை நம:, மேற்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் பாசாய விமலாயை நம:, வாயுதிக்கில் ஓம் ஹ்ரீம் துவஜாய அநின்யை நம:, வடக்குத்திக்கில் ஓம் ஹ்ரீம் கதாயை ச்ரியை நம., ஈசானதிக்கில் ஓம் ஹ்ரீம் த்ரிசூலாய சூலின்யை நம:, இந்திர திக்கு ஈசான திக்குகட்கு நடுவில் ஓம் ஹ்ரீம் பத்மாய சுமாலின்யை நம:, நிருதிதிக்கு வருணதிக்குகட்கு நடுவில் ஓம் ஹ்ரீம் சக்ராய சுதிருச்யை நம: என்று பூசித்து, அம்பிகையை மூலமந்திரத்தால் பூசித்து, முன்போல் கலாபங்கியையும் இருதயத்தில் மாதிருகாக்ஷரங்களையும் அபிமந்திரித்து, வியஞ்சனங்களுடன் ஹவிஸ், தாம்பூலம், தூபம், தீபம், நீராஞ்சனம் முதலிய உபசாரங்களைச் சமர்ப்பிக்கவேண்டும்.

---

* ஜாதாதேவி, சுகேசிதேவி பத்ராதேவி, ஸ்ரீ ஷர்ஷிணிதேவி, ஜீவோன்மநீதேவி என்னும் இவற்றிற்குப் பதிலாக தாஹனீதேவி, போகினீதேவி, கோராதேவி, கம்பீரிணீதேவி, க்ஷர்ஷிணீதேவி என்னும் இவை இருக்கவேண்டுமென்பது சிவார்ச்சநசந்திரிகையை நோக்க அறியக்கிடக்கிறது

முன்னர்க் கூறப்பட்டுள்ள இடத்தில் ஒரு முழ அளவில் யோனி குண்டத்தையேனும் பத்ம குண்டத்தையேனும் த்ரிகோண குண்டத்தையேனும் இலக்கணப்படி செய்து கொண்டு, குண்ட ஸம்ஸ்காரம் முதற்கொண்டு பூர்ணுகுதி ஈருகச்செய்து, மூல மந்திரத்தை உச்சரித்துப் பதினுறுமுறை நெய்யினுல் ஆகுதிசெய்து, பதினுறுமுறை சருவினுல் ஷடங்க மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு ஹோமம் செய்து மூல மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு முன்போல் திரவியாகுதி யையுஞ்செய்து, பூர்ணுகுதியை ஈருகவுடைய சம்பாதாகுதி யும்செய்து, பலிசமர்ப்பித்து, பரிஸ்தரணம் முதலியவற்றை அக்கினியிற்போட்டு, ஈசுவரியினுடைய நெற்றியில் ரக்ஷை யிட்டு, நித்யோத்ஸவம் செய்யவேண்டும்.

## தேவி நித்யோத்சவ விதி

பின்னர், ஆசாரியர் முன்போல் யானேசுவரியை (உத்ஸவ அம்மனை) சிவிகையில் ஆரோகணித்து, அலங்காரஞ்செய்து, மூலமந்திரத்தால் அருச்சித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு:—

'ஒரு முகத்தையும் நான்கு கைகளையும் உடையவளாயும், வரம், அபயம், தாமரைப்புஷ்பம், நீலோத்பலம் என்னும் இவற்றைக் கைகளில் உடையவளாயும், கரண்டமகுடத்தை உடையவளாயும், சித்திரவஸ்திரம் அணிந்தவளாயும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளாயும், தெளிவான முகத்தையுடையவளாயும், இளஞ்சூரியனுக்குச் சமமான காந்தியை உடையவளாயும் இருக்கும் தேவியை நமஸ்காரம் செய்கிறேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானித்து மூலமத்திரத்தால் ஆவாஹனம் செய்து ஆவரணத்தில் எட்டுச் சக்திகளைப் பூசித்து, ஸமஸ்தமான வாத்யோபசாரம் பரிஜனங்களுடன் வாயிலுக்குச் சக்தியைக் கொண்டுவந்து துவாரத்தில் சக்திக்குப் பலிசமர்ப்பித்து, ஆவரணத்திலுள்ள முதலாவது விருஷபபீடம் முதற்கொண்டு எட்டுத்திக்குகளிலும் பலி சமர்ப்பிக்கவேண்டும்.

## பலிசமர்ப்பிக்கும்முறை வருமாறு

விருஷபபீடத்தின் கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் ஜிரும் பின்யை சுவாஹா, அக்கினி திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் தம்

பின்யை சுவாஹா, தெற்குத்திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் சாந்தி மோஹின்யை சுவாஹா, நிருதிதிக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் ஹேதின்யை சுவாஹா, மேற்குத்திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் ராகிண்யை சுவாஹா, வாயுதிக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் பத்ர காமின்யை சுவாஹா, வடக்குத்திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் துர்க் காயை சுவாஹா, ஈசான திக்கில் ஓம் ஹாம் ஸ்ரீம் சண்டேசு வர்யை சுவாஹா, என்று சொல்லிக்கொண்டு பலி சமர்ப் பித்து, வெளியில் வந்து பிரதானபீடத்தில் ஓம் ஹ்ரீம் ஸர்வ சக்திமயாய பீடாயநம: என்று கர்ணிகையின்மீது அருச் சித்து, தளங்களுக்கு மேல் கிழக்குத்திக்கு முதல் வடக்குத் திக்கு ஈருகவும், தெற்கு முகத்தில் தெற்குத்திக்கு முதற் கொண்டு கிழக்குத்திக்கு ஈருகவும், ஓம் ஹாம் ஸ்ரீம் ஆகாசமா திருப்யஸ்வதா, ஓம் ஹாம் ஸ்ரீம் லோகமாதிருப்யஸ்வதா, ஓம் ஹாம் ஸ்ரீம் பூதமாதிருப்யஸ்வதா, ஓம் ஹாம் ஸ்ரீம் தேவமா திருப்யஸ்வதா என்று பலி சமர்ப்பித்து, அதன்பின் கர்ணிகை யில் ஓம் ஹாம் ஸ்ரீம் அநுக்தமாதிருப்யஸ்வதா என்று பலி சமர்ப்பித்துப் பூசித்து பலிபீடசக்தியைத் தியானம்செய்ய வேண்டும். தியானம் வருமாறு:

ஜ்வாலைபோன்ற கேசத்தை உடையதாயும், உக்ரமான பற்களை உடையதாயும், நான்கு கைகளையுடையதாயும், ஸர்ப் பம் பாணம் வில் பாசம் என்னுமிவற்றைத் தரித்திருக்கிற தாயும், இரண்டு கைகள் இரண்டுகால்களை உடையதாயும், மிகவும் செம்மை நிறமுடையதாயும் பலிபீடசக்தியை தியா னிக்கவேண்டும்.

இவ்வாறு தியானித்து ஆவாஹனஞ்செய்து ஆவாஹன முத்திரை முதலிய முத்திரைகளையும், பத்மமுத்திரை அஸ்திர முத்திரை யோனிமுத்திரைகளையும் நடுவில் பஞ்சமுகிமுத்திரை யையும் சமர்ப்பித்து, தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து சுவாகாந்தமாகப் பலிசமர்ப்பித்து, மூலமந்திரத்தை உச்சரித் துக்கொண்டு நீரால் சுற்றி முன்போல் பீடசக்தியைப் பூசித்து ஆலயத்துட் சென்று தேவியை இருப்பிடத்திற் சேர்த்து நைவேத்யம் தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து எல்லா வுபசாரங்களையும் செய்யவேண்டும். பின்னர் தேவியின் சன் னிதியில் பரதசாஸ்திரத்திற் கூறியவாறு தாண்டவத்தைச் செய்வித்து, நிர்மால்யத்தை எடுத்துக்கொண்டுசண்டேசுவரி யின் ஆலயஞ்செல்லவேண்டும்.

சென்றதும் சண்டேசுவரியை மூலமந்திரத்தால் ஆவாஹனம் செய்து ஸ்தாபனம் முதலியவற்றுல் சாங்கமாகப் பூசித்து அம்பிகையின் நிர்மாலியமான மாலை சந்தனம் முதலியவற்றைச் சமர்ப்பித்து ஹவிஸை நிவேதனம் செய்து தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து உத்தரவுபெற்றுக்கொண்டு ஈசுவரியின் சன்னிதிக்குச்சென்று ஈசுவரிக்கு நமஸ்காரம் ஸ்தோத்ரம் பிரதக்ஷிணம் முதலியவற்றைச் செய்து சுளுகோதகம் சமர்ப்பித்து அஷ்டபுஷ்பத்தால் அருச்சித்து ஈசுவரியைப் பிரார்த்திக்க வேண்டும். பிரார்த்தனை வருமாறு :—

''ஓ மகேசுவரி! அறிந்தும் அறியாமலும் சாஸ்திரத்திற் கூறப்பட்ட எந்த விதிகள் என்னுல் செய்யப்படவில்லையோ அவையாவும் உன் கருணையால் பூர்த்தி ஆகவேண்டும்'' என்பதாம். இவ்வாறு பிரார்த்தித்துத் திரையிட்டு வெளியிற் செல்லல்வேண்டும்.

## கபிலபூஜை

பின்னர் இலக்கணம் வாய்ந்த கபிலையை மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு நமோந்தமாகப் பூசித்து, அபிஷேகத்திற்குரிய திரவியங்களால் அபிஷேகித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துத் துடைத்து கபிலையின் அங்கங்களுக்குரிய ஆபரணங்களால் சிரசுமுதற்கொண்டு பாதமீருக ஷடங்கமந்திரங்களை உச்சரித்துக்கொண்டு அலங்கரித்து, சமஸ்த வாத்ய கோஷங்களுடனும் கொடி, விசிறி, குடை, சாமரம், பனைஓலை, விசிறி ஆகிய இந்தவுபசாரங்களுடனும் தூபம் தீபம் வேத கோஷம் ஆகமகோஷம் கீதம் வாத்யம் நர்த்தனம் ஆகிய உபசாரங்களுடனும் பசுவை ஈசுவரனது சந்நிதியிற் கொண்டு வந்து, அதற்கு வலதுபக்கத்தில் அருச்சகர் வடக்கு முகமாக இருந்துகொண்டு பிராணுயாமம் சகளீகரணங்கள்செய்து அஸ்திரமந்திரத்தை உச்சரித்து சாமான்யார்க்கிய ஜலத்தால் புரோக்ஷித்து முகம் பிருஷ்டம் வயிறு இவற்றில் பிரமன் விஷ்ணு உருத்திரன் இவர்களின் சத்திகளைப் பூசித்து, மஸ்தகம் முதற்கொண்டு பாதமீருகப் பஞ்சப்பிரம மந்திரங்களாற் பூசித்து அருக்யம் சமர்ப்பித்து, பத்ரா, சுரபி, சுமுகி 'சுராக்ரஜா, தேனு, கபிலா என்னும் பெயர்களுடன் இருதயம் முதற்கொண்டு அஸ்திரமீருகவுள்ள மந்திரங்களைச்சேர்த்து நமோந்

தமாகப் பூசித்து, முன்னிருபாதங்களிலும் பின்னிருபாதங்களிலும் நான்கு வேதங்களை அருச்சித்துத் தியானிக்கவேண்டும். தியானம் வருமாறு:—

மாதிருகாசத்தியானது பசுரூபமாக இருக்கின்றது. கொம்புகளின் நுனியில் எல்லாத் தேவதைகளுமிருக்கின்றனர் முகத்தில் சந்திரனும் பிருஷ்டபாகத்தில் கங்கை சரஸ்வதி ஆகிய இவர்களும் பாதங்களில் தர்மதேவதைகளும் தோள் வயிறு என்னும் இவற்றில் அக்கினி சூரியன் என்னுமிவர்களும் வாலின் நுனியில் எல்லாத்திர்த்தங்களும் உரோமங்களின் அடியில் முனிவரும் இருக்கின்றனர். ஆகையால் ஓ தேனுவே! இவ்வாறு எல்லாத்தேவதைகளின் சொரூபமான உன்னை நமஸ்கரிக்கின்றேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானித்து ஆவாஹனம் செய்து ஆவாஹன முத்திரை முதலிய ஐந்து முத்திரைகளையும் சமர்ப்பித்து, தூபம் தீபம் அருக்கியங்களைச் சமர்ப்பித்து, கோமூல மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சந்தனம் மாலை முதலியவற்றைச் சாத்தி அருச்சித்து, ஓம் ஹாம் க்ஷூம் கபிலாயை நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து அன்னம் பழம் அப்பம் அறுகு அரிசி நெல்லு பானகம் முதலியன சமர்ப்பித்து, தூபம் தீபம் அருக்யம் ஆகிய உபசாரங்களைச் செய்து பிரார்த்தனை செய்துகொண்டு ஆலயத்திற்கு வலமாகத் தன் இருப்பிடம் செல்ல விட வேண்டும்.

பின்னர் ஆஸ்தான மண்டபத்தில் உட்கார்ந்துகொண்டு சரியான சமயங்களில் கிரியைகள் நடத்தாமை முதலிய தோஷங்கள் நீங்கும் பொருட்டு பிராயச்சித்தமாக மூலமந்திரத்தால் நூற்றெட்டு ஹோமஞ்செய்து இயன்றவாறு திரவியங்கொண்டு நித்தியதானம் செய்து எல்லோரும் தத்தம் கிருகத்திற்குச் செல்லல்வேண்டும்.

காலசந்தி பூஜை முடிந்தது.

———

## * உபசந்திபூஜை

பிறகு இரண்டாம் யாமத்தில் துவாரத்திலுள்ள கணபதி முதற்கொண்டு முன்போல் பூசித்து விசேஷமான அருச்சனை முதலியவற்றைச் செய்து, ஹவிஸ் தாம்பூலங்களை நிவேதித்து உபசாரங்கள்செய்து, போகசக்தியைப் பூசித்து, அந்தக் காலத்தில் அம்பாளுக்கும் சுவாமிக்கும் அலங்காரஞ்செய்து, சுவாமிக்கு நைவேத்தியம் சமர்ப்பித்தற்பொருட்டு ஆசாரியர் ஆபரணங்களுடனும் சமஸ்தமான வாத்யோபசாரங்களுடனும் பரிஜனங்களுடனும், பலவிதமான அன்னம் வியஞ்சனம் தாம்பூலம் ஆகிய இவைகளை வைத்திருக்கும் பாத்திரங்களைச் சித்திரவஸ்திரத்தால் மறைத்துக்கொண்டு மூலமந்திரத்தால் அபிமந்திரணஞ் செய்து திக்பந்தநம் அவகுண்டனங்களைச் செய்து, அந்தப் பாத்திரங்களைப் பரிசாரகரின் சிரசில் தாபித்து ஸ்வஸ்திமங்கள கோஷங்களுடன் வர்த்தநியினின்றும் நீரைப் பெருக்கிக்கொண்டு ஈசுவரனது சன்னிதானம் சென்று அவற்றை நைவேத்ய மண்டபத்தில் தாபித்து, மூல மந்திரத்தால் புஷ்பாஞ்சலி சொரிந்து விமலாசனத்தைப் பூசித்து ஈசுவரருக்கு அன்னம் பழம் பானகம் தாம்பூலம் முதலியவற்றை நிவேதனம் செய்து தூபம் தீபம் முதலியன சமர்ப்பித்து எல்லாவுபசாரங்களையும் செய்யவேண்டும். பின்னர் கணபதி முதலிய அனைவருக்கும் நிவேதனம் செய்து அக்கினி காரியமும் தாண்டவமுமின்றி மற்ற உபசாரங்களை முன்போல் செய்யவேண்டும்.

## உச்சிக்காலபூஜை

உத்தரகாரணாகமத்தில் தனுர்மாஸ பூஜாவிதிப்படலத்தில் உச்சிக்காலபூஜை செய்யும் விவரம் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு :—

உச்சிக்காலத்தில் ஸ்நபநம் பஞ்சகவ்யம் முதலியவைகளைச் சேகரித்து துவார பூஜைகளைச்செய்து, வாஸ்துபிரமாவைப்

---

* மூலப்பிரதியில் காலசந்தி பூஜைக்குப் பின் மாத்யாஹ்னிகபூஜா விதியும், இதற்குப்பின்னர் மூன்றும் யாமத்தில் உபஸந்தி பூஜாவிதியும் கூறப்பட்டிருக்கின்றன. ஆறு காலங்களை நிர்ணயிக்கும் வசனங்களையும் உலகானுபவத்தையும் கொண்டு இவ்வாறு தொடுக்கப்பட்டது.

பூஜித்து லிங்கசுத்திசெய்து, ஸ்திராஸன பூஜைசெய்து அபி ஷேகம்செய்து, சந்தனம் புஷ்பம் முதலியனசாத்தி *போகாங்க பூஜை செய்ய வேண்டும், பின்னர் நைவேத்தியம் முதலிய உப காரங்களைச்செய்ய வேண்டும். பின்னர் அவ்வாறே கௌரி தேவியையும் பூசித்துச் சண்டேசுவர பூஜையையும் செய்ய வேண்டும் என்பதாம்,

ஆகையால் ஆசாரியர் உச்சிக்கால பூசை செய்வதற்காக இரண்டு விதமான மாத்யாஹ்னிக காரியங்களை முடித்துக் கொண்டு ஸ்நபனமண்டபஞ் சென்று அங்கமர்ந்து சகளீகரணம் முதற்கொண்டு அந்தரியாகம் ஈருக அனைத்தையும் முன்போல் செய்து அர்க்யத்தைக் கற்பித்துக்கொண்டு, புண்யாஹம் செய்து, பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் நித்தியஸ்நபனம் விசேஷ ஸ்நபனம் ஓமத்துக்கு வேண்டியவை முதலியவற்றைச் சேக ரித்து, துவாரபூஜை செய்து மூன்றுவித விக்னங்களையும் நீக்கி உள்ளே சென்று. கர்ப்பாவரண பூஜை செய்து லிங்கசுத்தி, மந்திரசுத்தி ஆதாரசக்திமுதல் சிவாஸனம்முடியவுள்ள ஆஸன பூஜை என்னும் இவற்றைச் செய்து, ஆவாஹனம் செய்து அபிஷேகத்திற் குரிய திரவியங்களுடன் முறைப்படி அன்னுபி ஷேகம் முதலியவற்றையும்செய்து, ஸ்நபநத்தால் அபிஷேகம் செய்து அலங்கரித்து, காலத்திற்குரிய ஹவிஸ் தாம்பூலம் நைவேத்தியம் முதலிய உபசாரங்களைச் செய்து, போகசக்தி முதற்கொண்டு மகாசக்தி ஈருகவுள்ள சக்திகளைப் பூஜை செய்து,ஓமம் நித்தியோத்ஸவம் செய்து பலிசமர்ப்பித்துப் பாதுகாராதனம் செய்து அன்னலிங்கத்தைச் சுற்றுவித்து அஷ்ட புஷ்பத்தால் அர்ச்சித்து சுளுகோதகம் சமர்ப்பித்துச் சண்டருக்கு உபசாரம்செய்ய வேண்டும். உச்சிக்காலத்தில் பரிவார தேவர்களுக்குப்பூசை கிடையாது. பின்னர் நிர்மாலிய மண்டபஞ்சென்றுஅமர்ந்து அன்னம்முதலிய நிர்மாலியங்களைச் சுத்தமான பிராமணர் முதலாயினுர்க்கும் ஏனையோ ருக்கும் விநியோகம் செய்யவேண்டும்.

## போஜனவிதி

பின்னர், தன்னிருப்பிடம்சென்று கைகால்களைக் கழுவி, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து அங்கங்களைப் புரோக்ஷித்துக் கொண்டு, ஆசமனஞ்செய்து திருநீறுதரித்து சகளீகரணம்

* போகாங்க பூஜையாவது ஆவரணபூஜையாகும். ஆவரண பூஜை யின்றிச் செய்யப்படும் பூஜை லயாங்கபூஜையாகும்.

செய்து ஔபாஸனத்தின் முடிவில் ஆத்மார்த்த பூசைசெய்து அக்னிகாரியம் செய்யவேண்டும். செய்யும் முறை வருமாறு:—

குண்டத்திலேனும் ஸ்தண்டிலத்திலேனும் அக்னியைஸ்தாபித்து, மூலமந்திரத்தால் ஆவாஹனஞ்செய்து, சுருக்சுருவம் நெய் இவற்றிற்குச்சுத்தியைச் செய்து, மூலமந்திரம் பஞ்சப்பிரமமந்திரம் அங்கமந்திரங்களை உச்சரித்துக்கொண்டு நெய்யினுல் ஒரு ஆகுதிசெய்து அருச்சித்துப் பூர்ணுகுதிசெய்து அன்னத்தால் பிரமாங்கங்களுக்கு ஹோமம் செய்து, மீதியுள்ள அன்னத்தை மூன்று பாகமாகச் செய்து மூலமந்திரத்தால் அபிமந்திரணம் செய்து, முதற்பாகத்தை அக்னியில் சந்தர்ப்பணஞ் செய்து இரண்டாம் பாகத்தை இரண்டாகப் பிரித்து ஒரு பாகத்தால் இந்திரன் முதற்கொண்டு ஈசானர் முதலாயினுர்க்குப் பலிசமர்ப்பித்து பஹிர் பலியையும் சமர்ப்பித்து, மற்ருெரு பாகத்தால் தேவர் பிதிருக்கள் இவர்களுக்கும் பலி சமர்ப்பிக்கவேண்டும். சமர்ப்பிக்கும்முறை வருமாறு :—

குண்டத்திற்கு வலது பக்கத்தில் சதுர மண்டலத்தைச் செய்து, அம்மண்டலத்தில் முன்போல் ஐந்து தர்ப்பணங்கள் செய்து, முறைப்படி ஈசானதிக்கு, கிழக்குத்திக்கு, இவற்றின் நடு மேற்கு வடக்கு தெற்கு ஆகிய இடங்களில் தேவர்கள் முதல் பிதிருக்கள் ஈருகவுள்ளவர்க்குப் பலிசமர்ப்பித்து, அக்னி முதலாயினுரை உத்வாசனஞ்செய்து மீதியுள்ள அன்னத்தால் வாயஸம் முதலியவற்றிற்குப் பலிகொடுத்துப் பின்னர் பந்திக்குரிய பிராமணர்களுடன் போஜனம் செய்து கைகால் முகங்களைச் சுத்திசெய்து பிராணுயாமம் முதலியன செய்து பஸ்மந்தரித்து ஸகளீகரணம் செய்து சிவகதா சிரவணம் செய்ய வேண்டும்,

## ¶ பிரதோஷகாலபூஜா விதி

உத்தரகாரணத்திற் கூறியபடி பிரதோஷகாலத்தில் அடியிற்கண்டவாறு முதலாவது நடேசபூஜை செய்து பின்னர் மூலலிங்கம் மகேசுவரர் முதலியவர் கௌரீ இவர்கட்கு நைவேத்தியம் தூபதிபங்கள் சமர்ப்பித்து இவ்வாறு உபசாரங்களைச் செய்ய வேண்டும்.

---

¶ பூர்வகாரணம் அர்ச்சநாங்கவிதிப் படலம் 17, 18-வது சுலோகங்களில் உச்சிக்கால முதல்பதினைந்து நாழிகைவரையில் சாயங்காலம் எனவும், சூரியாஸ்தமனத்திற்குப் பின் ஏழரை நாழிகைவரை பிர

## நடராஜர் பூஜை

உச்சிக்காலத்திற்குப் பின்னர் பகல் நான்காம் யாமத்தில் ஆசாரியர் பரிஜனங்களுடன் நடராஜருடைய சன்னிதிக்குச் சென்று கிழக்கு முகமாக இருந்து அங்கசுத்தி அர்க்யம் பாத்தியம் ஆசமனம் என்னும் இவற்றைச் செய்துகொண்டு, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து'வாயிலைப்புரோக்ஷித்துத் துவாரபூஜை முதலியன செய்து, திரையை நீக்கி கர்ப்பக்கிருகத்திற்குச் சென்று கர்ப்பாவரணத்தைப் பூசித்து பிம்பத்தை அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷித்து ஆசனத்தைப் பூசிக்கவேண்டும். ஆசனத்தைப் பூசிக்குமுறை காமிக ஆகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு :—

''சகளபூஜை செய்யும்பொழுது ஆசனத்தைப் பூசிக்க வேண்டும். பாதாளம் முதற்கொண்டு கூர்மாஸனமீறாக மூலாதாரத்தை பாவிக்கவேண்டும், முதலாவது அனந்தாஸனத்தையும், இரண்டாவது சிம்மாசனத்தையும், மூன்ருவது யோகாசனத்தையும், நான்காவது பத்மாசனத்தையும், ஐந்தாவது விமலாசனத்தையும் இவ்வாறு ஐந்து ஆசனங்களையும் பூஜைசெய்ய வேண்டும். ஆவாஹனம் செய்யும்பொழுது பத்மாசனத்தையும், அபிஷேகம் செய்யும்பொழுது அநந்தாசனத்தையும், அருச்சனை காலத்தில் விமலாசனத்தையும், நைவேத்யஞ் சமர்ப்பிக்கும்பொழுது யோகாசனத்தையும், ஸ்தோத்திரம், கீதம், நிருத்தம் இவை நிகழுங்காலத்து சிம்மாசனத்தையும் பூசிக்கவேண்டும்'' என்பதாம்.

---

தோஷகாலமெனவும் கூறப்பட்டுள்ளன. உத்தரகாரணம் உஷக்கால பூஜாவிதிப்படலம் 40, 41-வது சுலோகங்களில் சாயங்கால பூஜைக்கு முன்னர் நடேசருக்குப் பூஜையும் மூலலிங்கத்திற்கும் பரிவாரத்திற்கும் அம்பிகைக்கும் நைவேத்திய தூப தீப உபசாரங்களும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு செய்யப்படும் பூசையின் காலப்பெயர் கூறப்படவில்லை. 40-வது பக்கம் டிப்பணியில் உள்ள ஆறுகால நிர்ணயத்தில் சாயங்காலத்திற்கு முன்னர் கூறப்பட்ட பிரதோஷகாலமே இதுவெனக்கொள்ளக்கிடக்கின்றது. சில தலங்களில் சாயங்காலத்திற்கு முன்னர் நடராஜாவுக்குப் பூஜை செய்யும் வழக்கமும் காணப்படுகிறது. ஆகையால் இங்கே கூறப்பட்ட பிரதோஷகால பூஜாவிதி உத்தரகாரணத்தை அனுஸரித்தது. பூர்வகாரணத்திற் கூறப்பட்ட பிரதோஷகாலபூஜை இரண்டாங்காலமென வழங்கி வருகின்றது.

இந்த முறைப்படி ஆவாஹனத்திற்காகப் பத்மாசனத்தை அருச்சித்து, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஆவாஹனம் செய்து, தண்டபங்கிக்கிரமமாக பஞ்சப்பிரம்ம மந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் நியாசஞ்செய்து, வர்ண நியாசம் கலாநியாசங்களையும் செய்து, பின்னர் ஸ்தாபனம் அமிருதிகரணம் ஈறான பஞ்சமுத்திரைகளையும் சமர்ப்பித்து, தூபம், தீபம், அருக்யங்கள் சமர்ப்பித்து, நடேசருடைய இடதுபக்கத்தில் சக்தி மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தேவிக்கு ஆவாஹனம் முதலியவற்றால் உபசாரம் செய்ய வேண்டும்.

பின்னர் நடராஜருடைய சன்னிதியில் பிரதிலிங்கபூசை செய்வதற்காக அபிஷேக பீடத்தைத்தாபித்து, அதன் மேல் சிம்மாசனத்தை அருச்சித்து. அதற்கு வலப்பக்கத்தில் பிரதி லிங்கசம்புடத்தைத் தாபித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து சம்புடத்தின் மூடியைத் திறந்து, வாயிலில் தூவாரபூஜை செய்து தூபம், தீபம், அருக்கியங்கள் சமர்ப்பித்து, லிங்கத்தையெடுத்து மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அபிஷேக பீடத்தில் வீற்றிருக்கச் செய்து, லிங்கத்திற்கு ஆஸனத்தைப் பூசித்து, ஆவாஹனம் செய்து, பஞ்சப் பிரமமந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் முண்டபங்கிக்ரமமாக நியாசஞ்செய்து, ஸ்தாபனம் முதலிய ஐந்து முத்திரைகளையும் காண்பித்து, இவ்வாறு எல்லாவுபசாரங்களையும் செய்து பின்னர், நடராஜரைச்சத்தியுடன் அநந்தாசனத்தால் பூசித்து, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அருக்யஜலத்தால் மூன்று முறை அபிஷேகம் செய்ததாகப் புரோக்ஷித்து, பின்னர் பிரதிலிங்கத்தை அபிஷேகஞ்செய்து திருவொற்றாடை சாத்தி, வஸ்திரம் சந்தனம் மாலை முதலியவற்றால் அலங்கரித்து, நடராஜ பிம்பத்தையும் திருவொற்றாடை சாத்துதல், வஸ்திரமணிதல் முதலியவற்றால் அலங்கரிக்க வேண்டும்.

பின்னர், நைவேத்யம் சமர்ப்பித்தற்பொருட்டு யோகாசனத்தைப்பூசித்து, இருவருக்கும் சுத்தான்னத்தை நிவேதனஞ்செய்து பிரதிலிங்கத்திற்கு விமலாசன பூசை செய்ய வேண்டும். பின்னர், நடராஜாவிற்குப் பத்மாசன பூசை செய்து, ஆசன்மூர்த்தி மூல மந்திரங்களால் நடேசுவரரை

அருச்சித்து, இருதயத்தில் காயத்ரியை அபிமந்திரணஞ் செய்து தியானஞ் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

ஒரு முகமும், நான்கு கைகளும், மூன்று கண்களும், இடது கைகளில் ஊமத்தம்பூவும் அக்கினியும் ஆகிய இவற்றை உடையவராயும், சந்திரனேயும் வளைந்து உயரே தூக்கிய ஒரு காலையுமுடையவராயும், வலது கைகளில் டமருகம் அபயம் என்னும் இவற்றையுடையவராயும், ஸ்வஸ்திகம் குண்டலம் கங்கை என்னுமிவற்றை யுடையவராயும், விரிந்த ஜடையையுடையவராயும், *அபஸ்மாரன்மேல் நிற்பவராயுமுள்ள நடராஜரை வணங்குகிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து அருச்சித்து அவருக்கு இடது பக்கத்தில் ஓம் ஹ்ரீம் சிவகாம்யம்பிகாஸனுய நம,, ஓம் ஹ்ரீம் சிவகாம்யம்பிகா மூர்த்தயே நம: என்று ஆஸனமூர்த்தி மந்திரங்களால் அம்பிகையைப் பூசித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

''நடராஜருடைய சக்தியாயும், இரண்டு கைகளை உடையவளாயும், ஒரு கையைத் தொங்கவிட்டிருப்பவளாயும் மற்ருெருகையில் நீலோத்பலத்தை வைத்திருப்பவளாயும், கருமை நிறமுடையவளாயும், இரண்டு கண்களையும் அழகான ஒரு முகத்தையும் உடையவளாயும், பருத்த ஸ்தனங்களை உடையவளாயும் பலவித ஆபரணங்களை அணிந்திருப்பவளாயும், சொர்ணத்தாலும் இரத்னத்தாலும் செய்யப்பட்ட் கிரிடத்தைத் தரித்திருப்பவளாயும், கேசபாசத்தை உடையவளாயும், தாண்டவமூர்த்தியுடன் கூடியிருப்பவளாயும், பத்மத்தில் இருப்பவளாயும் உள்ள கௌரியைத் தியானிக்கிறேன்'' என்பதாம்.

இவ்வாறு இருவரையும் தியானித்து, மூல மந்திரத்தால் ஆவாஹனம்செய்து. ஐந்து பீஜாக்கரங்களுடன், சிருஷ்டி முதலிய பஞ்ச கிருத்யங்களையுடைய பஞ்சாக்ஷரத்தை நடேசருடைய அவ்வந்த ஸ்தானங்களில் நியாசஞ்செய்து, பஞ்சப்ரமஷடங்க மந்திரங்களால் நடேசரை அருச்சித்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து கிருஷ்ண கந்தத்தை (சாந்தை) இட்டு சக்தியின் நெற்றியிலும் தரித்து, பிரதிலிங்கத்திற்குப் பஞ்சாவரண ஸ்தானங்களில் பஞ்சாவரண தேவதைகளைப்

---

*அபஸ்மாரன் முயலகன்.

பூசித்து, நைவேத்தியம் தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, நடராஜ பிம்பத்தினிடத்து லிங்கமூர்த்தியைக் காண்பித்து பேடகத்தில் லிங்கத்தைத் தாபித்து, இருப்பிடத்தில் வைக்கவேண்டும்.

பின்னர், நடராஜமூர்த்திக்குக் கிழக்கு முகம் முதற் கொண்டு பஞ்சாவாரண முறையாகப் பஞ்சாவரணத்தை அருச்சித்து, பிரணவத்தை உச்சரித்துப் பிரபையை அருச்சித்து, ஜ்வாலையில் அக்கரங்களை அருச்சித்து, தேவியையும் கௌரியைப்போல் பூசைசெய்து, நைவேத்தியம் சமர்ப்பிக்கும்பொருட்டு முன்போல் யோகாசனத்தைப் பூசித்து, அப்பம் முதலியவற்றுடன் நைவேத்தியத்தையும் தூபம் தீபம் அருக்யங்களையுஞ் சமர்ப்பிக்கவேண்டும்.

பின்னர், பரதசாஸ்திரத்தில் கூறியவாறு தாளம் மத்தளம் வாத்தியம் என்னும் இவற்ருல் நடேசரைச் சந்தோஷிக்கச்செய்து, தாளத்தின் முடிவில் நடராஜருக்கும் அம்பிகைக்கும் தனித்தனி நைவேத்திய உபசாரத்தைச் சமர்ப்பித்து, மீண்டும் சிம்மாசனத்தைப் பூசித்து, கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளில் பஞ்சப்பிரம மந்திரம் அங்கமந்திரங்களுடன் அஷ்டபைரவரை அருச்சித்து, நடராஜருடைய இருபக்கங்களில் பதஞ்சலி வியாக்ரபாதர்களைப் பூசித்துக் காலில் அபஸ்மாரன் என்னும் அசுரனைப் பூசித்து, ஜடையில் கங்கை சந்திரன் என்னும் இவர்களைப் பூசித்து, உக்ரம் சாந்தியாகும் நிமித்தம் அலங்கார பாத்திரத்தில் கொழுக்கட்டை வடை என்னும் இவற்றையும் தாம்பூலங்களையும் வைத்துக்கொண்டு நைவேத்தியம் தூபம் தீபம் அர்க்யம் ஆகிய உபசாரங்களைச் செய்யவேண்டும்.

பின்னர், மூலலிங்கம் மகேசுவரர் முதலிய மூர்த்தங்கள் அம்பாள் ஆகிய இவர்களுக்கு நைவேத்தியம் தூபம் தீபம் முதலியன சமர்ப்பித்து எல்லா வுபசாரங்களையும் செய்ய வேண்டும்.

## சாயங்கால பூஜாவிதி

### மூலலிங்க பூஜை

உத்தரகாரணுகமத்தில் தநுர்மாஸ பூஜாவிதிப் படலத்தில் சாயரக்ஷா பூஜாவிதி கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு :—

தேஹசுத்திசெய்து ஸ்நபனம் முதலின சேகரித்து துவார பூஜை செய்து, மூல லிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்து, நைவேத்தியம் சமர்ப்பித்து, சமஸ்தராஜோபசாரங்களையுஞ் செய்யவேண்டும். மகேசுவராதி மூர்த்திகளுக்கும் பரிவாரங் கட்கும் அவ்வாறே பூசைசெய்து, நைவேத்தியஞ் சமர்ப் பித்து, அம்பாளுக்கும் அபிஷேக நைவேத்யம் தூப தீபோப சாரங்களைச்செய்து, சண்டரைப் பூசித்து, பைரவரையும் பூசித்து: நைவேத்ய தூப தீபோபசாரங்களைச் செய்யவேண் டும். பின்னர் அக்னிகாரியம்செய்து நித்யோத்ஸவத்தையும் செய்யவேண்டும் என்பதாம்.

ஆகையால் பிரதோஷ்கால பூசைக்குப்பின்னர் லிங்கத் தின் சன்னிதியை அடைந்து சகளீகரணம் புண்யாஹம் பஞ்ச கவ்யம் பஞ்சாமிருதம் ஸ்நபனம் அருக்யம் பாத்யம் ஆசம னீயம் ஆகிய இவற்றை முன்போல் சேகரித்துக்கொண்டு, துவார பூஜை முதலியவற்றை முன்போல்செய்து, பஞ்சா ஸன முறையாகவும் பஞ்சாவரண முறையாகவும் மூலலிங்கத் தைப் பூசித்து, அபிஷேகம் முதலியனசெய்து, நைவேத்தியம் தூபம் * தீபம் ஆகிய வுபசாரங்களைச் செய்து அதன்பின்னர்,

---

* காரணாகமத்தில் (1) ஆவாஹனம் (2) ஸ்தாபனம் (3) பாத்யம் (4) ஆசமனம் (5) அர்க்யம் (6) அபிஷேகம் (7) வஸ்திரம், கந்தம் சாத்துதல் (8) புஷ்பஞ்சாத்துதல் (9) தூபதீபம் சமர்ப்பித்தல் (10) நைவேத்தியம் (11) பலி (12) ஹோமம் (13) நித்தியோத்ஸவம் (14) வாத்யம் முதலியன (15) ந்ர்த்தனம் (16) உத்வாஸனம் என்று கூறப் பட்ட பதினாறு உபசாரங்களுள் அடங்கிய தீபோசாரம் ஒன்று மாத்தி ரம் பதினாறுவகை ஆகும் விதமும் அவற்றை உபயோகிக்கும் விதமும் வருமாறு:—

முதலாவது புஷ்பதீபம்; இரண்டாவது புருஷமிருகதீபம்; மூன்றா வது நாகதீபம்; நான்காவது கஜதீபம்; ஐந்தாவது வியாக்ரதீபம்; ஆறா வது ஹம்ஸதீபம்; ஏழாவது குதிரைதீபம்; எட்டாவது ஸிம்மதீபம்; ஒன்பதாவது சூலதீபம்; பத்தாவது துவஜதீபம்; பதினொன்றாவது விரு ஷபதீபம்; பன்னிரண்டாவது பிரமரதீபம்; பதின்மூன்றாவது குக்குட தீபம்; பதின்நான்காவது கூர்மதீபம்; பதினைந்தாவது ஸ்ருக்தீபம்; பதி னாறாவது சக்தி தீபம். இவ்வாறு பதினாறு தீபோபசாரங்களைச் செய்து, பிறகு பஞ்சப்ரஹ்ம பூர்ணகும்பபூஜை, பஸ்மம், தர்ப்பணம், சத்ரம், சாமரம், பனைஓலை விசிறி, விசிறி முதலிய உபசாரங்களைச் செய்ய வேண்டும். பஞ்சப்ரஹ்மபூர்ண கும்பபூஜை செய்யும் விபரம் இதே

டிப்பணியில் பின்னர்க் கூறப்படும். உலகானுபவத்தில் உள்ள ஷோட சோபசாரம் வருமாறு:—

முதலாவது தூபோபசாரமும் தீபோபசாரமும்;
இரண்டாவது புஷ்பதீபம்; மூன்றுவது நாகதீபம்;
நான்காவது விருஷபதீபம்; ஐந்தாவது மேருதீபம்;
ஆறுவது புருஷமிருகதீபம்; ஏழாவது கும்பதீபம்;
எட்டாவது ஆராத்ரிகம்; ஒன்பதாவது நக்ஷத்திரதீபம்;
பத்தாவது கருப்பூரதீபம்; பதினொன்றுவது பஸ்மோபசாரம்;
பன்னிரண்டாவது தர்ப்பணம் (கண்ணடி)
பதின்மூன்றுவது சத்ரோபசாரம் (குடை)
பதினுன்காவது துவஜம்; (கொடி) பதினைந்தாவது சாமரம்;
பதினாறுவது விசிறி என்றவாறும்.

உபசார சமயத்தில் உபயோகிக்கக்கூடிய மந்திரங்கள் வருமாறு:—

நைவேத்யோபசார சமயத்தில் மதுவாதா என்னும் பதத்தை ஆரம்பமாகவுள்ள அந்நஸூக்தஞ் சபிக்கவேண்டும்.

தூபோபசார சமயத்தில் ஓம் ஹாம் சங்கராய நம: என்று உச்ச ரித்துக்கொண்டு தூரஸி என்னும் மந்திரத்தையும் ஜபித்து தூபமாக் ராபயாமி என்று சொல்லிக்கொண்டு தூபத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

தீபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் சூர்யாய நம: என்று உச்சரித்து, 'உத்தீப்யஸ்வஜாதவே' என்னும் மந்திரத்தையும் ஜபித்து, தீபம் ஸந்தர்சயாமி என்று சொல்லிக்கொண்டு தீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

புஷ்பதீபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் ப்ரஹ்மணே நம: என்று உச்சரித்து, "ஸப்ரதஸபாம்மேகோபாய" என்னும் மந்திரத்தையும் உச்சரித்து, புஷ்பதீபம் என்னும் அலங்கார தீபத் தால் உபசரிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு புஷ்பதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்

புருஷமிருக தீபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் ஸரஸ் வத்யை நம: என்று சொல்லிக்கொண்டு, "புருஷமிருகச்சந்திரமஸ" என்னும் மந்திரத்தையும் ஜபித்து, புருஷமிருக தீபத்தைச் சமர்ப் பிக்க வேண்டும்.

நாகதீபோபசாரஞ் செய்யும் சமயத்தில் ஓம் ஹாம் நாகராஜாய நம: என்று உச்சரித்து, நமோஸ்து ஸர்பேப்ய: என்னும் மந்திரத்தை யும் உச்சரித்துக்கொண்டு நாகதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

கஜதீபோசாரஞ் செய்யும் சமயத்தில் ஓம் ஹாம் விக்னேசுவராய நம: என்று உச்சரித்து, கணநாம்த்வா என்னும் மந்திரத்தையும் ஜபித்துக்கொண்டு கஜதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

வியாக்ரதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் பரா சக்த்யை நம ; என்று உச்சரித்து, ஸிம்ஹேவ்யாக்ர என்னும் மந்திரத் தையும் ஜபித்து, வியாக்ரதீபத்தைச் சமர்ப்பிக்கவெண்டும்.

ஹம்ஸதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் ப்ரஹ் மணே நம : என்று உச்சரித்து, ஹம்ஸச்சுசிஷத் என்னும் மந்திரத்தை யும் உச்சரித்துக்கொண்டு, ஹம்ஸதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

குதிரை திபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் சோமாய நம: என்று உச்சரித்து, ஆக்ரம்யவாஜிந்ட்ரதிவீ என்னும் மந்திரத்தை யும் உச்சரித்துக்கொண்டு, குதிரை தீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

ஸிம்மதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் துர்க்காயை நம: என்று உச்சரித்து, யாதேவீசுபகாசுபத்நீ என்னும் மந்திரத்தை யும் ஜபித்து, ஸிம்மதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

சூலதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் த்ரிமூர்த்தயே நம : என்று உச்சரித்து, அபிஸமேதியத் ப்ரதிவ்யாகும் ஹ்ருதயசூலம் என்னும் மந்திரத்தையும் ஜபித்து, சூலதீபத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

துவஜதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் வாயவே நம: என்று உச்சரித்து, கேதும் கிருண்வந்நகேதவே என்னும் மந்தி ரத்தையும் ஜபித்து, துவஜதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

விருஷபதிபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் விருஷ பாயநம ; என்று உச்சரித்து, யஸ்ஸ¬சிருங்கஸ்ஸ¬விருஷப : என்னும் மந்திரத்தையும் ஜபித்து, விருஷபதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

பிரமரதிபோபசாரஞ் செய்யும்பொழுது ஓம் ஹாம் தேவ்யை நம. என்று உச்சரித்து, தேவீம் வாசமஜனயந்ததேவா : என்னும் மந்திரத் தையும் ஜபித்து, பிரமர தீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

குக்குட திபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் ஸ்கந் தாயநம : என்று உச்சரித்து, நிருகிருஷ்வைரஸமாயுதை என்னும் மந்தி ரத்தையும் ஜபித்து குக்குட தீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

கூர்மதிபோபசாரஞ் செய்யுஞ்சமயத்தில் ஓம் ஹாம் மஹா விஷ்ணவே நம : என்று உச்சரித்து, இதம் விஷ்ணுர் விசக்ரமே என் னும் மந்திரத்தையும் ஜபித்து, கூர்மதீபத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்

ஸ்ருக்திபோபசாரஞ் செய்யுஞ் சமயத்தில் ஓம் ஹாம் வஹ்நயே நம : என்று உச்சரித்து அக்னஆயாஹிவீதயே என்னும் மந்திரத்தை யும் ஜபித்து ஸ்ருக்தீபத்தைச் சமர்பிக்கவேண்டும்.

சத்திதீபத்தைச் சமர்ப்பிக்கும்பொழுது ஓம் ஹாம் சத்தயே நம: என்று உச்சரித்து, கௌரீமிமாய என்னும் மந்திரத்தையும் உச்சரிக்க வேண்டும்.

## பஞ்சாராத்ரிக பூர்ணகும்ப பூஜை

ஆராத்ரிகங்கள் பூர்ணகும்பம் இவற்றை நிரீக்ஷணம் முதலிய நான்கு ஸம்ஸ்காரங்களால் சுத்திசெய்து, பூர்ணகும்பத்தில் ஓம் ஹாம் ஆத்மதத்வாய நம : ஆத்மதத்வாதிபதயே ப்ரஹ்மணே நம :, ஓம் ஹாம் வித்யாதத்வாய நம வித்யாதத்வாதிபதயே விஷ்ணவே நம :, ஓம் ஹாம் சிவதத்வாய நம : சிவ தத்வாதிபதயே ருத்ராய நம : என்று உச்சரித்து, கும்பத்தைப் பூசித்து, ஈசானதிக்கிலுள்ள ஆராத்ரிகத்தில் ஓம் ஹௌம் சாந்தியதீதகலாயை நம: ; கிழக்குத்திக்கிலுள்ள ஆராத்ரிகத்தில் ஓம் ஹாம் சாந்திகலாயை நம:, தெற்குத்திக்கிலுள்ள ஆராத்ரிகத்தில் ஓம் ஹாம் வித்யாகலாயை நம:, வடக்குத்திக்கிலுள்ள ஆராத்ரிகத்தில் ஓம் ஹாம் ப்ரதிஷ்டாகலாயை நம:, மேற்குத்திக்கிலுள்ள ஆராத்ரிகத்தில் ஓம் ஹாம் நிவிருத்திகலாயை நம : என்று அருச்சித்து பஞ்சப்ரஹ்ம மந்திரங்களால் பூசித்து, திக்பந்தனம் அவகுண்டனங்களைச்செய்து, தேனுமுத்திரை பத்மமுத்திரை லிங்கமுத்திரை அஸ்திரமுத்திரை மஹாமுத்திரைகளைச் சமர்ப்பித்து, ஆராத்திரிகங்கட்குத் தூபதீபங்கள் சமர்ப்பித்து, ஹிரண்யபாத்ரம்மதோ : பூர்ணம்ததாதி என்னும் மந்திரத்தை ஜபித்துக்கொண்டு பூர்ணகும்பதீபத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

சத்யோஜாதமந்திரத்தை உச்சரித்து, மேற்குத்திக்கிலுள்ள ஐந்து முகமுடைய ஆராத்ரிகத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு வடக்குத்திக்கிலுள்ள நான்முக ஆராத்ரிகத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

அகோரேப்யோ த கோரேப்யோ என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு தெற்குத்திக்கிலுள்ள மூன்றுமுகமுடைய ஆராத்ரிகத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

தத்புருஷாயவித்மஹே என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கிழக்குத்திக்கிலுள்ள இரண்டுமுகமுடைய ஆராத்ரிகத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

ஈசானஸ்ஸர்வவித்யாநாம் என்னும் மந்திரத்தை உச்சரித்து ஈசான திக்கிலுள்ள ஒரு முகமுடைய ஆராத்ரிகத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

பின்னர், அக்னிர்ந : பாதுசிருத்திகா: என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு நக்ஷத்திரதீபஞ் சமர்ப்பிக்கவேண்டும்.

சோமோ வா ஏதஸ்ய ராஜ்யமாதத்தே என்னும் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கருப்பூரதீபஞ் சமர்ப்பிக்கவேண்டும்.

பிருஹத்ஸாமக்ஷத்ரபிருத் என்னும் மந்திரத்தை யுச்சரித்து பஸ்மத்தால் ஆகிய ரக்ஷையைச் சாத்தவேண்டும்.

சந்திரமாமநஸோஜாத: என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு, கண்ணுடியைச் சமர்ப்பிக்கவேண்டும்.

அக்னிமீளே என்னும் மந்திரத்தையேனும் நூரமஸ்மச்சத்ரவோ யந்துபிதா: என்னும் மந்திரத்தையேனும் உச்சரித்துச் சத்ரத்தைச் (குடையை) சமர்ப்பிக்கவேண்டும்.

ராஜாதிராஜாயப்ரஸஹ்யஸாஹிநே என்னும் மந்திரத்தை ஜபித்துக்கொண்டு சாமரத்தை வீசிச் சமர்ப்பிக்கவேண்டும்.

மாதரிச்வனே நம: என்னும் மந்திரத்தால் பனைஒலை விசிறியை அருச்சித்து சந்நோதேவீரபிஷ்டயே என்னும் மந்திரத்தால் வீச வேண்டும்.

அக்நஆயாஹிவீதயே என்னும் மந்திரத்தால் விஜயநத்தை (விசிறியை) வீசிச் சமர்ப்பிக்கவேண்டும்.

பிறகு கற்பூரதீபம் சமர்ப்பித்து, அர்ச்சனை செய்து, யோபாம் புஷ்பம்வேத என்னும் மந்திரத்தால் மந்திரபுஷ்பம் சமர்ப்பிக்க வேண்டும். பிறகு, நான்கு வேதங்கள் சூத்ரங்கள் புராணஸ் தோத்திரங்கள் பக்தஸ்தோத்திரம் ஆசிர்வாதம் அறிவை விளக்கும் கீதம் வாத்தியம் சங்கு தாளம் மிருதங்கம் வீணை வேணுகானம் நர்த்தனம் ஆகியவற்றை விக்ஞாபனஞ்செய்து கற்பூர ஆராத்ரிகத்தைச் செய்ய வேண்டும்.

பிறகு ஓம் ஹாம் ஆத்மதத்வாய நம:, ஓம் ஹாம் வித்யாதத்வாய நம:, ஓம் ஹாம் சிவதத்வாய நம: என்று அருச்சித்து பவித்திரம் சமர்ப்பித்தற்பொருட்டு ஒரு புஷ்பத்தை ஈசுவரருக்குச் சமர்ப்பிக்கவேண்டும். பிறகு அர்ச்சனை முதலிய உபசாரங்கள் செய்து பூசைக்கு ஸாத்குண்யம் உண்டாகும் நிமித்தமாக இயன்றவாறு பஞ்சாக்ஷரஞ் சபித்து, குஹ்யாதிகுஹ்ய கோப்தாத்வம் கிரஹாணஸ் மத்கிருதம் ஜபம்,ஸித்திர்பவதுமே தேவத்வத்ப்ரசாதாத்த்வயிஸ்திதே யத்கிஞ்சித்கர்மஹே தேவஸதாசுகிருத துஷ்கிருதம் தந்மேசிவபதஸ் தஸ்யபுங்க்ஷ்வக்ஷபய சங்கர சிவோதாதாசிவோபோக்தாசி வஸ்ஸர்வமிதம் ஜகத், சிவோயஜதி ஸர்வத்ரயச்சிவஸ்ஸோஹமேவது. (இதன் பொருள்களைச் சிவார்ச்சன சந்திரிகையில் காண்க.) என்னும் இந்த மந்திர சுலோகங்களை ஜபித்துக்கொண்டு சிவனுக்குப் பூஜையைச் சமர்ப்பணஞ் செய்யவேண்டும்.

உத்தரகாரணுகமத்தில் மகாபிஷேக விதிப்படலத்தில்—" சங்கு மத்தளம் வேணுகானம் இவற்றை விக்ஞாபனஞ் செய்தபின் வேப்பிலை பருத்திவிரை இவற்றுடன் பஸ்மத்தால் ரக்ஷைசாத்தி, தர்ப்பணம்

சோமாஸ்கந்தரல்லாத ஏனைய தேவதைகட்கு முறைப்படி அபிஷேகஞ்செய்து, அருச்சித்து, நைவேத்யம் தூபம் தீபம் முதலிய உபசாரங்களைச்செய்து, சாயங்காலத்திற்கு முன்னரேனும் பின்னரேனும் சோமாஸ்கந்தரை அருச்சிக்கவேண்டும்.

## சோமாஸ்கந்த பூஜை

பிறகு சோமாஸ்கந்தருடைய ஆலயஞ்சென்று, வடக்கு முகமாக அமர்ந்து, ஆத்மசுத்திமுதல் பாத்யம் ஆசமனீய மீறாக எல்லாவற்றையுஞ் செய்துகொண்டு, பிரதிலிங்கத்தின் அபிஷேகத்திற்காக பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் ஸ்நபனம் என்னும் இவற்றைச் சேகரித்துக்கொண்டு, பூஜாதிரவியம் ஹோமத்ரவியங்களையும் சேகரித்துக்கொண்டு, துவாரபூஜை செய்து உள்ளே சென்று, தேஹளியைப் (நடையின் மேல் கீழ் களை) பூசித்து, திசையை நீக்கி, கர்ப்பக்கிருஹத்தில் கர்ப்பாவரண பூஜைசெய்து; அருக்யஜலத்தால் சுவாமி ஸ்கந்தர் அம்பிகையாகிய மூன்று பிம்பங்களையும் புரோக்ஷித்து, பஞ்சாஸன பூஜைசெய்து, நிர்மால்யத்தை நீக்கி, பூசித்தற்பொருட்டுப் பத்மாஸனத்தைப் பூசித்து, மூன்று பிம்பங்களுக்கும் அவ்வந்த மூல மந்திரங்களால் ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து, முன்போல் பிரதிலிங்கத்திற்கு அபிஷேகம் முதற்கொண்டு அருச்சனை ஈறாகவுள்ள பூஜையைச்செய்து பூஜையின் முடிவில் பிரதிலிங்கத்தை பிம்பத்தினிடத்துக் காண்பித்து

---

(கண்ணாடி) சத்ரம் ஆகிய உபசாரங்களைச்செய்து, வேதகோஷத்துடன் மந்திர புஷ்பஞ் சமர்ப்பித்து, மூலமந்திரத்தால் அருச்சித்து, பரமேசுவரரைப் பிரார்த்திக்கவேண்டும். பிறகு பக்தஸ்தோத்திரத்தைப்படித்து ஆசீர்வாதம் கூறவேண்டும்" என்று கூறப்பட்டிருத்தலால் பக்தஸ்தோத்திரத்திற்குப் பின்னர் ஆசீர்வாதம் என்பது விளங்குகின்றது.

ஈசுவரரைத் தரிசிக்கும் விதியாவது—ஆதி சைவர் கர்ப்பக்கிரஹத்திலும், சிவதீக்ஷைபெற்ற பிராஹ்மணர் அந்தராளத்திலும், வேதமோதிய பிராஹ்மணர் அர்த்த மண்டபத்திலும், தபஸ்வி ஸந்யாஸி ஆகிய இவர்கள் முகமண்டபத்திலும், அரசர் வைசியர் ஆகிய இவர்கள் துவார மண்டபத்திலும், தீக்ஷைகளைப்பெற்ற நைட்டிக சூத்திரர் வெளியிலுள்ள மண்டபத்திலும், சமயதீக்ஷைபெற்ற சூத்ரர் நிருத்த மண்டபத்திலும் நின்று சுவாமி தரிசனஞ் செய்யவேண்டும். இது அச்சிடப்பட்ட சுப்ரபேதாகமத்தில் தனியாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

ஸம்யோஜனஞ்செய்து, பிரதிலிங்கத்தை இருப்பிடத்தில் வைக்கவேண்டும்.

மீண்டும் மூவருக்கும் அபிஷேகஞ் செய்தற்பொருட்டு அநந்தாஸனத்தைப் பூசித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து அர்க்யஜலத்தால் புரோக்ஷித்து, பழைய ஆடையை நீக்கி, வேறு வஸ்திரங்கொண்டு திருவொற்றுடை சாத்தி, வஸ்திரம் ஆபரணம் சந்தனம் புஷ்பம் மாலை முதலியவற்றால் அலங்கரித்து. விமலாஸனத்தைப் பூசித்து, மூன்று பிம்பங்களையும் ஆஸனமந்திரம் மூர்த்திமந்திரம் மூலமந்திரம் ஆகிய இவற்றால் அருச்சித்து, மூன்று பிம்பங்களின் இருதயத்திலும் காயத்ரியை அபிமந்திரித்துத் தியானஞ்செய்ய வேண்டும். தியானம் வருமாறு:—

வலதுகாலைத் தொங்கவிட்டுக்கொண்டும் இடதுகாலைப் படுக்கவைத்துக்கொண்டும் இருப்பவராயும், கிருஷ்ணவர்ணமான மானையும் அபயத்தையும் டங்கத்தையும் வரத்தையும் கைகளில் உடையவராயும், இடதுபக்கத்தில் வளைகளைக் கையில் அணிந்தவளாயும் இடதுகாலைத் தொங்கவிட்டு வலதுகாலைப் படுக்கவைத்திருப்பவளாயும் இருக்கும் தேவியுடன் கூடியவராயும், நடுவில் இரண்டு கரங்களிலும் தாமரைப்பூக்களை உடைய சுப்ரமணியருடன் கூடியவராயுமிருக்கும் சோமாஸ்கந்தரைத் தியானிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து மூலமந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து *சிரசு முதற்கொண்டு பாதங்களீறாகவும், பாதம் முதற்கொண்டு சிரசு ஈறாகவும், இருதயம் முதற்கொண்டு முகம் ஈறாகவும், பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலும், கலா மந்திரங்களாலும் பூஜை செய்து, மூவரையும் அவ்வந்தக் காயத்ரியால் அபிமந்திரித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து,

---

* மூர்த்தா, முகம், இருதயம், குஹ்யம், பாதம் என்னும் இவற்றில் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம் சத்யோஜாதம் என்னும் இவற்றைச் சிருட்டிக்கிரமமாகவும் பாதம் குஹ்யம் இருதயம் முகம் மூர்த்தா என்னுமிவற்றில் சத்யோஜாதம்வாமதேவம் அகோரம் தத்புருஷம் ஈசானம் என்னுமிவற்றை சம்ஹாரகிரமமாகவும், இருதயம் குஹ்யம் பாதம் மூர்த்தா முகம் என்னும் இவற்றில் அகோரம்வாமதேவம் சத்யோஜாதம் ஈசானம் தத்புருஷம் என்னும் இவற்றை ஸ்திதிக்கிரமமாகவும் நியாசஞ்செய்யவேண்டும்என்பதாம்.

* கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளில் சக்தியுடன் கூடிய அநந்தர் முதலியவர்களைப் பூசித்து, மூன்றுமாவரணத்தில் நந்தி முதலியவர்களைப் பூசித்து, நான்காமாவரணத்தில் பத்து உலகபாலர்களையும் பூசித்து, ஐந்தாமாவரணத்தில் பத்து ஆயுதங்களையும் பூசித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, மூன்று பிம்பங்களின் அங்கங்களிலும் மூன்று தத்வமந்திரங்களால் பூஜை செய்து, நைவேத்தியஞ் சமர்ப்பித்தற்பொருட்டு யோகாஸனத்தைப்பூசித்து, சுத்தான்னத்தை நிவேதனஞ்செய்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பிக்கவேண்டும்.

பிறகு வெளியில் வந்து நிருத்தமண்டபத்திலேனும் பசுலையத்தி (மடப்பள்ளியிலே)லேனும் ஒரு முழத்தில் சதுரமாக மண்டலத்தைச் செய்து, ஐந்து நிறப்பொடிகளால் அலங்கரித்து, அதன்மேல் ஆஸனத்தைப் பூசித்து, ஐந்து நீராஜன பாத்ரங்களையேனும் ஸ்தாலிகளையேனும் வைத்து, பாத்திரங்களின் நடுவில் மாவினால் இரண்டு அங்குல அகலமாகவும் பாதி அங்குல உயரமாகவும் வட்டமாகவும் விளக்கைச் செய்து அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து, நெய்யை நிரப்பி, சுத்தமாயும் வெளுப்பாயுமுள்ள ஆடைத்துண்டால் செய்யப்பட்டதாயும், உள்ளே கருப்பூரத்தை உடையதாயும் இருக்கும் திரியை அந்த மாவினாற் செய்யப்பட்ட விளக்கில் ஏற்றி, மூலமந்திரத்தாலருச்சித்து, அதன்மேல் பருத்தி விரை முதலிய திரவியங்களை பிருதிவி முதலியவற்றின் ஐந்து பீஜாக்ஷரங்களால் இட்டு. அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து, கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, சக்தயே வௌஷட் என்னும் மந்திரத்தால் ப்ரமீகரணஞ் செய்து. ஐந்து † தத்வமந்திரங்களால் அபிமந்திரித்து தூபோபசாரம் தீபோபசாரங்களைச் செய்து, அந்தப் பாத்திரத்தைத் தேவ

---

* இது இரண்டாவது ஆவரணபூஜையாகும். மூலத்தில் இரண்டாவது ஆவரணபூஜையென்று கூறப்படவில்லை. முதலாவரண பூஜையுங்கூறப்படவில்லை. ஆயினும் பஞ்சப்ரஹ்மமந்திரங்களையும் ஷடங்கமந்திரங்களையும் முதலாவாரணத்தில் பூஜிக்கவேண்டுவது தான் முறையாகும்.

† சிவதத்துவம் சக்திதத்துவம், சாதாக்யதத்துவம், மகேசுவர தத்துவம் சுத்தவித்யாதத்துவம் ஆகிய ஐந்தும் தத்துவமந்திரங்களாகும்.

தாஸிகளின் கையிற் கொடுத்து, ஆலயத்தில் வலமாக எல்லா வாத்யங்களுடன் சென்று, ஈசுவரனுடைய ஸன்னிதியில் அமர்ந்து, அக்ரமண்டபத்தில் முக்காலியில் வைக்கவேண்டும்.

பின் ஆசாரியர் வடக்குமுகமாக இருந்துகொண்டு, பிராணுயாமம் முதலியவற்றைச்செய்து, தேவர்களுக்கும் தேவரான இந்த ஈசுவரருக்குத் திருஷ்டி தோஷம் நீங்குதல் முதலிய எல்லாமங்களங்களும் சித்தித்தற் பொருட்டுச் சாய ரக்ஷை செய்கிறேன் என்று சங்கற்பம் செய்துகொண்டு, அஸ் திரமந்திரத்தால் பூசித்து உள்ளே சென்று அருக்யஞ் சமர்ப் பித்து விமலாசனத்தைப் பூசித்து, பிரபையில் பிரணவத்தைப் பூசித்து, மூன்று பிம்பங்களிடத்தும் சிருட்டி முறையாகப் பஞ் சப்பிரமமந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் பூசித்து, சோமாஸ்கந்தர் அமர்ந்திருக்கும் ரங்கத்தின் (இருப்பிடத் தின்) நான்கு தூண்களிலும் அக்னிதிக்கு முதற்கொண்டு ஈசான திக்கு முடிவாக நான்கு வேதங்களையும் அருச்சித்து, அதற்குமேல் சந்திரனை யருச்சித்து கயிறுகளில் நக்ஷத்ரங்களை அருச்சித்து, வெளிக்கயிறுகளில் வாசுகியை அருச்சிக்க வேண்டும்.

பின்னர் நைவேத்தியஞ் சமர்ப்பித்தற்பொருட்டு யோகா ஸனத்தைப் பூசித்து, அபூபம் வியஞ்சனங்களுடன் கூடிய பல வகையான அன்னம் பானகம்முதலியவற்றை நிவேதனம் செய்து, ஆபோசனம் சமர்ப்பித்து, இறுதியில் பாத்யம் ஆச மனீயம் என்னும் இவற்றைச் சமர்ப்பித்து, வாய் கழுவுதலைப் பாவித்து, தாம்பூலம் நிவேதித்து, உபசாரத்திற்காகச் சிம்மா ஸனத்தைப் பூசித்து, தூபம் சமர்ப்பித்து, தீபத்திற்கு நிரீக்ஷ ணம் முதல் எண் முத்ரைகள் ஈருக யாவற்றையுஞ்செய்து, அத்தீபத்தை அஸ்திரமந்திரத்தால்மூன்றுமுறைமூன்றுபிம்பங் களையுஞ் சுற்றிச் சமர்ப்பித்து, கைகழுவி, பின்னர் முகம் கண் மூக்கு கழுத்து மார்பு கால்கள் ஆகிய ஸ்தானங்களில் தீபோப சாரத்திற்குரிய மாத்திரா காலத்துடனும் மந்திரத்துடனும் புஷ்பதீபத்தைச் சமர்ப்பித்துச் சுற்றி, மூன்றும் முறை சுற்றும்பொழுது மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஓங்கார ரூபமாக பாதம் முதற்கொண்டு மத்தகமீருகச் சுற்ற வேண்டும்.

பின்னர் வேறிடத்தில் அத்தீபத்தை வைத்துவிட்டு, கையைக் கழுவி, மற்றத்தீபம் முதலியவற்றையும் அவ்வாறே

சுற்றிச் சமர்ப்பித்து, கையைக் கழுவி, பாத்யம் ஆசமனியங்களைச் சமர்ப்பித்து, முக்காலியின்மேல் ஐந்து ஸ்தாலியை உடைய தீபத்தை ஏற்றி. அதற்குரிய மந்திரத்தால் அருச்சித்து, ஆவாஹனஞ் செய்து தூபம்தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, நடுஸ்தாலி முதற்கொண்டு வடக்கு ஈறுகவுள்ள ஸ்தாலிகளை பஞ்சப்பிரமமந்திரங்களாற்சுற்றிச் சமர்ப்பித்து கையைக் கழுவி, பாத்யம் ஆசமனீயஞ் சமர்ப்பித்து, அர்க்யஜலத்தைச் சிறிது கையில் எடுத்து அஸ்திரமந்திரத்தால் பஸ்மபாத்ரத்தின் மேல்புரோக்ஷித்து, மூலமந்திரத்தாலபிமந்திரித்து, ஆவாஹன முதலிய ஐந்து முத்ரைகளையும், தேநுமுத்ரை முதல்மஹாமுத்திரை ஈறுக ஐந்து முத்ரைகளையும் சமர்ப்பித்து, ஈசுவரனுக்கு திருஷ்டிதோஷம் நேராதிருதற்பொருட்டு, புஷ்பம் பருத்தி விரை வேப்பிலை என்னும் இவற்றுடன் பஸ்மத்தை எடுத்து, மூவரையும் கவசமந்திரத்தால் சுற்றி, அந்தப் பஸ்மத்தால் தீபபாத்திரத்தை மூன்றுமுறை சுற்றி, பஸ்மத்தைத் தீபபாத்திரத்தின்மேல் போட்டு இறுதியில் கைகளைக்கழுவி, ஆடையால் கைகளைத் துடைத்துக்கொண்டு, மூலமந்திரத்தால் மீண்டும் பஸ்மத்தை எடுத்து மூர்த்தா முதற்கொண்டு பாதமீறுக * ஐந்து ஸ்தானங்களில் பஞ்சப்பிரமமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூவருக்கும் ரக்ஷை தரித்து, மீண்டும் பஸ்மத்தை எடுத்து, புஜம் முழங்கை மணிக்கட்டு கழுத்து முதுகு இருபாருசுவம் ஆகிய இவற்றில் சத்யோஜாதமந்திரத்தை உச்சரித்து அஸ்த்ராய ஹும்பட் என்னும் மந்திரத்தால் ரக்ஷைதரித்து கைகளைச் சுத்திசெய்து, மூலமந்திரத்தால் பஸ்மபாத்ரத்தை இருகைகளாலும் எடுத்து, கவசமந்திரத்தால் சுற்றி, பரிசாகருடைய கையில் கொடுத்து, கையைக் கழுவி, மூவருக்கும் பாத்யம் ஆசமனீயங்களை திருவடி திருக்கரங்களில் † மாத்திரைகளுடன் சமர்ப்பித்து, மீண்டும் கண்ணாடி குடை சாமரம் வ்யஜனம் பனைஓலை விசிறி முதலியவற்றை அவ்வவற்றிற்குரிய மந்திரங்களுடன் சமர்ப்பித்து எடுத்து அவ்வந்த மாத்திரைகளுடன் மூன்று மூர்த்திகளுக்கும் சமர்ப்பித்து, உபசாரங்கள் செய்து, மீண்டும் அருக்யம்

---

* மூர்த்தா முகம் இருதயம் குஹ்யம் பாதம் ஆகிய ஐந்துதானங்களில்

† மாத்திரைகளுடன் அதாவது பாத்யத்திற்கு ஐந்து மாத்திரைகளும் ஆசமனத்திற்கு மூன்று மாத்திரிரைகளும் உண்டு.

பாத்யம் ஆசமனீயம் ஆகிய மூன்றையும் இடையிடையே ஆசமனத்தையும் சமர்ப்பித்து, மந்திரபுஷ்பஞ் சமர்பித்தல் அருச்சித்தல் முதலிய எல்லாவுபசாரங்களையும் செய்து, பின்னர் நான்கு வேதங்கள், சூத்ரங்கள், புராணஸ்தோத்ரம், பக்தஸ்தோத்ரம், ஆசிர்வாதம், அறிவைப் புகட்டும் கீதம், வாத்யம், சங்கு, தாளம், மிருதங்கம், வீணை, புல்லாங்குழல் நர்த்தனம் முதலிய உபசாரங்களையும் சமர்ப்பிக்கவேண்டும்.

பின்னர் ஐந்து ஸ்தாலிகைகளை தேவதாஸிகளின் கையிற் கொடுத்து, எல்லாக் கீதங்களையும் ஈசுவரருக்கு அறிவித்து, விசித்ரமான நாட்டியம். பத்யம், கத்யம், மங்களநர்த்தனம் என்னுமிவற்றைச் செய்வித்து. இறுதியில் சமஸ்தமான வாத்யோபசாரங்களுடனும் பரிஜனங்களுடனும் ஆலயத்தை வலமாகச்சுற்றி, பிராசாத பீடத்திற்கு அதிபதியாகிய பூதேசுவரரின் கிழக்குத் திக்கிலுள்ள திரிபாதிக்குமேல் வைக்கச் செய்து, ஆலயத்திற்குள் சென்று பராங்முகார்க்யங் கொடுத்து, ஸ்தோத்ரம் நமஸ்காரம் முதலிய உபசாரங்களைச் செய்ய வேண்டும்.

## பக்த பூஜா விதி

பிறகு சோமாஸ்கந்தருடைய பஸ்மம் முதலிய நிர்மால்யங்களுடனும், எல்லாவாத்யோபசாரங்களுடனும், பரிஜனங்களுடனும் பக்ததேவருடைய (சுந்தரமூர்த்தி சுவாமியின்) ஆலயஞ்சென்று, அஸ்திரமந்திரத்தால் வாயிலையருச்சித்து உள்ளேசென்று, அர்க்ய ஜலத்தால் விக்ரஹத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்து புரோக்ஷித்து, ஆசனத்தைப் பூசித்து, பஞ்சாஸனம் பூசித்து, நிர்மால்யத்தால் அலங்கரித்துத் தியானஞ் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

ஒரு முகமும் இரண்டு கண்களும் மூன்று மடிப்புக்களை உடைய வயிறும், உடையவராயும், காலை வளைத்துக்கொண்டிருப்பவராயும் கேசபந்தத்தை உடையவராயும், வலது கையில் சிருணி (குடாரி) என்னும் ஆயுதத்தையுடையவராயும், இடதுகையை ராஜாங்கமாக வைத்திருப்பவராயும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவராயும், சொர்ண ஆடையைத் தரித்திருப்பவராயும், சொர்ணப் பூணூலைத் தரித்திருப்பவராயும் இருக்கும் சுந்தரமூர்த்தியை நமஸ்கரிக்கிறேன்'' என்பதாம் இவ்வாறு தியானித்து ஓம் சும்

சுந்தரமூர்த்தயே நம: என்று அருச்சித்து, அவருடைய இரண்டு பக்கங்களிலும் இரண்டு சக்திகளை ஆஸனமூர்த்தி மந்திரங்களால் அருச்சித்துத் தியானிக்க வேண்டும். தியானம் வருமாறு :—

பொன்மை கருமை நிறங்களை உடையவர்களாயும், கேசத்தைக்கட்டிக்கொண்டும் பின்னிக்கொண்டும் இருப்பவர்களாயும், பலவர்ணங்களுடைய ஆடையைத் தரித்திருப்பவர்களாயும், அங்கங்களில் சமஸ்தமான ஆபரணங்களையும் அணிந்திருப்பவர்களாயும், கையில் தாமரை ஊருஹஸ்தம் என்னுமிவற்றைவும், நீலோத்பலம் கிளி என்னும் இவற்றையும் தரித்திருப்பவர்களாயும் இருக்கும் பரவைநாச்சியார் சங்கிலி நாச்சியார் ஆகிய இரண்டு தேவிகளையும் நமஸ்கரிக்கிறேன் என்பதாம்.

இவ்வாறு தியானித்து அவ்வர்களின் பெயர்களை உச்சரித்துக்கொண்டு ஆவாஹனஞ்செய்து இரண்டு தேவிகளையும் பூசிக்க வேண்டும், பின்னர், நைவேத்யம், தாம்பூலம், தூபம், தீபம், அருக்யம் இவற்றை சமர்ப்பித்து, பஸ்மஞ்சாத்துதல் முதலிய எல்லா உபசாரங்களையுஞ் செய்யவேண்டும். பிறகு மகேசுவரமூர்த்திகளுக்கும் பரிவாரங்களுக்கும் கௌரிசண்டர் பைரவர் இவர்களுக்கும் எல்லா உபசாரங்களையுஞ் செய்து,' பின்னர் பலிசமர்ப்பித்தல், ஹோமஞ்செய்தல், நித்தியோத்ஸவம், அசுதலிங்கபூஜை என்னும் இவற்றைச் செய்து, பிறகு சுத்த நர்த்தனத்தைச் செய்விக்கவேண்டும்.

## அர்த்தயாம பூஜை

உத்தரகாரணாகமத்தில் தனுர்மாசபூஜாவிதிப் படலத்தில் அர்த்தயாம பூஜைசெய்யும் விவரம் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு :—

ஸ்நபனம் பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் இவற்றைச் சேகரித்துக் கொள்ளவேண்டும். துவாரபூஜை செய்யக்கூடாது. சலாஸநத்தைப் பூசித்து அபிஷேகஞ்செய்து, நைவேத்யம் தூபம் தீபம் முதலிய உபசாரங்களைச் செய்து, அம்பாளுக்கும் அவ்வாறே எல்லா உபசாரங்களையும் செய்யவேண்டும். பின்னர் பாதுகாராதனம் செய்து க்ஷேத்திரபாலரைப் பூசிக்க வேண்டுமென்பதாம்.

அவ்வாறே லிங்கத்தின் சன்னிதியை அடைந்து அர்த்தயாம பூஜைக்காக புண்யாஹம் பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் ஸ்நபனம் முதலியவற்றை ஸ்தாபித்துக்கொண்டு, துவார பூஜையின்றி திரையைப் பூசித்து கர்ப்பக்கிருஹத்துட் சென்று கர்ப்பாவரணத்தைப் பூசித்து பழைய பூஜையை நீக்க வேண்டும்.

பிறகு, சுகந்தம் சேர்ந்த நீரால் லிங்கத்தைச் சுத்தி செய்து, ஆதாரசத்தி முதல் சிவசத்தி வரை ஆஸனங்களைப் பூசித்து, ஆவாஹனஞ் செய்து ஆவாஹன முதலிய முத்திரைகளையும் சமர்ப்பித்து, சுகந்த தைலம் முதலிய எல்லாத்திரவியங்களாலும் முறையாக அபிஷேகஞ் செய்யவேண்டும். இவ்வாறே கிரணாகமத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

'அர்த்தயாம பூஜை செய்தற்பொருட்டுச் சுகந்தம் சேர்ந்த தைலத்தால் தைலாபிஷேகம் செய்யவேண்டும். வேறு தைலங்களால் அபிஷேகம் செய்யக்கூடாது' என்பதாம்.

இவ்வாறு அபிஷேகம்செய்து பஞ்சகவ்யம், பஞ்சாமிருதம், பால், தயிர், நெய், தேன், பழம், இளநீர், கந்தோதகம், விசேஷார்க்யஜலம், ஸ்நபனஜலம், சங்குஜலம், சுத்தஜலம் ஆகிய இவற்றை அபிஷேகம்செய்து, திருவொற்றாடை சாத்தி, வஸ்திரம், சந்தனம், மாலை என்னும் இவற்றால் அலங்காரஞ்செய்து, மூலமந்திரத்தால் அருச்சித்து, ஆவரண பூஜை செய்து, வியஞ்சனங்களோடு கூடிய அப்பவர்க்கங்களுடன் ஹவிஸ், தாம்பூலங்களை நிவேதனம் செய்து, ஆசமனீயம் சமர்ப்பித்து, எல்லாவுபசாரங்களையுஞ்செய்ய வேண்டும். பிறகு *முன்போல அம்பிகையைப் பூசித்து, ஈசுவரர் சயனாலயப் பிரவேசம் செய்தற்பொருட்டு, பாதுகையையேனும் சிவிகேசுவரரையேனும் ஊஞ்சலில் வீற்றிருக்கச்செய்து, விருஷபாஸனத்தைப் (அதாவது சஸாஸனத்தை) பூசித்து, மூர்த்தியைத் திவ்யமான ஆடை சந்தனம் மாலை ஆபரணங்களால் அலங்கரித்து, மூர்த்திமந்திரம் மூலமந்திரங்களால் பூசித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

---

* மூலப்பிரதியில் அக்ரமண்டபத்தில் கௌரியைப் பூசித்து என்று இருக்கிறது.

'ஒரு முகமும், மூன்றுகண்களும், வெண்மை வர்ணமும், அழகான வடிவமும் உடையவராயும், பரசு அபயம் என்னு மிவற்றையும், வரம் மான்என்னும் இவற்றையும் உடைய வராயும், சிரசில் கங்கையைத் தரித்திருப்பவராயும், காதில் துளிரையும் குண்டலத்தையும் உடையவராயும், இடது காலைப்படுக்கவைத்துக்கொண்டும் வலதுகாலைத் தொங்க விட்டுக்கொண்டும் இருப்பவராயும், அங்கங்களில் வாசனை யுள்ள சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவராயும், எல்லா மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டவராயும், சித்திரவஸ்திரத் தைத் தரித்திருப்பவராயும், சௌம்யராயும், சமஸ்தமான மங்களங்களுக்கும் காரணராயுமிருக்கும் ஈசுவரரை நமஸ் கரிக்கிறேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானம்செய்து மூலமந்திரத்தால் ஆவா ஹனம் செய்து, நைவேத்தியம் தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, பஞ்சப்பிரம மந்திரங்களாலும் அங்கமந்திரங் களாலும் அருச்சித்து நீராஞ்சனம் முதலிய உபசாரங்களைச் செய்து, சித்திர வஸ்திரத்தால் மறைத்து, சிவிகையில் ஆரோகணித்து துவஜம் சத்ரம் சாமரம் விசிறி பனைஓலை விசிறிபலவித தூபங்கள் தீபங்கள் ஆகிய உபசாரங்களுடனும், பரிஜனங்களுடனும்,, வேதகோஷம் கீதம் வாத்யம் சுலோகம் கத்யம் நர்த்தனம் முதலிய உபசாரங்களைச் செய்வித்து, விக்னேசுவரர் முதற்கொண்டு சண்டேசுவரர் ஈறுனதேவதை களை கத்யம் பத்யங்களால் சந்தோஷத்தை அடையும்படி செய்து, நந்திகேசுவரருடைய அனுக்ஞையினுல் அவரவர்களை தத்தம் இருப்பிடத்தில் இருக்கச்செய்து, நந்திகேசுவரரை முன்னிட்டு சயனுலயம் சென்று ஊஞ்சலில் நின்றும் இறக்கி மஞ்சத்தின் மேல் தேவிக்கு வலதுபாகமாக வீற்றிருக்கச் செய்து, தேவியையும் ஈசுவரரையும் பூசித்து, சுவாமியை பஞ்சப்ரஹ்ம மந்திரம் அங்க மந்திரங்களால் அருச்சித்து, மூலமந்திரத்தாலும், பஞ்சப்ரஹ்மமந்திரங்களாலும் ஸ்தா பனம், சன்னிதானம், சன்னிரோதனம், அவ குண்டனம், தேனுமுத்திரைகளைக் காண்பித்து, பின்னர் சக்தியை ஆஸன மூர்த்தி மூலமந்திரங்களால் அருச்சித்துத் தியானம் செய்ய வேண்டும். தியானம் வருமாறு:—

கருமைநிறமுடையவளாகவும், இரண்டு கண்கள், கரண்ட மகுடம் சொர்ணவஸ்திரம் இவற்றை உடையவளாகவும்,

எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளாகவும், வலதுகையில் நீலோத்பலத்தையும் இடது கையை ஊருஹஸ்தமாகவும் உடையவளாகவும், தாமரையின் நடுவில் வீற்றிருப்பவளாகவும், தெளிவான முகத்தை உடையவளாகவும் விளங்கும்தேவியைத் தியானிக்கிறேன் என்பதாம், இவ்வாறு தேவியைத் தியானித்து ஆசாரியர் மூலமந்திரத்தால் தேவியை ஆவாஹனம் செய்யவேண்டும். இவ்வாறு ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து அருச்சித்து சுவா மிக்கும் அம்மனுக்கும் அப்பவர்க்கம் முதலிய சிற்றுண்டிகளுடன் நெய் சேர்ந்த பாலன்னத்தை நிவேதனஞ் செய்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, தேங்காய் பழங்களுடன் ஏலம் லவங்கம், (க்ராம்பு) பச்சை கருப்பூரம் ஜாதிக்காய் என்னும் இவற்றால் பூரணமான தாம்பூலத்தையும் நிவேதனஞ் செய்து, நீராஜனம் முதலிய உபசாரங்களைச்செய்து, நிரோதார்க்யஞ் சமர்ப்பித்து, தேவியின் சமீபத்தில் திவ்யமான புஷ்பம் மாலை முதலியவற்றையும், பழம் பானகம் பால் சுகந்தம் தாம்பூலம்முதலியவற்றையும் வைத்து திரையிட்டு, கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, வௌஷடை இறுதியில் உடைய மூலமந்திரத்தால் ப்ரமீகரணம் செய்து, வெளியில்வந்து வாயிலின் இரண்டு பக்கங்களிலும் ருத்ரதாசிகளைக் கொண்டு பள்ளியறை கீதத்தைப்பாடச்செய்து, அஸ்திரமந்திரத்தால் கதவைப்பூட்டி, சங்கு காஹளம் என்னும் வாத்தியங்களால் மகிழும்படிசெய்து, இறுதியில் முன்போல் சண்டேசுவர பூசை செய்ய வேண்டும்.

## க்ஷேத்திரபாலர் பூசை

பின்னர் க்ஷேத்திரபாலர் பூசை செய்யும்பொருட்டு க்ஷேத்ரபாலருடைய ஆலயம்சென்று, வடக்கு முகமாக அமர்ந்து, பிராணாயாமம் சகளீகரணங்கள் செய்து, சாமான்யார்க்யத்தைத் தாபித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு, தன்னையும் எல்லாத் திரவியங்களையும் புரோக்ஷித்துக் கொள்ளவேண்டும்.

பின்னர் கரசுத்தி அங்கசுத்திகளைச் செய்யவேண்டும். செய்யும் முறை வருமாறு:—

ஓம் ஹ: அஸ்த்ராயநம: என்று கரசுத்திசெய்து, பெருவிரல் முதற்கொண்டு .கடைவிரல் ஈறாக ஓம் ஹ்ரீம் வோம்

ஈசாநாய அங்குஷ்டாப்யாம் நம:, ஓம் ஹ்ரீம் வேம் தத்புருஷாய தர்ஜநீப்யாம் நம:, ஓம் ஹ்ரீம் வும் அகோராய மத்யமாப்யாம் நம:, ஓம் ஹ்ரீம் விம் வாமதேவாய அநாமிகாப்யாம் நம:, ஓம்ஹ்ரீம் வம் சத்யோஜாதாய கனிஷ்டிகாப்யாம் நம: என்று இவ்வாறு நியாசம்செய்து ஓம் ஹ்ரீம் வ;' ஆபதுத்தாரணாய கரதலகரபிருஷ்டாப்யாம் நம: என்று உள்ளங்கையிலும் புறங்கையிலும் நியாசம்செய்து, இவ்வாறே அங்கந்யாசமும் செய்யவேண்டும். பின்னர் முன்போல் மாதிருகாநியாசம் கலாநியாசங்களைச்செய்து; அந்தரியாகம்செய்து மூல மந்திரத்தால்அருக்யத்தை ஸ்தாபித்து, புண்யாஹம் பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் ஸ்நபநங்களைச்செய்து, வாயிலில் வீரகணபதியைப் பூசித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு :—

''பாசம் அங்குசம் பழம் (மாதுளம்பழம்) தாமரையிலை என்னும் இவற்றைக் கையில் உடையவராயும், தொந்தியை உடையவராயும், யானை முகத்தையும் மூன்று கண்களையும் உடையவராயும், உள்ள வீர கணபதியை நமஸ்கரிக்கின்றேன்'' என்பதாம். இவ்வாறு தியானஞ்செய்து அருச்சித்து, வாயிலுக்கு மேலே இடதுபக்கம் வலப்பக்கம் நடு ஆகிய இடங்களில் முன்போல் கணபதி, ஸரஸ்வதி, மகாலக்ஷ்மி ஆகிய இவர்களை அருச்சித்து, இடதுபக்கம் லலதுபக்கங்களிலும் ஓம் ஹாம் தர்மத்வாரபாலாய நம: ஓம் நவஸித்தேப்யோ நம:, ஓம் அதர்மத்வாரபாலாய நம:, அணிமாத்யஷ்ட ஸித்திப்யோ நம: என்று அருச்சித்து, தூபம் தீபம் அருக்யங்கள் சமர்ப்பித்து, உள்ளே சென்று விக்னங்களை அகற்றி, தேஹளியை (நடையை) அருச்சித்து, திரையைப் பூசித்து இட்டு, முன்போல் ஈசானதிக்கு முதற்கொண்டு நைருததிக்கு ஈறாகக் கர்ப்பாவரணத்தைப் பூசித்து, மூல மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அருக்யஜலத்தால் பிம்பத்தைப் புரோக்ஷித்து, ஆசனமூர்த்தி மூல மந்திரங்களால் அருச்சித்து, ஆவாஹனஞ் செய்து, ஆவாஹனம் முதலிய முத்திரைகளையும் மகாமுத்திரையையும் சமர்ப்பித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு.

''சர்ப்பம், டமருகம், அங்குசம், கண்டை (மணி) கட்கம், அமிருதகபாலம், வரம், அபயம் ஆகிய இவற்றை எட்டுக் கைகளிலும் உடையவராயும், மரகதம் போன்ற நிறமுடையவராயும், சந்திரனைச் சிரசில் உடையவராயும், ஜடையை

யும் மூன்று கண்களையும் உடையவராயும் இருக்கும் வடுகதேவரைச் சேவிக்கின்றேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானஞ்செய்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, மூர்த்திக்குப் பழைய பூசையைப் பூசிக்கும் நிமித்தம் புஷ்பத்தால் அருச்சித்து, பழைய புஷ்பங்களை நீக்கி, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து பிம்பத்திற்கு அபிஷேகஞ் செய்து. தைலாபிஷேகம் முதலியவற்றை முறையே செய்து, வெள்ளை ஆடையால் திருவொற்ருடை சாத்தி, புயங்களில் இரண்டு செம்மை வஸ்திரங்களை மாலையாகச்சாத்தி, பூணூல் முண்டமாலை கிங்கிணீமாலை சிலம்பு தண்டை பட்டம் கோரப் பல்லு பயங்கரமான கண்கள் ஊர்த்வத்வாலை கிரீடம் இரத்தினமாலை பூமாலை முதலியவற்ருலும் ஆபரணங்களாலும் அலங்கரித்து, பலவகையான கஸ்தூரி செஞ்சந்தனம் முதலியவற்றைச் சாத்தி, வாசனையுள்ள செம்மையான புஷ்பமாலைகளைச் சாத்தி, முன்போல் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலும் அங்கமந்திரங்களாலும் பூசித்து மூலமந்திரத்தால் அபிமந்திரணஞ்செய்து, சுவானத்வஜாய வித்மஹே சூலஹஸ்தாய தீமஹி தந்நோபைரவ; பிரசோதயாத் என்ற பைரவ காயத்ரியை ஜபித்து, முதலாவரணத்தில் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்களைப் பூசித்து இரண்டாமாவரணத்தில் கிழக்குத் திக்கிலுள்ள முகந்தொடங்கி எட்டுத்திக்குகளிலும் அஷ்ட பைரவரை அருச்சிக்கவேண்டும். அஷ்ட பைரவரின் தியானம் வருமாறு:—

கபாலத்தைக் கையில் ஏந்தியவராயும், குண்டலங்களை அணிந்தவராயும் தண்டத்தைக் கையில் உடையவராயும், மிகக் கருமை நிறமுடையவராயும், சர்ப்பத்தைப் பூணூலாக வுடையவராயும், போர்புரியும் கோலத்தையுடையவராயும், இடையூற்றை அகற்றுபவராயும்; பக்தர்களுக்குச் சித்தியைக் கொடுப்பவராயும் உள்ள வடுகநாதர் மேம்பட்டு விளங்கட்டும்'' என்பதாம். இவ்வாறு தியானம் செய்த பின்னர்,

1. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் பூம் பேம் பைம் போம் பௌம்ப: ஹ்ரீம் ஸ்ரீம் மஹாமந்தான பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

2. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் பஞ்சவக்த்ர பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

3. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் ரவிபக்ஷண பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

4. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஏகானந்த பைரவ ஸ்ரீபாதுகாம் பூஜாயாமி நம:

5. ஓம் ப்ரேம்பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் சண்ட பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

6. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் நபோநிர்மல பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

7. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் டமருபாஸ்கர பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

8. ஓம் ப்ரேம் பட் பாம் பீம் ஹ்ரீம் ஸ்ரீம் பட்கார பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம:

என்று இரண்டாமாவரண பூசை செய்து, அதற்கு வெளியில் மூன்றுமாவரணத்தில் கிழக்கு முதலிய எட்டுத்திக்குக்களில்,

1. ஓம் ஹாம் ஹ்ரீம் அஸிதாங்க பைரவாய ப்ராஹ்மீ தேவ்யை நம:

2. ஓம் ஹாம் ஹ்ரீம்ருரு பைரவாய மாகேசுவரீ தேவ்யை நம:

3. ஓம் ஹாம் ஹ்ரீம் சண்டபைரவாய கௌமாரீ தேவ்யை நம:

4. ஓம் ஹாம் ஹ்ரீம் க்ரோதன பைரவாய வைஷ்ணவீ தேவ்யை நம:

5. ஓம் ஹாம் ஹ்ரீம் உன்மத்த பைரவாய வாராஹீ தேவ்யை நம:

6, ஓம் ஹாம் ஹ்ரீம் கபாலீச பைரவாய மாஹேந்த்ரீ தேவ்யை நம:

7. ஓம் ஹாம் ஹ்ரீம் பீக்ஷண பைரவாய சாமுண்டா தேவ்யை நம:

8. ஓம் ஹாம் ஹ்ரீம் ஸம்ஹார பைரவாய சண்டிகா தேவ்யை நம:

என்று மூன்றுமாவரண பூசை செய்து, பிறகு நான்கா மாவரணத்தில் கிழக்கு முதலிய நான்கு திக்குக்களில்,

1. ஓம் ஹாம் ஹேதுக வேதாளாய நம:
2. ஓம் ஹாம் ஏகபாத வேதாளாய நம:
3. ஓம் ஹாம் பீமரூப வேதாளாய நம:
4. ஓம் ஹாம் அசர வேதாளாய நம:

என்றும், நிருதிதிக்கு முதற்கொண்டு அக்னிதிக்கு ஈருக:—

1. ஓம் ஹாம் திரிபுராக்னி வேதாளாய நம:
2. ஓம் ஹாம் வஹ்நி வேதாளாய நம:
5. ஓம் ஹாம் அக்னிஜிஹ்வ வேதாளாய நம:
4. ஓம் ஹாம் காலாக்னிரூப வேதாளாய நம:

என்றும், நிருதிதிக்கிற்கு இடப்பக்கத்தில் ஓம் ஹாம் கராள வேதாளாய நம: ஈசானதிக்குக்கு வலப்பக்கத்தில் ஓம் ஹாம் ஹாடகேசுவர வேதாளாய நம: என்றும் அருச்சித்து, ஐந்தாமாவரணத்தில் கிழக்குதிக்குத் தொடங்கி பத்துத் திக்குக்களிலும் பத்து லோகபாலர்களையும் பூசிக்கவேண்டும்.

பின்னர் மஸ்தகம் முதற்கொண்டு பாதமீருகவும், இருதயம் முதற்கொண்டு சிரசிற்கு மேல் வரையும், பிம்பத்தினிடத்து பஞ்சப்ரம மந்திரங்களையும் ஷடங்க மந்திரங்களையும் நியாசம்செய்து, ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து திரிகண்டமுத்திரை, யோனிமுத்திரை, வியாழமுத்திரை, நாராசமுத்திரை, நிஷ்டுரமுத்திரை, சூலமுத்திரைகளைச்சமர்ப்பித்து, சர்க்கரை வடை பழம் முதலியவற்றோடு வியஞ்சனங்களுடன் பாயாஸான்னத்தை நிவேதனம் செய்து, தாம்பூலம் நிவேதித்து தூபோபசாரம் தீபோபசாரங்களைச்செய்து, மந்திர புஷ்பம் சமர்ப்பித்து, ஸ்தோத்ரம் கீதம் வாத்தியம் சுத்த நிருத்தம் முதலிய உபசாரங்களைச் செய்து, அவரது நிர்மால்யங்களால் வாயுதிக்கிலுள்ள க்ஷேத்திர சண்டேசுவரரை அருச்சித்து, நைவேத்யம் தூபம் தீபம் முதலிய உபசாரங்களைச் செய்து தாம்பூலம் முதலியவற்றை நிவேதனம் செய்ய வேண்டும்,

## ஆலயத்திற்கு வெளியிற் செய்யவேண்டிய பூஜை

பின்னர், ஆலயத்திற்குவெளியில் ஈசுவரருடைய சந்நிதியிலேனும் வடபக்கத்திலேனும், ஒரு முழம் உயரமாகவும், ஒரு முழம் அகலமாகவும், சதுரச்ரமாகவும், பீடத்தை சமமான

மேகலைகளுடன் செய்து, அதற்கு முன்னர் விதிப்படி பலிபீடத்தைத் தாபித்து, சதுரச்ர பீடத்தைக் கோமயத்தால் மெழுகி, ஸம்மார்ஜனியால் (துடைப்பத்தால்) சுத்திசெய்து அதன் மேல் விசித்திரமான கோலப்பொடியால் தாமரையை வரைந்து, அதற்கு வெளியில் திரிகோணத்தை வரைந்து அதற்கு வெளியில் சதுரச்ரத்தைச் செய்து அதற்கு வெளியில் வட்டமாக ஒரு மண்டலமிட்டு, அதற்கு வெளியில் எட்டுத் தளமுள்ள தாமரையை வரைந்து, தளங்களுக்கு வெளியில் இரண்டு ரேகைகளால் நான்கு வாயில்களை உடையதாக * பூபுரம் வரையவேண்டும்.

பிறகு, ஆசாரியர் வடுகதேவருடைய மூலமந்திரத்தால் சகளீகரணஞ் செய்து, உட்கார்ந்துகொண்டு அஸ்திரமந்திரத்தைஉச்சரித்து அருக்யத்தால்புரோக்ஷித்து, சதுரச்ரத்தின் நடுவில் கிழக்கு முதலிய பத்துத்திக்குக்களில் பத்து வேதாளங்களைப் பூசித்து, எட்டுத்தளங்களில் சக்தியுடன் கூட அஷ்ட பைரவர்களை அருச்சித்து. திரிகோணங்களின் நுனிகளில் அடியிற்கண்டவாறு மூன்று வடுகதேவர்களைப் பூசித்துத் தியானம் செய்யவேண்டும்.

கிழக்குக்கோணத்தில் ''வரதம் அபயம் அக்ஷமாலை கமண்டலம் என்னும் இவற்றைத் தரித்திருப்பவரும், வாக்தேவியுடன் கூடியவருமான வடுகதேவரைப் பூசிக்கிறேன்'' என்று தியானித்து ஓம் ஹ்ரீம் ஹூம்பட் விரிஞ்சி வடுக ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம: என்று பூஜை செய்யவேண்டும்.

பின், வடக்குக் கோணத்தில் சங்கு சக்கரம் வில்லு பாணம் என்னும் இவற்றைத் தரித்திருப்பவராயும், ஸ்ரீ தேவியுடன் கூடியவராயும், யௌவனப் பருவத்தை யுடையவராயும் இருக்கும் முகுந்தவடுகரைத் தியானிக்கின்றேன்'' என்று தியானம் செய்து, ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹூம்பட் முகுந்த வடுக பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம: என்று பூஜை செய்யவேண்டும்.

பின்னர், தெற்குக் கோணத்தில் சூலம் டமருகம் வரதம் அபயம் இவற்றை உடையவராயும், கௌரிதேவியுடன் கூடியவராயும், பெருங் குரலுடையவராயும் உள்ள ருத்ர வடுக தேவரைப் பூசிக்கிறேன்'' என்று தியானித்து, ஓம் ஹ்ரீம்

---

* பூபுரம் ரேகையோடு கூடியவாயில்.

ஸ்ரீம் ஹூம்பட் ருத்ர வடுக பைரவ ஸ்ரீ பாதுகாம் பூஜயாமி நம: என்று பூஜைசெய்து, நடுவில் க்ஷேத்திரபாலரை மூலமந்திரத்தால் ஆவாஹனம் செய்து, முன்போல் ஸ்தாபனம் முதலிய முத்திரைகளைக் காண்பித்துத் தியானம் செய்யவேண்டும். தியானம் வருமாறு:—செம்மை வருணமுடையவராயும், மூன்று கண்களையும் இரண்டு ஜடைகளையும் உடையவராயும், கைகளில் டமருகம் சூலம் என்னும் இவற்றைத் தரித்திருப்பவராயும், நிர்வாணராயும், கிங்கிணீமாலையை அணிந்தவராயும், இளமைப் பருவத்தால் அழகானவராயும் உள்ள பைரவரை நமஸ்கரிக்கிறேன்'' என்பதாம்.

இவ்வாறு தியானஞ்செய்து, அதற்கு வெளியில் உள்ள எட்டுத்தளங்களில் இரண்டு இரண்டாகப் பதினாறு உயிர் எழுத்துக்களையும் நமோந்தமாகப் பூசித்து, சதுரச்ரத்தின் நடுவில் ககாரம் முதலிய அக்கரங்களை நமோந்தமாகப் பூசித்து, தூபம் தீபம் அருக்யங்களைச் சமர்ப்பித்து, பாயசான்னத்தால் பலிசமர்ப்பிக்க வேண்டும். அவ்வாறே அநலாகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது அது வருமாறு:—

சுவாஹாந்தமாக மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு முத்திரை சமர்ப்பித்து, அன்புடன் பாயசான்னத்தினல், ஆபதுத்தாரர் பிரீதியடையும்பொருட்டும் கிராமரக்ஷையின் பொருட்டும், பலிசமர்ப்பிக்கவேண்டும். இவ்வாறு சமர்ப்பித்தல், எல்லாச்சித்திகளையும் ஆயுள் சம்பத்து கீர்த்தி ஜயம் புத்திர பௌத்திரர்களின் விருத்தி ஆகிய இவற்றையும் தரும். எல்லாரோகங்களையும் நாசஞ் செய்யும். கொடுமையான இடையூறுகளைப்போக்கும் என்பதாம்.

பின்னர், மூலமந்திரத்தால் பலி பீடத்தை அபிஷேகம் செய்து கர்ணிகையின் நடுவில் மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு, ஆபதுத்தாரணரை ஆவாஹனம் செய்து, அருச்சித்து, எட்டுத் தளங்களில் எட்டுப் பைரவர்களை அருச்சிக்க வேண்டும். அவ்வாறே பராக்யமென்னும் நூலிற் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—

''மந்தானபைரவர், பஞ்சவக்த்ர பைரவர், ரவிபக்ஷக பைரவர், ஏகநந்தன பைரவர், சண்டபைரவர், நபோநிர்மல பைரவர். டமருபாஸ்கரபைரவர், பட்காரபைரவர் ஆகிய எட்டுப் பைரவர்களைப் பூசிக்கவேண்டும்'' என்பதாம்.

இவ்வாறு பூசித்து பாயஸான்னத்தால் பலிசமர்ப்பிக்க வேண்டும். நடுவில் ஓம் நமோபகவதே ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் வம் வ்ரேம்வம் வ்ரீம் ஜ்ரீம் ஜடிநே ஆபதுத்தாரணாய இமாம் பூஜாம் பலிம் கிருஹ்ண ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் பலி சமர்ப்பிக்கவேண்டும்.

பிறகு நர்த்தனம், கீதம் வாத்யம் முதலியவற்றைச் செய்வித்து, பீடத்தில் உள்ள தேவதைகளை உத்வாஸனஞ்செய்து, ஆலயத்துவாயிலின் சமீபத்திற்கு வந்து கால்கைகளைச் சுத்தி செய்துகொண்டு, ஆசமனஞ் செய்து, திருநீறு தரித்து, ஆலயத்திற்குட் சென்று, க்ஷேத்ரபாலருடைய சன்னிதியை அடைந்து, தாம்பூலத்தை நிவேதனஞ் செய்து கர்ப்பூர நீராஞ்சனம் சுளுகோதகம் என்னும் இவற்றைச் சமர்ப்பித்து, மூலமந்திரத்தால் மூன்று புஷ்பாஞ்சலிகளைச் சொரிந்து, பள்ளியறைக் கதவைப்பூட்டிய திறவுகோலை மூலமந்திரத்தால் பைரவருடைய கையில் கொடுத்து, தென்பக்கத்தில் தாபித்து, பராங்முகார்க்யங்கொடுத்து, ஸ்தோத்திரம் நமஸ்காரங்களைசெய்து, கோயிலின் எல்லாவாயில் கதவுகளையும்பூட்டி, அன்னவிநியோகம்செய்து, பின்னர் ஆசாரியர், ஆலயத்திற்கு வெளியில் வந்து, எல்லாவாத்யோபசாரங்களுடனும், பரிஜனங்களுடனும், வீட்டிற்குச் சென்று, சுத்தாசமனம் சகளீகரணங்களைச் செய்து, சாக்ஷி பூதர்களான வேதியருடன் போஜனம் செய்து, தாம்பூலம் தரித்து, பின்னர் படுக்கையிற்சென்று சயனஞ்செய்ய வேண்டும்.

பரமேசுவரர் என்ற வேறுபெயருள்ளவரும், இரண்டுலக்ஷங் கிரந்தங்கள் இயற்றியவருமான அகோரசிவாசாரியர் இயற்றிய சிவாலய நித்யபூஜாவிதி என்னும் பரார்த்தநித்திய பூஜாவிதி முற்றுப்பெற்றது.

---

சுபமஸ்து.

# மகாப்பிரதோஷ பூஜாவிதிப் படலம்

இது பூர்வகாரணுகமத்தில் உள்ளது

பிறகு பிரதோஷபூஜாவிதியை விசேஷமாகக்கூறுகிறேன். பக்தர்களைக் காக்கும் பொருட்டு யமனை (விஷத்தை) நிக்ரகம் செய்த காலம் இரவின் ஆரம்பமாகும். அஸ்தமித்து மூன்றே முக்கால் நாழிகை பிரதோஷகாலமென்று கூறப்பட்டிருக்கிறது. அப்பொழுது சிவனை அருச்சிக்கவேண்டும். பிரதோஷ காலத்தில் சிவனை அருச்சிக்காமல் செய்யப்படும் ஸ்நானம், தானம், ஜபம், ஹோமம் முதலியன பலனைத்தரா. விருஷபத்தின் பீஜத்தில் எல்லாத்தீர்த்தங்களும் இருக்கின்றன. ஆகையால் விருஷபத்தின் பீஜத்தைத் தொட்டுக்கொண்டு கொம்புகளின் இடையே சிவனைத்தரிசிக்க வேண்டும். கடன், ரோகம், தாரித்ரியத்தால் உண்டாகும் பசி, மனக்கவலை, அபமிருத்யு, பாவம், மனம் நொந்து போதல், கோபம், மோஹம், பயம் என்னும் இவை என்னிடம் உள்ளனவென்று ஈசுவரனிடம் தெரிவிப்பின், அவன் அப்பாவபலனை அனுபவிக்க மாட்டான். ஈரமுள்ள பனைஓலையில் தனக்குள்ள துன்பத்தை எழுதி ஈசுவரனிடம் அறிவித்து அந்த ஓலையை எரித்து நீர்க்கரையில் போடவேண்டும். இவ்விதம் மூன்று முறை செய்தால் அந்தப் பாவபலனை அனுபவிக்கமாட்டான். இவ்வாறு செய்தல் எல்லாப் பாவங்களையும் போக்கும். புண்ணியத்தை உண்டாக்கும். எல்லாத் தோஷங்களையும் போக்கும். சிவபூஜையை பிரதோஷகாலத்தில் விசேஷமாகச் செய்ய வேண்டும். செய்யும் முறை வருமாறு:—

முதலில் விருஷபத்திற்கு பஞ்சகவ்யத்தால் அபிஷேகம் செய்து, சுத்த ஜலத்தாலும் அபிஷேகஞ் செய்து, சந்தனம் புஷ்பம்சாத்தி தூபம் தீபம் சமர்ப்பித்து, எள்ளன்னம் நிவேதித்து, தாம்பூலோபசாரம் முதலியன செய்யவேண்டும். பலி பீடத்திற்கு முன்னர், சாலிநெற்களால் மேடைசெய்து, பொரி புஷ்பம் எள்ளு இவற்றை இரைத்து அலங்கரிக்க வேண்டும். பின் தர்ப்பைகளைப் பரப்பி புண்யாஹவாசனம் செய்ய வேண்டும், பின்னர் ஒன்பது கும்பங்களை சுத்த ஜலத்தால் புரோக்ஷித்து, நூல்சுற்றி, வஸ்திரம் அணிந்து, கூர்ச்சம் மாவிலை ரத்னம் தேங்காய் என்னும் இவற்றைக் கும்பங்களில் வைத்து மேடையில் தாபித்து, சந்தனம்

முதலியன சாத்திப் பூஜை செய்யவேண்டும். பின்னர், பஞ்ச கவ்யம் பஞ்சாமிருதம் இளநீர் சுத்த தைலம் நெய் முதலிய அபிஷேகத்திற்குரிய திரவியங்களை வைத்துக்கொண்டு சுத்த மான நீரால் அவற்றைப் புரோக்ஷிக்க வேண்டும்.

பின்னர், கர்ப்பக்கிருகத்திற்குச் சென்று ஸ்தானசுத்தி லிங்க சுத்திபீடசுத்திகளைச் செய்து, ஆசனமூர்த்திமந்திரங் களால் பூசித்து, மாதிருகாநியாஸம் அஷ்டத்ரிம்சத் கலா நியாசங்களைச் செய்து, வ்யோமவ்யாபிபத மந்திரங்களை நியாசஞ்செய்து, மூலமந்திரத்தால் ஈசுவரனை ஆவாஹனம் செய்ய வேண்டும்.

பிறகு, ஈசுவரருக்கு பாத்யம் அர்க்யம் ஆசமனங்களைச் சமர்ப்பித்து, பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் இளநீர் என்னும் இவற்ருல்அபிஷேகம்செய்யவேண்டும். அபிஷேகதிரவியங்களை (நெல்லி மா முதலியவற்றை) பிசைந்து ஈசுவரரது திரு மேனியிற் பூசவேண்டும். பின்னர் தைலத்தாலும் நெய்யாலும் அபிஷேகம் செய்து சுந்தோதகம் சுத்தோதகம் இவற்ருல் அபிஷேகம் செய்ய வேண்டும். பின்னர் சந்தனம் புஷ்பம் இவற்றைச் சாத்தி தூபதீபங்களைச் சமர்ப்பிக்க வேண்டும். பிறகு கும்பத்தை எடுத்துக்கொண்டு பிராஸாதத்தைப் பிரதக்ஷிணம் செய்து கும்பத்தில் இருக்கும் ஈசுவரனை லிங்க மத்தியில் சேர்க்கவேண்டும். வர்த்தனியின் பீஜாக்ஷரத்தை உச்சரித்து வர்த்தனி தீர்த்தத்தைப்பீடத்தின் நடுவில் அபிஷேகம் செய்ய வேண்டும். கும்பஜலத்தாலேயே பரமேசு வரருக்கு அபிஷேகம் செய்யவேண்டும். அக்காலத்தில் சமகம் புருஷஸூக்தம் ஸ்கந்தஸூக்தம் ஜபிக்கவேண்டும். மற்ற மந்திரங்களை ஜபிக்கலாகாது. பின்னர் லிங்கம் பீடம் இவற்றை உலர்ந்த வஸ்திரத்தால் திருவொற்ருடைசாத்தி எல்லா வஸ்திரத்தாலும் சமஸ்தமான சந்தனம் முதலிய பூச்சாலும் அலங்கரித்து, ஹாரம் கேயூரம் மாலை இவற்றை இருதய மந்திரத்தால் சாத்த வேண்டும். பின்னர் தூப தீபம் சமர்ப்பித்து, சுத்தான்னம் பாயஸான்னம் அபூபம் வாழைப் பழம் தேங்காய் கரும்பு இன்னும் மற்றப் பக்ஷணங்கள் ஆகிய நைவேத்யங்களை இருதய மந்திரத்தாலே சமர்ப்பிக்க வேண்டும். பின்னர் பானகம் சமர்ப்பித்து, தாம்பூலம் நிவே தனம் செய்ய வேண்டும். பிறகு பரிவாரங்களுக்குப் பலி

கொடுத்து நித்யஹோமம் செய்து நித்யோத்ஸவஞ் செய்து தூபம் தீபம் ஆசமனம் சமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு, பஸ்பத்தால் ரக்ஷை சத்ரம் சாமரங்கள் சமர்ப்பித்து நான்கு வேதங்களையும் புராணம் கானம் இவற்றையும் விக்ஞாபனம் செய்து ஸ்தோத்ரம் செய்து, சமஸ்தமான வாத்யம் நர்த்தனம் இவற்றால் ஈசுவரரைப் பூசை செய்யவேண்டும். இவ்வாறு செய்யப்படும் பூசை எல்லாச் சம்பத்துக்களையும் சுகத்தையும் தரும். மறதியால் பூசை செய்யாதிருப்பின் ராஜா தேசம் இவற்றிற்குத் தோஷம் உண்டாகும். ஆகையால் எவ்வாற்றானும் பிரதோஷ பூசை செய்யவேண்டும். பிரதோஷ காலத்தில் ருத்ரரை அருச்சித்தால் ருத்ரலோகத்தை அடைவான். ஆடை மோதிரம் இவற்றால் ஆசாரியரை உபசரிக்க வேண்டும். பத்தர் பரிசாரகர் இவர்கட்கும் உரியவாறு தக்ஷிணை சமர்ப்பிக்கவேண்டும். பிரதோஷகால பூஜை எல்லாப் பாவங்களையும் போக்கும்.

**160-வது படலமான பிரதோஷ பூஜை முற்றுப்பெற்றது**

உத்தரகாரணாகமத்தில் பிரதோஷ பூஜாவிதிப்படலத்தில் பரம சிவனுக்குப் பூசைசெய்தபிறகு அம்பாளுக்குப் பூசை செய்யவேண்டுமென்றும், பிறகு நித்யோத்ஸவம்செய்து விருஷபத்தில் சுவாமியை ஆரோகணித்து ஆலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து மண்டபத்திற்குள் பிரவேசிக்க வேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கின்றது.



சுபமஸ்து!

